# கல்கி

KALKI 8.8.2004 ரூ.6.00



மயானத் தீயில் மாதிரி கிராமம்!

-சொத்தும் கொடுத்த குழந்தைகள்!



## ரஜினி மகளுடன் என்ன தகராறு?

-'மன்மதன்' சிம்பு மனத்திலிருந்து...!



## சோனியாவின் அலமாரி!



# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.



மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.



உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

**முதியோர் சேவை பெரியது!**

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

### Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700,
2475 7777 2475 5799,
e-mail:svhome@vsnl.net

உள்ளே...



"கமல்னா கால்ஷீட் ரெடி"
-மஹதியுடன் குஜு குஜு சாட்
48,49



கல்கி
8.8.2004

# இவர் வைத்த மார்க்!

✉ கடைசிப் பக்கத்திலிருந்து 'கல்கி' படிக்கும் பழக்கமுடைய எனக்கு ஆண்டாள் தரிசனம் ஆனந்தம் அளித்தது.
திருச்சி, இந்திரா பத்மநாபன்

✉ "வாழ்க்கையில் வெற்றி பெறுவது முக்கியம்தான். ஆனால், மற்றொருவர் வெற்றி பெற உதவுவதற்காக, நமது முன்னேற்றத்தின் வேகத்தைக் குறைத்துக் கொள்வது அதைவிட முக்கியமானது. அர்த்தமுள்ளதும் கூட" என்று 'ஆசிரியர் பக்க'த்தில், சொல்லப்பட்டுள்ள வரிகள், 'மற்றவர்களின் வெற்றிக்கு உதவுவதும் நமக்கு ஒரு விதமான வெற்றியே' என்பதை உணர்த்திட்ட வைர வரிகள்.
வேலூர், வே.த. கதிர்வேல்




✉ 'பஞ்சாப் அரசு ஒப்பந்த மீறல் நிகழ்த்தும்போது பாராளுமன்றமே கிடுகிடுத்துப் போகிறது. ஆனால் அதே தவறை கர்நாடக அரசு செய்கிறபோது கேட்பாரே இல்லை!' என்கிற தலையங்க வரிகள் மிகவும் அர்த்தமுள்ளவை! அழகானவை! தமிழ்நாட்டுக்கு பத்து மந்திரிகள் மத்தியில் இருந்தபோதும் சரி, இப்போது பன்னிரண்டு மந்திரிகள் இருக்கும் போதும் சரி, அவர்கள் மௌனம் தானே காத்தார்கள்! காக்கிறார்கள்!
தஞ்சை, எம். சிவகுருநாதன்

✉ தமிழ்க் கலாசாரத்தையே சீர் குலைத்து, குட்டிச் சுவராக்கும் 'நியூ' படத்திற்கு, 'கல்கி' தனக்கே உரித்தான பாணியில் 'ஃபெயில் மார்க்' போட்டுள்ளதை மனம் குளிரப் பாராட்டுகின்றேன்!
கும்பகோணம்,
கே.என். பாலகிருஷ்ணன்

✉ 'நியூ' படத்துக்கு ஒரு பக்கம் விமர்சனம் எழுதியதே வேஸ்ட். காலியாக இருந்தால் கணக்கு எழுதவாவது உதவி இருக்கும்.
பெங்களூர், கே.விஸ்வநாத்

✉ பர்வதவர்த்தினியின் 'கேள், கேட்காதே' கிராமியச் சிறுகதையில், பந்த பாசம் பற்றி தெளிவாகக் கூறிய விதம் சிறப்பு!
காமநாயக்கன்பாளையம்,
மா. மோகனராசன்

✉ ஆபாசத்தைப் பாமர ஜனங்களின் தலையில் சுமத்தித் தப்பிக்க முயலும் சினிமாத் தயாரிப்பாளர்களுக்கும், இயக்குநர்களுக்கும், நடிகர், நடிகைகளுக்கும், அமரர் கல்கியின் 'அபூர்வ சகோதரர்கள்' படம் பற்றிய திரை விமர்சனம், நல்ல பாடமாக அமையும் என்று நம்புகிறேன். கல்கியின் அந்த விமர்சனம் 55 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டாலும், இன்றும் அக்கருத்து நூற்றுக்கு நூறு உண்மை.
எலந்தங்குடி, எச்.முகமது சமீர்

✉ பன்னிரண்டு ராசிகளுக்கும் பொருத்தமான ராசி பலன்களை படித்துப் பார்த்ததில், மிகவும் சுவையாக இருந்தன.
திருமாண்டக்கவுண்டன்பாளையம்,
வி.சோமசுந்தரம்

✉ தமிழ் நாட்டின் பண்பாட்டையும் கலாசாரத்தையும் மனத்தில் சுமந்த ஐம்பத்தைந்து வயதைக்

கடந்த, ரகுராமன் எழுதும் கடித வடிவிலான 'காலம்' சிறுகதை, வெகு அற்புதம்!
போடிநாயக்கனூர், எஸ்.எம்.பாலசுப்ரமணியன்

✉ 'ஸ்டாம்ப்பை விற்று மாசம் ரூ.6000/- வரை சம்பாதிக்கிறேன்' என்ற வரிகளைப் படித்ததும் சிரிப்பில் வயிற்று வலியே வந்துவிட்டது. மயங்கி விழுந்து விட்ட உங்கள் நிருபர் பாஸ்வை, எப்படியாவது எழுப்பி அடுத்த வாரமும் வில்லங்கமான பேட்டி காணச் சொல்லுங்கள். படு சுவாரசியமாக உள்ளது.
மயிலாடுதுறை, க. இராஜசேகரன்

✉ மூட்டு மாற்று அறுவை பற்றிய செய்தியில், எளிதில் எலும்பு நொறுங்கி விடும் தன்மைக்கு Osteoporosis என்பதற்கு பதிலாக எழுத்துப் பிழை ஏற்பட்டுள்ளது.
நீலங்கரை, சிவ. அருள்

✉ 'தராசு' பதில்கள் பகுதியில் சு.மோகன் சிதம்பரம் என்ற வாசகரின் கேள்விக்கு எழுதப்பட்ட பதில் கண்டேன். சிறப்பு இலக்குப் படையினரின் முகாம்கள் பொருத்தமட்டில் சிறந்த குடிநீர் வசதி எக்குறையுமின்றி வழங்கப்படுகிறது. தேடுதல் வேட்டைக்கு வனப்பகுதியில் செல்லும்போது அங்கு பல நாட்கள் தங்கியிருக்கையில் அவர்கட்கு தேவையான குடிநீரை தங்களுடன் கொண்டு செல்ல இயலாது (பத்து நாட்கள் என்றால் குடிநீர் மட்டும் 20 லிட்டர் (20 கிலோ எடை). சில நேரங்களில் குடிநீரைக் காய்ச்ச நெருப்பைப் பயன்படுத்தினால் எதிரிக்கு நம் இருப்பிடம் வெளிப்பட்டுவிடும் என்பதால், விலங்குகள் பயன்படுத்திய நீரை அப்படியே பருகவும் நேர்கிறது. இதனால் லெப்டோஸ்பைரோசிஸ் போன்ற காய்ச்சல் வந்துவிடுகிறது. எனவே, காட்டைவிட்டு வெளியே வந்தவுடன் தொடர்ந்து மருத்துவப் பரிசோதனைகள் நடத்தப்பட்டு வருகின்றன. அதுமட்டுமன்றி தமிழக அரசு சிறப்பு இலக்குப் படை வீரர்களுக்கு, மருந்துகள் வாங்க ரூபாய் ஐந்து லட்சம் தனியாக ஒதுக்கப்பட்டு, சிறந்த மருந்துகள் வழங்கப்படுகின்றன.
- இ. விஜய்குமார், கூடுதல் காவல்துறை இயக்குநர், சிறப்பு இலக்குப் படை, ஈரோடு



கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

## போய்யா கசமாலம்!

சென்னையில் அதிகமாக புழக்கத்தில் உள்ள ஒரு சொல் 'கசமாலம்'. ஒருவனைத் தூற்றுதலாகப் பேசுவதற்காகப் பயன்படும் அந்தச் சொல் - வடமொழி வார்த்தை. 'கச்மலம்' என்றால் 'எண்ணெய்ப் பிசுக்குள்ள தூய்மை கெட்ட' என்று பொருள். உபவீதம் (பூணூல்) மாற்றும் போது, பழைய உபவீதத்தைக் கழற்றும் போது சொல்லப்படும் 'கச்மலதூஷிதம்', என்பதற்கு, எண்ணெய்ப் பிசுக்கு ஏறிய தூய்மை கெட்டது என்பது பொருள். அதைத் தான் 'கச்மாலம்' என்கிறார்கள்.

- ஸ்ரீ கண்ணன் சுவாமிகள் உபன்யாசத்திலிருந்து:
தேதியூர் பாலு



## ஸ்ரீ அபீஷ்ட வரத மகா கணபதி

இறைவனின் திருக்கயிலைக் காட்சியைக் காணவேண்டும் என்று கயிலை மலைக்குப் புறப்பட்டார் அப்பர் பெருமான். இரவு - பகல், காடு - மலை, வெயில் - குளிர் எனப் பாராமல் நடந்த அப்பர் பெருமானின் பாதங்கள் வீங்கி, விரல்கள் புண்ணாகி, தவழ்ந்தும், புரண்டும், பயணத்தை

# நாலு,

## மரம் சொல்லும் பாடம்!

மரத்திற்கு நாம் தந்தது ஒரு விதை மட்டுமே! ஆனால் மரமோ நமக்கு சுவையான பல பழங்களைத் தருகின்றது. நன்றியறிவை மனிதன் மரத்திடமிருந்து கற்க வேண்டும்.

தனக்கு ஓர் உதவியும் செய்யாத வழிப்போக்கர்களுக்கும், ஆடு மாடுகளுக்கும் மரம் நிழல் தந்து உதவுகிறது. நாம் நமக்கு உதவியவர்களைக் கூட மறந்து விடுகிறோம்.

- ஸ்ரீ சத்யசாயிபாபா
தகவல் : பா. குணா



## நாற்காலிக் கனவுகள்

நடிகர்களாக இருந்து அரசியலில் ஈடுபட்டு, வெற்றி பெற்றவர்கள் என்.டி.ஆர், எம்.ஜி.ஆர். மட்டுமே!

இவர்கள் வெற்றி பெற அவர்களின் தனித்தன்மையோடு, பல்வேறு சந்தர்ப்ப சூழ்நிலைகளும் உறுதுணையாய் நின்றன.

யதார்த்த நிலையை உணராமல் வேடிக்கை பார்க்கத் திரளும் கூட்டம், அக்கூட்டத்தின் இடையே ரசிகர்கள் சிலர் எழுப்பும் 'வருங்கால முதல்வரே வாழ்க' என்ற கோஷங்களால் கவரப்பட்டு, தற்கால நடிகர்கள் சிலர் அரசியலில் ஈடுபட ஆர்வம் காட்டுகின்றனர். அரசியல்வாதிகள் சிலரும், நடிகர்களை வேடிக்கைப் பார்க்க திரளும் கூட்டத்தைக் கண்டு மிரண்டு, நடிகர்களின் செல்வாக்கைக் குறைக்கும் எண்ணத்தில் அவர்களிடம் குற்றங் கண்டு விமர்சிக்கும் போக்கைக் கையாளுகின்றனர்.

அரசியல்வாதிகளுக்கு சவால் விடும்

விடாமல் தொடர்ந்தார். அப்பர் பெருமானின் மன உறுதியை மெச்சிய இறைவன், பனிமலையிலுள்ள பொய்கையில் மூழ்கி எழுமாறு அசரீரியாகக் கூறுகிறார். அந்தப் பொய்கையில் மூழ்கிய அப்பர், எழுந்ததோ திருவையாறு திருத்தலத்துத் திருக்குளத்தில்! இறைவனும் திருக்கயிலைக் காட்சியைக் காட்டி அருள் செய்கிறார். 'அப்பர் குளம்' என்று அழைக்கப்பட்ட அத்திருக்குளம் காலப் போக்கில் மருவி, 'உப்பங்குளம்'என்று அழைக்கப்படுகிறது.

இத் திருக்குளக் கரையில் தான் ஸ்ரீ அபீஷ்ட வரத மகா கணபதி என்கிற காரிய சித்தி விநாயகர் கோவில் இருக்கிறது. கோவிலுக்குள் அப்பர் பெருமானுக்குத் தனிச் சன்னதியும், அவர் திருக்கயிலைக் காட்சி கண்டதுக் சித்திரமாகவும் வரையப்பட்டிருக்கிறது. சமுத்திர ராஜனுக்குத் திருமணம் செய்து வைத்த இந்த விநாயகரை வழிபட்டால், எண்ணங்கள் அனைத்தும் எளிதாக நிறைவேறும் என்பது நம்பிக்கை.

- குரு,
சென்னை-33



# அஞ்சு விஷயம்

முன்னர், திரைப்பட நடிகர்கள் தங்கள் சுயபலத்தை உணர வேண்டும். சில மாணவர்களுக்கு இலவச நோட்டுப்புத்தகம், ஏழை ஜோடிகளுக்கு இலவசமாய்த் திருமணம் செய்விப்பது, தையல் இயந்திரம் வழங்குவது போன்ற சில இலவசங்களை அள்ளி விடுவதன் மூலம் மட்டுமே மக்களின் அபிமானத்தைப் பெற்றுவிட முடியாது. மேலும் வெறுமனே, திரைப்படக் கதாபாத்திரங்களையும், அவற்றின் சாகசங்களையும் நம்பி வாக்களிக்கும் மன நிலையில் தற்போதைய பெரும்பான்மையான மக்கள் இல்லை.

நல்ல கதாபாத்திரங்கள் ஏற்று நடித்து, தன்னலம் கருதாமல் மக்கள் சேவை செய்தால், அரசியலில் நடிகர்கள் வெற்றி பெறலாம்.

- இரா. சாந்தகுமாரி,
சென்னை - 2

## ஆசிரியர் பக்கம்



# 'டெய்லர்மேட்' பாப்பாக்கள்!

இன்று செயற்கைக் கருத்தரிப்பு மையங்கள் மிகவும் சகஜமாகி விட்டன. பஸ் பயணங்களின் போது கடக்கும் சிற்றூர்களில் கூட, அவற்றின் அறிவிப்புப் பலகைகள், கவர்ச்சிகரமான விளம்பர வாசகங்களுடன் கண்ணில் படுகின்றன. மகப்பேறின்மையை, இயற்கையின் சமன்பாடு விதியாக ஏற்கும் பக்குவம், எல்லோருக்கும் கைவருவதில்லை. ஆனால் மருத்துவத்தின் அதிகார எல்லை எது? அதை யார் வகுப்பது...?

பிரிட்டனில் வெளியாகும் டெய்லி டெலிகிராஃப் நாளிதழில் ஒரு செய்தி :

அந்த நாட்டில் செயற்கைக் கருத்தரிப்பு ஆய்வு மற்றும் சிகிச்சை முறைகளைக் கண்காணிக்க ஓர் அமைப்பு இருக்கிறது. செயற்கை முறையில் கருவூட்டப்பட்டு உருவாகும் கருக்களைப் பரிசோதித்து, அவற்றிலிருந்து பிறக்கக்கூடிய குழந்தைகளுக்கு ஏதேனும் பிறவிக் குறைபாடு இருக்குமா என்று கண்டறிகிற முறையை, இந்தக் கண்காணிப்பு அமைப்பு அனுமதித்து வந்தது. சமீபகாலமாக, இவ்வமைப்பு கட்டுப்பாடுகளைத் தளர்த்தலாமா என்று சிந்தித்து வருகிறது. இனி செயற்கைக் கருவளர்ச்சியைப் பரிசோதிக்கும் மருத்துவ விஞ்ஞானிகள், அவற்றின் நிறம், தோற்றம், அங்க அமைப்புகளையும் கண்டறிந்து சொல்வதற்கு அனுமதி வழங்கலாமா என்று யோசித்து வருகிறது. இந்த அனுமதி மட்டும் வழங்கப்பட்டால், பிறக்கப் போகிற குழந்தையின் முகத்தோற்றம், நிறம், முடி, கண் என அனைத்தையும் இஷ்டத்துக்கு மாற்றியமைத்துக் கொள்ளவும் வழி பிறக்கிறதாம்! 'டெய்லர் மேட் பேபீஸ்' என்று இக் குழந்தைகளைக் குறிப்பிடுகிறார்கள்!

டெஸ்ட் ட்யூப் குழந்தைகளில் ஆரம்பித்து, டெய்லர் மேட் குழந்தைகள் நோக்கிச் சென்று கொண்டிருக்கும் இந்த ஆராய்ச்சி, மருத்துவ ஆராய்ச்சி உலகின் சாதனை உணர்வை வேண்டுமானால் விசிறி விடலாம். ஆனால் மனித குலத்தின் உயர்வுக்கு சர்வ நிச்சயமாக அது உதவாது.

பல்லாயிரமாண்டுக் காலமாக பரிணாம வளர்ச்சியுற்று, குடும்ப அமைப்பு என்னும் உணர்வுத் தளத்தில், மனிதகுலம் அடைந்திருக்கும் மனவளம் அளவிட முடியாதது; விவரிக்க முடியாதது. நிபந்தனைகளற்ற தாய்சேய் பந்தம் என்பது (தந்தையின் பந்தத்தையும் சேர்த்துதான்) அதன் அஸ்திவாரம். சேயின் தோற்றம், குணம், நிறம் என்று ஒவ்வொன்றுக்கும் விலைகொடுத்துத் தேர்ந்தெடுப்பதென்பது, இந்த அஸ்திவாரத்தைத் தாக்குகிற அன்பற்ற வக்கிரச் செயல்.

டெய்லர்மேட் சிசுக்கள் அவ்வளவு விரைவில் சாத்தியமில்லை என்று சமாதானப்படுத்திக் கொள்வது அறியாமை. தமிழ்நாட்டின் சிற்றூர்களில் டெஸ்ட் டியூப் குழந்தைப்பேறுக்கான மருத்துவ மனைகள் முளைக்கும் என்று, கால் நூற்றாண்டுக்கு முன் நாம் கனவு கண்டிருப்போமா...?

# 'மன்மதன்' சிம்பு மனத்திலிருந்து...!

மேகத்துக்கு ஒட்டடை அடித்து விடும் அகேலா கிரேன் உயரத்துக்கு வானளாவிய அதிர்ஷ்டம்!

"உண்மையைச் சொல்ல வேண்டும் என்றால், என்னைச் சுற்றி இடையறாது மழை பொழிந்து கொண்டிருக்கிறது" என கவித்துவக் குறும்போடு பேசும் சிம்புதான் அந்த லக்கி ஸ்டார். தன்னை விடச் சற்றே வயதில் முதிர்ந்த ஜோதிகாவை, தமக்கு ஜோடியாக எப்படி நடிக்கச் சம்மதிக்க வைத்தார் என்று கோடம்பாக்கம் விழி விரிந்து பார்த்துக் கொண்டிருக்கும்போதே, பார்த்திபன் படத்தில் நடிக்க மறுத்த கிரிக்கெட் கவிதை மந்த்ராபேடியை மடக்கிக் கொண்டு வந்து விட்டார். கூடுதலாக, பாலிவுட்டை விரைவில் கலக்குவார் என்பதாக ஷீபிலிம்ஃபேர் ஆருடம் சொல்லியிருக்கும் யானா குப்தா. ஒரே படத்தில் மூன்று எழிலார்ந்த தேவதைகளின் இனிய தோழமை கிடைப்பதென்றால் கும்மாளவா?

"எல்லாம் எனது கதையும், திரைக்கதையும் செய்த மாயம்! காய்களை உருட்டி எப்போதுமே ஆடத்தெரியாது எனக்கு தாயம்!" என்று தந்தை ஸ்டைலில் எப்போதாவது அடுக்கு மொழிகளை உதிர்க்கும் சிம்பு, இத்தனை சின்ன வயதில் மன்மதன் படத்துக்கு கதை, திரைக்கதை எழுதியிருக்கிறார்.

"கதை விவாதத்தின் போது, இந்தப் பாத்திரத்தை ஜோதிகா போன்ற ஒருவர் செய்தால் அற்புதமாகப் பொருந்தும் என்று பேசிக் கொண்டோம். பிறகு அவரிடமே கேட்டு விட்டால் என்ன என்ற எண்ணம் தோன்றவே, கதை சொன்னேன். கேட்டு விட்டு கைகுலுக்கிப் பாராட்டியதோடு, உடனே கால்ஷீட்டும் கொடுத்தார். பிறகு, கதையில் ஓர் இளம் உளவியல் மருத்துவர் பாத்திரம். இதை மந்த்ராபேடி செய்தால் எப்படியிருக்கும் என்று கேட்டுக் கொண்டோம். அவருக்குத் தமிழில் நடிக்க விருப்பம் இருக்கிறதா என அவரிடமே கேட்டு விடலாம் என்று மும்பைக்குப் பறந்து போய், அவரிடமும் கதை சொன்னேன். அவரும், "கங்கிராட்ஸ்! யூ ஹாவ் கன்சிவ்ட் எ நாவல் கான்செப்ட்" என்று பாராட்டி நடிக்க ஒப்புக் கொண்டார். யானா குப்தாவோ, ஒரு கனவுப் பாடலில் என்னோடு கலக்குகிறார்" என்று குதூகலிக்கும்

சிம்புவை, யார் தந்த தைரியத்தில் கதை, திரைக்கதை என்று இறங்கி இருக்கிறீர்கள்? எனக் கோபமூட்டினால், கொழு கொழு பேபியாகச் சிரிக்கிறார்.

"சிறு வயது முதலே அப்பாவிடம் சினிமா கற்றுக் கொண்டிருக்கிறேன். அவரது ஒவ்வொரு கதை விவாதத்திலும் எனக்கு அனுமதி உண்டு. அப்பாவின் திரைக்கதைகளில் மாற்றங்கள் செய்த அனுபவமும் உண்டு. இவற்றுக்கு அப்பால், என் திறமை மீது எனக்கு அப்படியொரு நம்பிக்கை'' என்று தக்கவைத்துக் கொள்கிறார். மன்மதனும், தனுஷ் வழியைப் பின்பற்றுகிறவன் தானோ?

"சாமி சத்தியமாக இல்லை. இப்போது தமிழ் சினிமாவை ஆபாசம் மிகுந்த அடலசண்ட் பாலியல் கதைகள் தலை குனிய வைத்திருக்கின்றன. அது என்து பாதை இல்லை. அப்படியொரு மிக மலினமான குறுக்கு வழியில் ஹீரோவாக வேண்டிய அவசியம் எனக்கில்லை.

# ரஜினி மகளுடன் என்ன தகராறு?

சொல்லும் சிம்பு, "மன்மதன் மிகவும் யதார்த்தமான கதை. க்ளைமாக்ஸிலும் கூட 'சினிமாத்தனம் இருக்காது'' என்கிறார்.

படத்தின் தலைப்போ மன்மதன். நிறைய நடிகைகள். இதைக் கவனிக்கும் போது ஒன்று புரிகிறது. பாலியல் சாயம் பூசிய ஆபாசக் கதைகளின் வழியாகத் தான் தனுஷ் தமது வெற்றியைத்-



கொல்லைப்புறம் வழியாக நுழைந்து வெற்றி பெற நினைப்பவர்கள், தகுதிக் குறைவானவர்களாக இருக்கலாம்.

அத்தகைய வெற்றி தற்காலிக வெற்றி மட்டும்தான். அரிச்சுவடியே எனக்கு சினிமாதான். அப்பா என்னைத் தகுதியும், திறமையும் மிகுந்தவனாக உருவாக்கியிருக்கிறார். அதற்குரிய பலன் கிடைக்கும்'' என கொஞ்சமாய் உஷ்ணப்படுகிறார்.

மீசையில்லாத மொழுமொழு சிம்புவைப் பார்க்கிற போது, ஓர் இளம் பாலிவுட் நாயகன் போல தென்படுகிறார். இவருக்கு இந்திப் படங்களில் நடிக்கும் ஆர்வமிருக்கிறதா?

'''மன்மதன்' படத்துக்கான ஃபோட்டோ செஷன் முழுவதும் மும்பையில்தான் நடந்தது. புகைப்படங்களைப் பார்த்து விட்டு அங்கேயே கேட்டார்கள். இப்போதைக்கு மறுத்து விட்டேன். பாலிவுட்டில் நடிப்பது மட்டுமல்ல, வெற்றிப் படங்களை இயக்க வேண்டும் என்றும் லட்சியம் வைத்திருக்கிறேன்'' என்று கண்களில் தன்னம்பிக்கை மின்னப் பேசும் சிம்பு, இப்போது 'தொட்டி ஜெயா' படத்துக்காக தாடி வளர்த்து, உடல் எடையை உயர்த்திக் கொண்டிருக்கிறார். எல்லாம் ஸ்டைலான ஒரு ஸ்டூடண்ட் ரவுடி பாத்திரத்துக்காக. அவரிடம் 'பை' சொல்லித் திரும்பும் முன், "ஐஸ்வர்யா - சிம்பு நட்பில் விரிசல் என்ற செய்தி நிஜம்தானோ?" என்றதும், சில வினாடிகள் மௌனத்திற்குப் பிறகு சொன்னார்.

"பள்ளியில் ஒன்றாகப் படித்த போது, பேசவும் பழகவும், நிறைய நேரமிருந்தது. பிறந்த நாள் விழா என்றால் நான் அவரது வீட்டுக்குச் செல்வேன். எங்கள் வீட்டு குடும்ப விழா என்றால் அவர் வருவார். எங்கள் நட்பு இன்றும் தூய்மையாகத் தொடர்கிறது. ஆனால் இப்போது நான் பிஸியான நடிகனாகி விட்டதால், முன்பு போல் பேச முடியவில்லை. எப்போதாவது தொலைபேசியில் பேசிக் கொள்கிறோம். மற்றபடி ஐஸ்வர்யா நட்புக்கு நல்ல இலக்கணம்."

**- ஜெய்**

அட்டை, படங்கள் : **'மன்மதன்'** படத்திலிருந்து



உ

# ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத
# ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்
# ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி - 609 501.

✆ : 04364 273900

**லட்சார்ச்சனை ஆவணி கடை ஞாயிறு மற்றும்**
**ருத்ராபிஷேகப் பெருவிழா 11.9.2004 - 12.09.2004**
**சனி, ஞாயிறு ஆகிய இரு தினங்கள்**

அன்புடையீர்,

நிகழும் தாரண வருஷம் ஆவணி மாதம் 26ஆம் தேதி (11.09.2004) சனிக்கிழமை பூச நட்சத்திரமும், துவாதசி திதியும் கூடிய நன்னாள் துவங்கி **ஸ்ரீ ஸற்குணேச்வரர் உடனுறை ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ அம்பிகைக்கு** லட்சார்ச்சனையும், மறுநாள் காலை கடை ஞாயிறு தீர்த்தப் பெருவிழாவும், மாலை ருத்ராபிஷேகத்துடன் கூடிய சிறப்புப் பிரதோஷ வழிபாடும் குருவருள், இறையருள் துணை கொண்டு நடைபெற இருக்கின்றன.

யமதீர்த்தமென்று வழங்கப்படும் திருக்குளத்தில் முறையாக ஸங்கல்பம் செய்து கொண்டு நீராடுவதும், முன்னோர்களையும் (பித்ருக்களையும்), தேவதைகளையும் குறித்து வழிபாடு செய்வதும் பெரும் பயனளிக்கும், தனி நபர் வாழ்விலும், குடும்பங்களிலும் உள்ள பல தோஷங்களை நீக்கும்.

**இரு தினங்களும் நடைபெறும் லட்சார்ச்சனையிலும், ஆவணி கடைஞாயிறு (12.09.2004) காலை தீர்த்தவாரியிலும், அன்று மாலை நடைபெறும் பிரதோஷ சிறப்பு வழிபாட்டிலும் இறையன்பர்கள் அனைவரும் வழக்கம் போல் ஆர்வத்துடன் பங்கு கொண்டு பேரருள் பெற வேண்டுகிறோம்.**

*என்றும் இறைபணியில்*

*Dr. V. கிருஷ்ணமூர்த்தி*
*பரம்பரை அறங்காவலர்*

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா** (Regd).
32/18, டபீர் புதுத்தெரு, கும்பகோணம் - 612 001.
போன்: 04364 / 273940 மற்றும் **கிராமவாசிகள்**

"ஆவணி கடை ஞாயிறு தீர்த்தவாரிக்கு வரும் பக்தர்களின் வசதிக்காக கும்பகோணம், காசிராமன் தெரு, வேதவிநாயகர் கோயிலிலிருந்து வேன்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. ஞாயிறு (12.09.2004) விடியற்காலை மணி 4.30 - 5.00க்குள் புறப்படுகின்றன. ஒருவருக்குச் சென்று வர கட்டணம் ரூ. 30/- புனித நீராட விரும்புபவர்கள் கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில், ஏதேனும் ஒன்றில் முன்னதாகவே பதிவு செய்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

| எண் | நிகழ்ச்சி | கட்டணம் | பெறப்படும் பயன் |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ கணபதி ஹோமம் 11.9.2004 காலை 8.00 மணி முதல் 9.00 வரை | ரூ. 50/- | தடைகள் நீங்கும், எடுத்த காரியத்தில் வெற்றி. |
| 2. | லட்சார்ச்சனை 11.9.2004 முதல் கட்டம் ஆரம்பம் காலை 10.00 மணி, பூர்த்தி 12.30. அன்று பிற்பகல் 4.00 மணிக்கு இரண்டாம் கட்டம் ஆரம்பம். இரவு 8.00 மணிக்கு பூர்த்தி. 12.9.2004 காலை 8.30 மணிக்கு மூன்றாவது கட்டம் ஆரம்பம். பூர்த்தி பகல் 12.30 மணிக்கு | ரூ. 100/- | வாழ்வில் இடர் நீங்கி நலம் பெருக. |
| 3. | ஸ்ரீ ருத்ரஜபம், அபிஷேகம் ஸங்கல்பம் 12.9.2004 அன்று 3மணிக்கு ஆரம்பம். மாலை 6 மணிக்கு பூர்த்தி. மாலை 6.30 மகா தீபாராதனை. | ரூ. 1000/- | இன்னல் நீங்க, செல்வம் பெருக |
| 4. | சிறப்பு அபிஷேகம் | ரூ. 50/- | சுபிட்சம், மங்கலம் பெருக |

குறிப்பு: மேலே கொடுக்கப்பட்டுள்ள நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள விரும்பும் அன்பர்கள் அவற்றிற்கான துகையை "ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா" என்ற பெயருக்கு மணியார்டர் மூலமோ அல்லது வரைவுக்காசோலை (D.D) மூலமோ கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில் ஏதேனும் ஒன்றிற்கு அனுப்பக் கோருகிறோம்.

**G. குஞ்சிதபாதம், FCA.,** G. நடேசன் & கோ. டபீர் மேலத்தெரு, கும்பகோணம்-612 001
போன்: 0435 2420047

**G. கண்ணன்,** D/127-A, ராஜமன்னார் சாலை, கே.கே.நகர், சென்னை -78. போன்: 044-24836495

**V.L. நாராயண சாஸ்திரிகள்,** 25/1 சுப்பாரெட்டித் தெரு, எஸ்.என்.ஆர். கன்ஸ்ட்ரக்ஷன்ஸ், மேற்கு மாம்பலம், சென்னை - 600 033. போன்: 044-24897125

**R. வைத்தியநாதன்,** மேலாளர், இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, பிளாட் நெ. 4, கதவு எண் 12, 29வது தெரு, தில்லை கங்கா நகர், நங்கநல்லூர், சென்னை - 600 061. போன்: 044 - 22333361

# ஏழு கடல் தாண்டுவாரா?

இந்தியாவுக்கு ஒலிம்பிக் பதக்கம் கிடைக்குமென்றால், அது இவரால்தான் என அடையாளம் காட்டப்படுபவர்களில் ஒருவர், அஞ்சு ஜார்ஜ். ஆசியப் போட்டிகளில் முதலிடம் பெற்றவர். பாரீஸில் சென்ற ஆண்டு நடைபெற்ற உலக சாம்பியன்ஷிப்பில் மூன்றாவது இடத்தைக் கைப்பற்றி, பாரதத்திற்குப் பெருமை சேர்த்தவர்.

சமீபத்தில் கனடா, செக் குடியரசு ஆகியவற்றில் நடைபெற்ற உலக நீளத்தாண்டுதல் போட்டிகளில், ஐந்தாவது மற்றும் ஆறாவது இடத்தைப் பிடித்திருக்கிறார்.

பிரபல பிரெஞ்சு வீராங்கனை யூனிஸ் பார்பர், தொடைப் பகுதியில் ஏற்பட்ட காயத்தின் காரணமாகப் பயிற்சியை நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஒரு சாதகமான அம்சம். என்றாலும், ரஷ்ய வீராங்கனைகள் கடும் போட்டி அளிக்க வாய்ப்பு உண்டு.

1928 ஒலிம்பிக்ஸில்தான் பெண்களுக்கான நீளத் தாண்டும் போட்டிகள் முதன் முறையாக நடத்தப்பட்டன. தங்கம் வென்ற ஜப்பானிய வீராங்கனை, கினு ஹிடோமி அப்போது தாண்டிய தூரம் 5.98 மீட்டர். ஆனால் ஏழு மீட்டர் தூரத்தைத் தாண்டினால்தான் பதக்கம் பெற வாய்ப்பு உண்டு என்பது இன்றைய நிலை. அதற்கு அஞ்சு தம்முடைய உச்சபட்ச சாதனையைவிட, மேலும் சில சென்டி மீட்டர்கள் அதிகமாகத் தாண்ட வேண்டும். அப்படித் தாண்டி, பதக்கத்தைப் வென்று சாதனை படைப்பாரா அஞ்சு?

\- குல்ஹூ



## புறக்கணிப்பு பாலிடிக்ஸ்!

விவாதங்களுக்கு வாய்ப்பே அளிக்காமல், சட்டசபையை ஆளுங்கட்சியின் ஏகபோக உரிமை ஸ்தானமாக்கிக் கொள்ள முயன்று வருகிறார் தமிழக முதல்வர் ஜெயலலிதா.

தமிழக எதிர்கட்சியினர், பட்ஜெட் மீதான விவாதங்களுக்கும், மானியக் கோரிக்கைகள் குறித்த விவாதங்களுக்கும் அவகாசமே தரப்படவில்லையே என்ற தார்மிகக் கோபத்தில், அவையைப் புறக்கணிக்கின்றனர்.

மத்திய அரசிலோ நேர் எதிரான காரியம் நடக்கிறது. பிரதமர் மன்மோகன் சிங், பிரச்னைகளை வரிசைப்படுத்தி, நாடாளுமன்றத்தில் அவற்றை விவாதிக்க எதிர்கட்சியினரை அழைக்கிறார். கூட்டு பார்லிமெண்டரி குழுக்களை நிறுவி, அவற்றில் எதிர்கட்சியினரை இடம்பெறச் செய்து, முக்கியமான விவாதங்கள் நடத்தவும் தயாராயிருக்கிறார். ஆனால் அங்கே எதிர்கட்சியினர் நாடாளுமன்றத்தையும், நாடாளுமன்ற கூட்டுக் குழுக்களையும் புறக்கணிக்கிறார்கள். பட்ஜெட் விவாதத்தின்போது வெளிநடப்புச் செய்கிறார்கள்.

பட்ஜெட் விவாதங்களுக்கு எட்டு நாள் போதாது என்ப



கல்கி



2004 ஆகஸ்ட் 8
தாரண ஆடி 24
மலர் : 63
இதழ் : 2

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




தைச் சுட்டிக்காட்டினால், ஜெயலலிதா அரசு, அதனினும் குறுகிய காலத்தில் அவ்விவாதங்கள் கடந்த ஆண்டுகளில் நடத்தப்பட்டன என்பதற்கு, ஆதாரங் களைத் தேடித் தோண்டி எடுத்து தனது செயலை நியாயப்படுத்த முயற்சி செய்கிறது. இந்த முயற்சியில் அது வெற்றி பெறுகிறதா இல்லையா என்பதை விவரிக்க முடியாதபடி, சம்பவம் உரிமை மீறல் பிரச்னையாக்கப்படுகிறது.

மத்தியிலோ, பிரதமர் எதிர்கட்சியினரிடம் அன்பு வேண்டுகோள் விடுக்கிறார். "புறக்கணிப்பு மட்டும் செய்யாதீர்கள். நமக்குள் என்ன பிரச்னையானாலும் பேசித் தீர்த்துக் கொள்ளலாம். நாட்டுப் பணியும், ஜனநாயகப் பணியும் பாதிக்கப் பட்டுவிடக் கூடாது" என்று ஏறத்தாழ கெஞ்சியே கேட்கிறார்!

ம்ஹூம்! எதிர்கட்சியினர் ஒன்றையும் காது கொடுத்துக் கேட்பதாக இல்லை. நாடாளுமன்றத்துக்குள் அடிப்படைப் பண்புகளைக் கடைப்பிடித்து, தாங்கள் பேசு வதற்கு சபா நாயகர் நேரம் ஒதுக்கித் தருகிறவரையில் காத்திருக்கக் கூட அவர்கள் தயாராயில்லை. நடுநிலையாளரான அவைத் தலைவர், சோம்நாத் சாட்டர்ஜி, நொந்துபோய் வருத்தப்படுகிற அளவுக்கு, அவர்கள் அவையின் நெறி முறைகளைப் புறக்கணிக்கிறார்கள்; அவருடைய வேண்டுகோள்களை நிரா கரிக்கிறார்கள்.

ஆக, தமிழகத்திலும் சரி, மத்தியிலும் சரி... தனிநபர் விரோதங்களும், கட்சி வேறுபாடுகளும்தான் பிரதானமாக இருக்கின்றனவேயொழிய, கொள்கை அடிப்படையிலான வேறுபாடுகளோ, அறிவு சார்ந்த விவாதங்களோ, ஜனநாய கத்தின் செயல்பாட்டை பலப்படுத்தவில்லை.




டெல்லியில் எதிர்கட்சி, 'ஏதானாலும் எதிர்ப்பதே தன் பணி' என்று இயங்க, தமிழகத்தில் எதிர்கட்சியை எதிர்ப்பதே ஆளுங்கட்சியின் முதலும் இறுதியுமான பணி, என்று ஆளுங்கட்சி உறுதி பூண... மக்கள் நலன் என்பது இந்த அவலப் போட்டியில் மிதிபட்டு நசுங்கிப் போகிறது.

மத்தியில் அவை நடவடிக்கைகளைப் புறக்கணிக்க, எதிர்கட்சியினர் வரிசைப்படுத்தும் காரணங்கள்தான் என்ன..?

அமைச்சரவையில் கறை படிந்த நபர்கள் இருக்கிறார்கள்.

ஆளுநர்கள் மாற்றத்தில் அரசியல் உள்நோக்கம் இருக்கிறது.

சிபு சோரன் தலைமறைவானது அக்கிரமம்.

– இவையே எதிர்கட்சியினர் வரிசைப்படுத்தும் காரணங்கள்.

மத்தியில் தற்போது உள்ள ஆட்சியில் குறைபாடுகள் இல்லை என்று யாரும் கூற முடியாது. பா.ஜ.க. தலைமையிலான தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசு ஆட்சியில் இருந்தபோதும், பல அநியாயங்கள் நடக்கத்தான் செய்தன. அப்போது அவை நடவடிக்கைகளுக்கு காங்கிரஸ் இடையூறு செய்தது; அல்லது வெளிநடப்புச் செய்தது. இப்போது பா.ஜ.க அதையே தொடர்கிறது!

தவறுகளைத் தொடர்வதற்கான இடமல்ல நாடாளுமன்றம். மக்கள் பிரச்னைகளை விவாதித்து, தீர்வுகள் காண்பதற்கான உன்னத அமைப்பு. அங்கே கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்ட ஆர்வத்துடன் செயல்பட, இன்றையப் பிரதமரும், சபா நாயகரும் காத்திருக்கையில், எதிர்கட்சியினர் ஒத்துழைக்க மறுப்பதை உடனே நிறுத்த வேண்டும். அதுவே நாட்டுக்கும் அவர்களுக்கும் நல்லது. ஒரு புதிய அத்தியாயம் எழுதப்பட வேண்டும். ○



# சுள்ளான்

கோவில் பிராகாரம். தரிசனம் முடித்து தீபாராதனைக்காகக் காத்திருக்கிறார்கள். மொட்டையடித்து, நெற்றியில் திருநீறு, கழுத்தில் ருத்ராட்ச மாலைகளோடு ஒரு பக்தரும் காத்திருக்கிறார். கற்பூரத் தட்டுடன் கருவறையை விட்டு வெளியே வரும் அர்ச்சகர், தட்டை அந்த பக்தரிடம் நீட்ட, அவரோ தீபத்தைக் கண்களில் ஒற்றிக் கொள்வதை விடுத்து, அங்கே வரும் கதாநாயகியை இச்சையோடு வெறித்துப் பார்க்கிறார்.

பாவாடை, தாவணியில் கல்லூரிக்குக் கிளம்புகிறார் கதாநாயகி. பேருந்து நிறுத்தத்தில் சில கல்லூரி மாணவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு, அபத்தமாய் வர்ணிக்கிறார்கள். அதைக் கேட்டு சந்தோஷப்படும் நாயகி, மேலாடைகளைக் களைந்து எறிந்து விட்டு, எஞ்சிய கொஞ்ச ஆடைகளோடு ஹாயாக நடந்து செல்கிறார்.

கந்துவட்டி வில்லனின் அராஜகங்களை, மெரினா கடற்கரையில் பொதுக் கூட்டம் போட்டு விமர்சிக்கிறார் ஓர் இடதுசாரி இளைஞர். அவரைப் பட்டப் பகலில் மேடையிலேயே வெட்டிக் கொல்கிறார் வில்லன். இதை கண்டும் காணாமலும் நகர்கிறது, மாநகரக் காவல் துறையின் கண்காணிப்பு வாகனம்.

நாற்பது கிலோ எடையில் எலும்பும் தோலுமாக, பள்ளி மாணவனைப் போலத் தென்படும் நாயகன் தனுஷ், நாற்பதடி உயரத்துக்குப் பறந்து பறந்து, நூற்று ஐம்பது கிலோ எடை கொண்ட பெரும் குண்டர் படையை துவம்சம் பண்ணுகிறார். படத்தில் மலிந்திருப்பது இது போன்ற அபத்தங்களும், அதீதங்களும்தான். தணிக்கைக் குழு மொத்தம் பதினெட்டு வெட்டுக்களை பரிந்துரை செய்திருப்பதாகப் பட்டியல் தருகிறது. கதாநாயகி பொது இடத்தில் ஆடைகளைக் களைந்து எறியும் காட்சிக்கு, முழுவெட்டு பரிந்துரைக்காமல், பாலீஷாக விட்டுவிட்டதன் மர்மம் மட்டும் புரியவில்லை!

நாயகன், நாயகி, வில்லன் மூவருமே ஹைபர் ஆக்டிவிட்டி நோயாளிகள் போல நடந்து கொள்கிறார்கள். குறிப்பாக கல்லூரியின் ரசாயனக் கூடத்தில், நாயகியின் கழுத்தைப் பிடித்து நெறித்து, அவரிடம் காதல் சொல்லும் காட்சியில் மன நல மருத்துவமனையிலிருந்து தப்பி ஓடி வந்தவர் போல் நடந்து கொள்கிறார் நாயகன். சுள்ளான் தனுஷ் ஏன் இத்தனை தறுதலையாக இருக்கிறார் என்பதற்கு, உருப்படியான எந்தக் காரணமும் கூறவில்லை இயக்குனர். இதையெல்லாம் விடக் கொடுமை, சிறையில் இறுதியுத்தம் நடத்தும் நாயகனையும், வில்லனையும், ஜெயிலர் உள்ளிட்ட சிறை அதிகாரிகள் ரெஸ்ட்லிங் ஷோ பார்ப்பதுபோல வேடிக்கை பார்க்கிறார்கள்.

என்னது, படத்தின் கதையைப் பற்றி எதுவும் சொல்லவில்லையா? படத்தில் அப்படியொரு வஸ்து இருந்தால்தானே?

**• ஃபெயில் — விஷுவல்தாசன்**

# செருப்புக்கு பதில் செல் ஃபோன்!

'...ங்கா' குடிக்கிற குழந்தைகள் முதல் அதனை வளர்க்கிற பெரியவர்கள் வரை, பார்த்துப் பயன்பெறக்கூடிய தளம் indianchild.com. பழங்கால இந்தியக் கதைகள், நர்சரி ரைம்ஸ், தேவதைக் கதைகள் ஆகியவற்றோடு, குழந்தைகள் இரவில் அழுதால் என்ன செய்ய வேண்டும், தூங்க வைப்பது எப்படி, சமாதானப் படுத்துவது எப்படி என, மன ரீதியான டிப்ஸ்களும் கிடைக்கின்றன. குழந்தைகளுக்கேற்ற வார்த்தை விளையாட்டுகள் களைகட்டுகின்றன.

(உங்களுக்கு வயசு குறைஞ்ச மாதிரி ஃபீலிங் வரணும்னா, இங்கே போகலாம்).

**66**,165,578 டிஜிட்டல் புகைப் படங்கள் இங்கே பல தலைப்புகளின் கீழ் வகைப்படுத்தப்பட்டுள்ளன. ஈஸியாக search செய்யும் வசதியுடன். எங்கே? webshots.com.-ல். 3D, விலங்குகள், ஃபைன் ஆர்ட், பூக்கள், மனிதர்கள், இயற்கை, கடல் வாழ்க்கை, விண்வெளி, விளையாட்டு, பயணம் என அனைத்து வித புகைப்படங்களையும் அடங்கிய வலைத்தளத்தின் மிகப் பெரிய போட்டோ லைப்ரரி இது. நீங்கள் இதில் 'user' ஆகிக் கொண்டு, உங்கள் புகைப் படங்களையும் upload செய்து கொள்ளலாம். தினமும் புகைப்படங்கள் கூடிக் கொண்டே செல்கின்றன.

(அட, நம்ம தமிழ்நாட்டுப் பிரபலங்கள் பலருடைய படங்கள் கிடைக்குதுப்பா!)

**21**-ம் நூற்றாண்டின் சின்ட்ரெல்லா எப்படி இருப்பாள்? அதைத்தான் படமாகத் தயாரித்து வெளியிட்டுள்ளார்கள் ஹாலிவுட்டில், Cinderella Story என்ற பெயரில்! நவீன சின்ட்ரெல்லாவுக்கும் அதே சித்திக் கொடுமை. ஆனால் சின்ட்ரெல்லாவின் செருப்புக்குப் பதில் செல்ஃபோன் தொலைகிறது. அதைக் கண்டெடுத்த ஹீரோ, தேவதையைத் தேடி வருவதாக, காமெடி கலந்து சொல்லியிருக்கின்றனர் வார்னர் பிரதர்ஸ்.

('நல்லதங்காள்' கதையை அப்டேட் செய்ய யாராவது தயாரா?)

ஜாலி எஸ்.எம்.எஸ்

இது குரங்கு ஒரு குரங்கு மனிதனை குரங்கு அடுத்த குரங்கு ஐந்து குரங்கு நொடிகளுக்குள் குரங்கு கோபப்படுத்தும் குரங்கு வழி குரங்கு.

(குரங்கு என்ற வார்த்தையின்றி வாசிக்கவும்.)

- ப்ரெளஸர்








# என்ன பிரச்னை?

நன்றி: 'தினமலர்'

குளோபல் ட்ரஸ்ட் வங்கியில் என்ன குழப்பம்?

தனிநபர் கடன்களை விட நிறுவனங்களுக்குக் கடன் வழங்குவதில்தான், குளோபல் ட்ரஸ்ட் வங்கி ஆரம்பக் காலத்திலிருந்தே மும்முரம் காட்டி வந்தது. கடன் வாங்கிய கணிசமான நிறுவனங்கள் உரிய காலத்தில் கடனைத் திருப்பிச் செலுத்தவில்லை.

திரும்பி வாராக் கடன்களின் விகிதம் அதிகமாக ஆக, அந்த வங்கியின் நிதி நிலைமை அபாய கட்டத்தை எட்டுவதாகப் பொருள். அந்தக் கட்டத்தை எட்டியது குளோபல் ட்ரஸ்ட் வங்கி.

ரமேஷ் கெல்லி என்பவர் குளோபல் ட்ரஸ்ட் வங்கியின் ஆக்கம், தள்ளாட்டம் இரண்டிற்குமே காரணமாக இருந்திருக்கிறார் என்று சில பொருளாதார வல்லுனர்கள் கருதுகிறார்கள்.

வைஸ்யா வங்கியின் வளர்ச்சிக்குக் கூட உறுதுணையாக இருந்தவர் இந்த ரமேஷ் கெல்லி. பத்மஸ்ரீ விருது பெற்றவர். 1994ல் குளோபல் ட்ரஸ்ட் வங்கி இவரது முயற்சியில்தான் தொடங்கியது. ஆறே வருடங்களில் பல இடங்களில் தன் முத்திரையைப் பதித்தது இந்த வங்கி.

சில ஆண்டுகளுக்கு முன் சந்தி சிரித்த பங்குச் சந்தை ஊழலில், இவர் பெயரும் குளோபல் ட்ரஸ்ட் வங்கியின் பெயரும் அடிபட்டன. கேடன் பரேக்குடன் தொடர்பு கொண்டு, ஊழலில் பங்குவகித்தார் என்றும் கூட பரவலாகக் கூறப்பட்டது. இதைத் தொடர்ந்து கெல்லி, குளோபல் ட்ரஸ்ட் வங்கியிலிருந்து விலகினார். ஆனால் கூட்டுப் பாராளுமன்றக் குழு, கெல்லியின் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள் நிரூபணமாகவில்லை என்றது. பிப்ரவரி, 2004ல் குளோபல் ட்ரஸ்ட் வங்கியின் இயக்குனராக மீண்டும் இணைந்தார் கெல்லி. ஆனால் அடுத்த மாதமே அந்த வங்கியை விட்டு விலகினார். இவையெல்லாம் குளோபல் ட்ரஸ்ட் வங்கியின் முதலீட்டாளர்களிடம் ஒரு நிச்சயமற்ற தன்மையை உண்டாக்கியது.

எப்படியோ, ஓரியண்டல் வங்கியுடன் குளோபல் ட்ரஸ்ட் வங்கியை இணைப்பதன் மூலம் பிரச்னைக்குத் தீர்வு கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. முன்பு நிதிநிலைமையில் தள்ளாட்டம் கண்ட நெடுங்காடி வங்கி, பஞ்சாப் நேஷனல் வங்கியுடன் இணைக்கப்பட்டது நினைவிருக்கலாம்.

இப்போது கூட்டணிகளின் காலம் போலும்!

- ஜி.எஸ்.எஸ்.



பித்ரு-ஸர்ப்ப தோஷ நிவர்த்தி ஸ்தலமான ராமேஸ்வரத்தில்

# ஆடி அமாவாஸை திதியில்

## (15.8.2004) அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அமாவாஸையில் சூரியனும் சந்திரனும் ஒரே நேர்க்கோட்டில் சஞ்சரிப்பதால் அன்றைய தினம் மனிதர்களது புத்தி சஞ்சலம் இல்லாமல் தெளிவாகச் செயல்படுகிறது. நாம் எதை நினைத்து அமாவாஸை தினத்தில், இராமேஸ்வரத்தில் தான தர்மங்கள் செய்கிறோமோ, அந்த எண்ணங்கள் பல மடங்கு உறுதியோடு வெற்றிபெறும். ஆடி அமாவாஸை அன்னதானம் மேலும் சிறப்பான பலன்களை அளிக்கும் என்பதில் ஐயமில்லை.

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் என்றென்றும் அழியாத பலனைக் கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலனும் ஒருசேர கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். இராமேஸ்வரத்தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.500 செலுத்தி, அன்னதான கைங்கர்யத்தில் ஈடுபடும் நன்கொடையாளர்களுக்கு உங்கள் பூஜையறையில் இடம்பெற வேண்டிய 'கிரிட்டிகோ' வெளியீடான (1) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், (2) ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமாவளி (த்ரிசதியுடன்), (3) ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் ஆகிய முத்தான மூன்று நூல்களும் முற்றிலும் இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.

இராமேஸ்வரத்தில் பிறந்தநாள், திருமண நாள் என நீங்கள் நினைக்கும் நாளில் அன்னதானம் செய்வதற்கு எமது அறக்கட்டளை சிறப்பான ஏற்பாடுகள் செய்துள்ளன. ஆகவே, நீங்கள் நினைக்கும் தேதியில் அந்தணர்களுக்கும், சாதுக்களுக்கும், ஏழை எளியவர்களுக்கும் அன்னதானம் செய்யலாம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். என்றென்றும் புனிதமான அன்னதான ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
☎: (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300

ஆடி அமாவாஸை நாளில் (15.8.2004) கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# முக்கியமாய் மாணவர்களுக்கு

வழக்கமாக, நாம் யாரையாவது, "எப்படி இருக்கீங்க?ன்னு கேட்டால், என்ன பதில் சொல்வார்கள்?... 'ம்... ஏதோ ஓடிக்கிட்டு இருக்கு' என்பார்கள். 'அதை ஏன் கேட்கறீங்க? நம்ம பிழைப்பு நாய் பிழைப்பு' என்று அலுத்துக் கொள்வார்கள், 'ஓ! ஃபைன்!' என்றும் சிலர் சொல்வதுண்டு.

நான் ஒரு சமயம் சந்தித்த முதிய நண்பரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டேன். அவர் சொன்ன பதில் என்ன தெரியுமா?

"ஆனந்தமாக இருக்கேன்". எனக்கு அவர் சொன்ன பதில் ஆச்சரியமாக இருந்தாலும், அவர் மனதுக்குள் இருக்கும் ஆனந்தம் அவர் பதில் சொன்ன தொனியில் நன்றாக வெளிப்பட்டதை கவனித்தேன். இருந்தபோதிலும், அவரிடம், "ஓ! ஆனந்தமாக இருக்கிறீர்களா? ரொம்ப சந்தோஷம். எங்கே, ஆனந்தம் என்றால் என்ன என்பதை எனக்கு விளக்கமாய்ச் சொல்லுங்களேன்!'' என்றேன்.

அவரோ, "ஆனந்தத்தை வார்த்தைகளாலே விளக்கிச் சொல்ல முடியாது. அனுபவித்தால்தான் புரிந்து கொள்ள முடியும்" என்றார்.

என்ன ஓர் அற்புதமான விளக்கம்!

உடல், சக்தி, மனம், அறிவு, ஆனந்தம் இந்த ஐந்தும், பஞ்சகோசங்கள் அதாவது ஐந்து கவசங்கள் என்று சொல்லப்படுகின்றன. இதனால் மனிதர்களுக்குக் கிடைப்பதுதான் ஆத்ம சக்தி, ஆத்மபலம்!

இந்த உலகத்தின் சரித்திரம் என்பது ஏதோ உங்கள் பாடபுத்தகத்தில் சொல்லப்பட்டிருப்பதுபோல, அசோகர் நட்ட மரத்திலோ, அலெக்சாண்டர் நடத்திய போர்களிலோ முடிவடைந்து போய்விடவில்லை. உலகத்தின் சரித்திரம் என்பது, அதில் வசிக்கும் மனிதர்களுடைய சரித்திரம். அதுவும் எப்படிப்பட்ட மனிதர்களுடைய சரித்திரம்; யாரெல்லாம், தம்மீது நம்பிக்கை வைத்து, வாழ்கிறார்களோ, அத்தகைய மனிதர்களின் சரித்திரம்தான். இதைச் சொன்னவர் விவேகானந்தர்.

ஒருவருக்கு, தன்மீது எப்போது நம்பிக்கை வரும்? முன்னே சொன்னேனே ஆத்மபலம், ஆத்ம சக்தி இவை நிறைய இருக்கிறபோது தான் தன்னம்பிக்கை வரும்! தன்னம்பிக்கை என்பதை கண்டிப்புக் காட்டாத ஆசிரியர் தரும் ஹோம் ஒர்க் போல, சாதாரணமான விஷயமாக எடுத்துக் கொள்ளக் கூடாது. அது தெய்வீகமானது. இறைவனின் அருள் என்கிற கரெண்ட்டை உங்களுக்குள் பாய்ச்சும் ஒயர் போன்றது. அது வெறுமனே பாடங்களை டப்பா அடித்து, பரீட்சையின்போது, ஞாபகமாய் எழுதி, நிறைய மார்க்குகளை வாங்குவதன் மூலம் வந்துவிடாது.

இதை விளக்க ஒரு குட்டிக் கதை சொல்லட்டுமா? நீங்கள் வண்டலூர் மிருகக் காட்சி சாலைக்குப் போயிருக்கிறீர்களா? நம் வண்டலூரில் கங்காரு இருக்கிறதா, இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை. என் கதைப்படி அங்கே ஒரு கங்காரு இருக்கிறது. அது ஒரு பெரிய புல்வெளியில் விடப்பட்டிருக்கிறது. புல்வெளியைச் சுற்றி ஐந்தடி உயரத்துக்கு ஒரு வேலிபோட்டிருக்கிறார்கள். ஆனால் காலையில் பார்த்தால், கங்காரு வேலிக்கு வெளியில் இருக்கும்.

மிருகக்காட்சிசாலை ஊழியர், கங்காரு வேலிக்கு வெளியில் வந்து விடுகிற விஷயத்தை, தமது அதிகாரிகளுக்குத் தெரிவித்தார். அதிகாரிகள் கூடி ஆலோசனை செய்தார்கள். வேலியின் உயரத்தை பத்து அடியாக உயர்த்துவது என்று தீர்மானித்தார்கள். உடனடியாக வேலி பத்து அடியாய் உயர்த்தப்பட்டது.

ஆனாலும் பாருங்கள், காலையில்

சுவாமி போதமயானந்தா



பார்த்தால், கங்காரு வேலிக்கு வெளியில் இருந்தது. உடனே அதிகாரிகளுக்குப் புகார் போனது. ஆலோசனை நடந்தது. வேலியின் உயரம் இருபது அடியாக உயர்த்தப்பட்டது.

கங்காருவின் இடத்தை ஒட்டி இருந்த இடம்தான் ஒட்டகத்துக்குரியது. ஒருநாள் ஒட்டகம், "கங்காருவே! இப்போது வேலியை இருபதடி ஆக்கிவிட்டார்கள்! நீ இனிமேல் தாவிக்குதித்து வெளியே போக முடியாது!" என்று கிண்டல் தொனிக்கும் குரலில் சொன்னது.

கங்காரு பதில் ஏதும் சொல்லவில்லை. 'வேலிக்கு வெளியில்போக என்னால் முடியாதா? ம்... காலையில் பார்!' என்று நினைத்துக் கொண்டது.

காலையில் எழுந்தால் ஒட்டகத்துக்கு ஒரே ஆச்சரியம். வேலிக்கு வெளியில் இருந்தது கங்காரு. அதிசயமாய் கங்காருவைப் பார்த்து, "இங்கே வா! உன்னிடம் பேசணும்" என்றது ஒட்டகம்.

"அது எப்படி, வேலியின் உயரத்தை எவ்வளவு அதிகரித்துக் கொண்டே போனாலும் உன்னால், வேலிக்கு வெளியில் தாண்டிக் குதித்து போய்விட முடிகிறது. தினம் வேலி தாண்டிக் குதிக்கிற உன்னிடம் இந்திய அதலெட்டுகள் டிரெயினிங் எடுத்துக் கொண்டால், ஏதென்ஸ் ஒலிம்பிக்ஸுக்குப் போய் இந்தியாவுக்கு ஒரு பதக்கமாவது கொண்டு வரலாமில்லையா?' என்று கேட்டது.

அதற்கு கங்காரு, "நான் வேலியைத் தாண்டிக்குதித்து வெளியே போகிறேன் என்று நீ நினைத்துக் கொண்டு இருக்கிறாயா? இல்லவே இல்லை" என்று ஒரு போடு போட்டது.

"அப்புறம்?' ஆச்சரியமாய்க் கேட்டது ஒட்டகம்.

"என்னை அடைத்து வைத்திருக்கும் இடத்தின் நுழைவுக் கதவை ஒழுங்காக மூடாமல் விட்டு விட்டு, வேலியை எவ்வளவு உயரத்துக்கு அதிகரித்தாலும், நான் ஏன் கவலைப்பட வேண்டும்?" என்று சொன்னது கங்காரு.

**க**ங்காரு ஒட்டகத்துக்குச் சொன்ன பதிலிலிருந்து ஒரு முக்கியமான விஷயத்தை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். கங்காருவுக்கு தான் என்ன செய்ய வேண்டும், அதை எப்படிச் செய்ய வேண்டும் என்று நன்றாகத் தெரிந்திருந்தது. அதைப் போலத்தான் ஒவ்வொரு மாணவரும், தனது வாழ்க்கையை அ க வேண்டும், அமைத்துக் கொள்ள வேண்டும். இதற்கு இன்றையக் கல்வி முறை எவ்வளவு தூரம் உதவிகரமாக இருக்கிறது என்பது கேள்விக்குறிதான். கங்காரு கதையில் வருவதுபோல, வேலியை உயர்த்திக் கொண்டே போவதில் அதிக கவனம் செலுத்தப்படுகிறது. அதன் கேட்டைப் பூட்டி வைக்க வேண்டும் என்று தெரியவில்லை. பூட்டுவது எப்படி என்றும் தெரியவில்லை.

சுருக்கமாய்ச் சொல்ல வேண்டும் என்றால், என் இனிய நண்பனே! நீ நாளைக்கு என்னவாக ஆக வேண்டும் என்று சரியாக சிந்திக்கிறாய்! ஆனால் இன்றைக்கு நீ யார்? உன் திறமை என்ன? என்பது உனக்குப் பிடிபடவில்லை.

அதை அப்படியே விட்டு விடலாமா? கூடாதுதானே! அப்போ என்ன செய்யலாம்? ஒரு சின்ன ஹோம் ஒர்க்.. ஈஸிதான். மிரளாதீங்க!

(இப்போதைக்கு விடை பெறுகிறேன்)

படம் : **யோகா, ஸ்ரீஹரி**

# நீங்கள் கேட்டவை-தராசு

● ரேவதிப்ரியன்,
ஈரோடு -1

? அண்மையில் யாருடைய பேச்சு உங்களை வியப்பிலாழ்த்தியது...?

! அத்வானியின் பேச்சுதான். 'ராஜீவ் காந்தி குடிநீர்த் திட்டத்தைத் தூசு தட்டினேன்' என்று ப.சிதம்பரம் கூறப் போக, "அப்படியானால், எங்களுடைய மதிப்புக்குரியவர்களை 'தூசு' என்று இழிவு படுத்துகிறீர்கள்!" என்று குற்றம் சாட்டி சண்டைக்குப் போனாரே!

● ஆர்.ஜி.காயத்ரி,
நிசையன்விளை

? அரசியலில் இதுவரை வென்றுள்ளது கருணாநிதியா? ஜெயலலிதாவா..?

! தேர்தலில் மட்டுமல்ல... வாதங்களிலும் வென்று வருவது கருணாநிதிதான். தமிழகத்தில் கொள்ளை, வழிப்பறி பெருக தி.மு.க. மற்றும் அதன் தொண்டர்கள்தான் காரணம் என்ற ஜெயலலிதாவின் குற்றச்சாட்டு, தொடங்கி பலவற்றுக்கு மு.க. புள்ளி விவரங்கள் அணிவகுத்துப் பதில் சொல்லுவதில் துல்லியம், சுறுசுறுப்பு இரண்டுமே அதிகம்.

● இரா. கமலக்கண்ணன்,
நாமகிரிப் பேட்டை

? கும்பகோணம் தீ விபத்தில் யாருடைய உதவியை மறக்க முடியாத சிறந்த உதவியாகக் கருதலாம்...?

! பாதிக்கப்பட்ட குடும்பங்களைச் சேர்ந்த மற்ற குழந்தைகளுக்குப் பட்டப் படிப்புவரை பொறுப்பேற்றுக் கொண்டுள்ள ஸ்ரீ ஜயேந்திரர் செய்யும் உதவி. அக் குடும்பத்துக்கு உண்மையான உதவியாய் அது அமையும்.

● ஜோ. பன்னீர்செல்வம்,
சென்னை -12

? 'ஒவ்வொரு வீட்டிலும் இரு மரக்கன்றுகள் நடுவதைச் சட்டமாக்க வேண்டும். இச் சட்டத்தை மீறுவோருக்குக் கூடுதல் வரி விதித்து தண்டிக்க வேண்டும்' என்கிறாரே ராமதாஸ். இது நடைமுறை சாத்தியமா...?

! பிராயச்சித்த பாலிடிக்ஸுக்குச் சாத்தியமாகுமே!

● முரு.சொ.தியாகராஜன்,
திருச்சி-6

? மதுரை உயர்நீதிமன்றக் கிளை குறித்து வக்கீல்கள் அடித்துக் கொள்கிறார்களே...?

! அடித்துக் கொள்கிறார்கள், ஸ்டிரைக் பண்ணுகிறார்கள்; உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியையே மாற்ற வேண்டும் என்று கோரிக்கை வைக்கிறார்கள். மொத்தத்தில் தமிழகத்துக்கும் நீதித் துறைக்கும் தலைகுனிவை ஏற்படுத்துகிறார்கள். இறுதியில் சுயநலனைச் சற்று ஒதுக்கி, மக்கள் நலனைக் கருத ஆரம்பித்திருப்பதால் நிலைமை சுமுகமாகி விடும்.

● ரா. சாலமோன்,
ஆலங்குளம்

? மீண்டும் வாக்குச் சீட்டு முறையையே தேர்தலில் பயன்



# அரசியலில் வென்றுள்ளது கருணாநிதியா? ஜெயலலிதாவா?

படுத்த வேண்டும் என்கிறாரே ஜெயலலிதா...?

! அவர் விருப்பப்படி தேர்தல் கமிஷன் மீண்டும் வாக்குச் சீட்டு முறையையே கொண்டு வருவதாக வைத்துக் கொள்வோம்... அப்போதும் தோற்றுப் போனால், தி.மு.க. கள்ள வோட்டுக்களைப் போட்டு நிரப்பி விட்டது என்று சொல்லலாமில்லையா? தோல்வியை கண்ணியமாக ஏற்கும் மனப் பக்குவம் வேண்டும்.

● டீ.எஸ்.டீ.ராயன், மயிலாடுதுறை

? சோனியா பிரதமர் நிவாரண நிதியை அறிவிப்பு செய்ததையும், ராகுல் காந்தி வரவையும் பா.ஜ.க. கண்டித்துள்ளதே...? கும்பகோணம் கொடூரத்தில் கூடவா இப்படி அரசியல் ஆதாயம் தேட வேண்டும்?

! பா.ஜ.க. மட்டும்தானா ஆதாயம் தேடுகிறது...!

● டி.சுப்ரமணியன், மேலையூர். ❐

? சுதந்திர இந்தியாவில் இன்னமும் ஜீரணிக்க முடியாத விஷயம் எது? ஏன்?

! எத்தனையோ உண்டு. எனினும் சகிக்கவே முடியாதது, வறட்சி பீடித்த கிராமப் பகுதிகளில், உணவில் ஊட்டச் சத்து இன்றித் துவண்டு, மெள்ள சிறுத்துப் போகும் குழந்தைகளின் மரணம்.

● ப. மூர்த்தி, பெங்களூர் - 21

? கீதையின் அறிவுரைப்படி அந்த கிருஷ்ணனாலேயே தற்காலத்தில் நடந்து கொள்ள முடியாது என்று சிலர் வாதிடுவதற்குத் தங்கள் பதில்...?

! அவ்வாறு சொல்பவர்கள் கீதையையும் அறியாதவர்கள்... கிருஷ்ணனையும் அறியாதவர்கள்.

● டி.கே.சுப்ரமணியன், திருப்பரங்குன்றம்.

? முதல்வரின் பேச்சும் அறிக்கைகளும் அவர் மத்திய அரசோடு சுமுகமான போக்கை வளர்த்துக் கொள்ள விரும்பவில்லை என்கிற மாதிரி

● பரிகார பாலிடிக்ஸ்!



● எட்டிக்குப்...



● ...போட்டி!



● தூக பெறாச் சண்டை!



● தலைமறைவு தலைவர்!



☐ ரூ.100/- பரிசு பெறுபவர்:
டி. சுப்பிரமணியன்,
மெயின்ரோடு,
மேலையூர் - 609 107

* ரூ.50/- பரிசு பெறுபவர்:
உமரி பொ. கணேசன்,
ஸ்ரீ நாராயணா ஸ்டோர்ஸ்,
A114, எம்.என்.நகர்,
ஆண்டாப் ஹில்,
மும்பை - 400 037

**உள்ளதே...?**

! மத்திய அரசு தான் என்று இல்லை; அவர் வேறு யாருடனாவது சுமுகமான உறவை வளர்த்துக் கொள்ள விரும்புகிறாரா...? தெரிந்தால் சொல்லுங்களேன், ப்ளீஸ்.

● **தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை - 1**

? ***சிபு சோரன் கைது வாரண்டில் உள்நோக்கம் உண்டா...?***

! அரதப் பழசான வழக்கை அவர் அமைச்சர் ஆன கையோடு தூசி தட்டி எடுத்ததில், அரசியல் உள்நோக்கம்தான் பிரதானம். எனினும், சோரன் உடனடியாக ராஜினாமா செய்யாமல் ஓடி ஒளிந்து ரகளை பண்ணியதை, இந்தக் காரணம் காட்டி நியாயப்படுத்தவே முடியாது.

● **உமரி பொ.கணேசன், மும்பை - 37** *

? ***தமிழகம் முழுவதும் ஓலைக் கூரைகள் உள்ளனவே... தீ விபத்து ஏற்படாதா... மக்கள் இதனால் பாதிக்கப்படமாட்டார்களா?***

! ஏற்கெனவே பாதிக்கப்பட்டுதான் வருகிறார்கள். ஆனால், ஓலைக் குச்சுகள் நமது வாழ்க்கை முறையின் ஓர் அங்கம். செலவு குறைவு. ஆஸ்பெஸ்டாஸ் ஆரோக்கியமற்றது. ஓலைக்குடிசையில் வாழ பாதுகாப்புப் பயிற்சி; ஓலைக்குப் பூச fire resistant chemicals என்றுதான் நாம் சிந்திக்க வேண்டும். இந்திய விஞ்ஞானிகளுக்கு ஒரு சவால்.

● **கே. தெய்வசிகாமணி, சென்னை - 30**

? ***"பிற மாநிலங்களை ஒப்பிடும் போது, தவறு செய்கிற காவல்துறை அதிகாரிகளின் எண்ணிக்கை தமிழ் நாட்டில் மிகக் குறைவு'' என்கிறாரே ஜெயலலிதா...?"***

! இப்படியும் ஓர் அல்ப சமாதானமா? மற்ற மாநிலங்களில் ரீடெய்லாக நடக்கும் பிஸினஸ், இங்கே ஹோல்ஸேலாக நடக்கிறது; அவ்வளவுதான்!

● **ஆர்.ஆர்.சாமி, திருவண்ணாமலை**

? ***போபால் விஷவாயுக் கசிவு வழக்கில் நஷ்ட ஈடாக ரூ.1500 கோடி வழங்க உச்சநீதிமன்றம் உத்தரவிட்டுள்ளதே....? அது போதுமானதா...?***

! கும்பகோணம் பள்ளி தீ விபத்தில் பிள்ளைகளை இழந்த குடும்பங்களுக்குக் கிடைத்துள்ள நஷ்ட ஈடு போதுமானதா...?இதற்கெல்லாம் அளவுகோல் எது? பணம், இழப்பை ஈடு செய்யுமா...? அனுதாபம் வார்த்தை அளவில் நின்று விடாமல், செயலிலும் காண்பிக்கப்பட்டால்தான் ஆறுதல்.

---




''இது ரயில்வே சர்வீஸ் கமிஷன் பரீட்சையாச்சே?''
''அதுக்காக ஆன்ஸர் பேப்பரின் தலைப்பில் 'லல்லு துணை'னு எழுதணுமா என்ன?''
- உ. ராஜாஜி

# சமூக சேவைக்கும் புது வடிவம்!

**சு**தாமூர்த்தியின் தொடரென்றால் கல்கி வாசகர்களுக்கு உற்சாகக் கொண்டாட்டம். இந்த முறை 'How I taught my gradma to read and other stories' என்று ஆங்கிலத்தில் அவர் எழுதிய நூல், பதின்மூன்று வாரங்கள் கல்கியில் களை கட்டியது. வாசகர்களின் பாராட்டுக்களைக் குவித்த தொடர் ''உள்ளங்கையில் உலகம்'. தமிழ் பதிப்புக்காகவே மேலும் இருபது அத்தியாயங்களைத் தந்திருக்கிறார் சுதாமூர்த்தி. தமிழ் வாசகர்கள் மீது அவ்வளவு காதலா? நூலின் வெளியீட்டு விழாவுக்கு சென்னை வந்திருந்த அவர், "மற்ற எந்த மொழிகளிலும் எனது புத்தகங்களுக்கு இத்தனை வரவேற்பு இருந்ததில்லை. தமிழ் வாசகர்கள் தரமானவர்கள். இந்த நூல் தமிழில்தான் முதலில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது'' என்று உணர்ச்சிவசப்பட்டு நன்றி கூறினார். நூலை விமர்சிக்க பல பிரபலங்கள் வந்திருந்தனர்.

"சமூக சேவைக்கு ஒரு புதிய பரிமாணம் தந்திருப்பவர் சுதாமூர்த்தி. அவரது நூலக இயக்கம் இதற்கொரு உதாரணம்" என்று பாராட்டினார் தமிழ்நாடு பவர் ஃபைனான்ஸ் நிறுவனத்தின் தலைவரான சங்கர் ஐ.ஏ.எஸ். "சுதாமூர்த்தி ஒரு நல்ல தொடர்பாளர். ஒவ்வொருவர் மனத்திலும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடிய எழுத்தாக இருக்கிறது'' என்று பாராட்டியவர் சுதா சேஷையன்.

"நாடு முழுவதும் பயணம் செய்து கொண்டேயிருக்கிற சிந்தனையாளர், சமூக சேவகர். எளிய ஆங்கிலத்தில் கட்டுரைகளை எழுதுகிறார். நீண்ட, சிக்கலான வாக்கியங்கள் இல்லாத எளிய நடை'' என்று பூரிக்கிறார் மொழி பெயர்த்த மூத்த பத்திரிகையாளரான சாருகேசி. நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆசிரியர் சுசிலா ரவிந்திரநாத் நூலை வெளியிட்டார்.

— ஜெ

படங்கள்: யோகா



* சாருகேசிக்கு நினைவுப் பரிசு



* விழா மேடையில்...

உயரமான ஆஞ்சநேயர்கள் என்றால், உடனே நினைவுக்கு வருவது சுசீந்திரம் ஆஞ்சநேயரும், நாமக்கல் ஆஞ்சநேயரும்தான். இரண்டு பேருமே பதினெட்டடி உயரம்! நாமக்கல்லார் அஞ்சலி ஹஸ்தம்; சுசீந்திரத்தார் கூப்பிய திருக்கரங்கள்!

இவர்களை ஓரங்கட்டியவர் அண்மைக் காலத்து நங்க நல்லூர்க்காரர்; முப்பத்திரண்டு அடி உயர விசுவரூபர்! இப்போது இவரையும் விஞ்சி நிற்கிறார் பஞ்சவடி விஸ்வரூபர்; முப்பத்து ஆறு அடி!

இனிமேல் எங்காவது கர்நாடகத்து சிரவண பெலகொலா கோமதேசுவரர் உயரத்துக்கு - ஐம்பத்து ஏழு அடி வாலை மடக்கிக் கொண்டு, ஓர் ஆஞ்சநேய ஸ்வாமி எழுந்து நின்றால் நாம் வியப்படைய வேண்டியதில்லை!

அப்படியாவது, நாம் சின்னவர்கள் என்கிற புத்தியோடு பரம் பொருளை நினைத்து, நிமிர்ந்து பார்க்கிற பக்குவம் வராதா?

திண்டிவனத்திலிருந்து பாண்டிச்சேரி போகிற 'புளியமரச் சாலை'யில் இருபத்தொன்பதாவது கிலோ மீட்டர் தொலைவில், திருச்சிற்றம்பலம் கூட்டுச்சாலை அருகில் நின்று கொண்டிருக்கிறார் இந்தப் பஞ்சவடி ஆஞ்சநேயர். இதில் சிறப்பு என்னவென்றால், நங்க நல்லூர்க்காரரைக் குடியமர்த்திய ரமணி அண்ணாதான், இந்தப் பஞ்சவடிக் கட்டாந்தரையிலும் ஒருவரை கம்பீரமாக நிற்க வைத்திருக்கிறார்.

நங்கநல்லூர், சுசீந்திரம் மாதிரி பணிவோடு கூப்பிய கரங்கள் எல்லாம் இல்லை. ஒவ்வொரு கரத்திலும் ஆயுதங்களோடு பத்துத் திருக்கரங்கள். ஐந்து திருமுகங்களை உடையவர் 'இவர்.

நேரே பார்க்கிற முகத்தில் ஆஞ்சநேயராகக் காட்சி தருகிறவர், நேர்ப் பின்புறத்தில் கருடாழ்வாரின் திருமுகத்தோடு அருள்பாலிக்கிறார். மேற்குப் பார்த்த ஆஞ்சநேய ஸ்வாமியின் திருமுகத்துக்கு மேலே, ஹயக்ரீவரின் திருமுகம். பக்கங்களில் வடக்கு நோக்கி நரசிம்மராகவும், தெற்கு நோக்கி வராஹ மூர்த்தியையும் வடித்திருக்கிறார்கள். இந்த அருமையான சிற்பக் கருவூலத்தை ஒரே கல்லில் உருவாக்கித் தந்திருப்பவர், பத்மஸ்ரீ முத்தையா ஸ்தபதி.

மூலப் பொருளான தரமான கல் சிறுதாமூர் கிராமத்தில் உள்ள பெருமான் என்பவருடைய நிலத்திலேயே கிடைத்திருக்கிறது. 'பெருமானே' வழங்கிய கல்லில் இந்தப் பஞ்சமுகக் கடவுள் உருவாகியிருப்பது கூட அர்த்தமுடையதாய்த் தோன்றவில்லை?

ஊருக்குப் பெயர் 'பாப்பாஞ்சாவடி', இப்போது 'பஞ்சவடி' என்று வழங்குகிறார்கள். இந்தப் பகுதியில் பல சித்தர்களும், முனிவர்களும்

# வான் முட்டும் வாயுகுமாரன்!

வாழ்ந்திருப்பதாய்ச் சொல்கிறார்கள். இராவணனுக்கு உதவ எண்ணி வேள்வி நடத்த முயன்ற மயில்ராவணனை அழிக்க, ஆஞ்சநேயர் பஞ்சரூபத் திருவுரு எடுத்ததாய் ஆலயக் குறிப்பேட்டில் எழுதியிருக்கிறார்கள். புராண, வரலாற்று ஆதாரங்கள் எப்படியிருந்தாலும், ஆணவம் அடக்கிக் கழுத்து வலிக்க நிமிர்ந்து பார்த்து, தரிசனம் பண்ணி அருள்பெற வேண்டியது தானே?

சென்ற ஆண்டு ஜூன் மாதத்தில் இந்தப் பஞ்சமுக ஸ்வாமியை எழுந்தருளப் பண்ணிப் பீடமேற்றியிருக்கிறார்கள். இனிமேல் தான் மற்ற திருப்பணிகள், ஒவ்வொன்றாய் நிறைவுற வேண்டும்.

மகா மண்டபம், ராஜகோபுரம், மடைப்பள்ளி, திரு மதில் - எல்லாமாகச் சில கோடி ரூபாய்களுக்குத் திட்டமிட்டிருக்கிறார்கள். திருப்பணியில் பங்குகொள்ள விரும்புகிறவர்கள் 'பஞ்சமுக ஸ்ரீ ஜயமாருதி அறக்கட்டளை, சென்னை' என்கிற பெயருக்கு நன்கொடைகளை அனுப்பலாம்.

'அரியணை அனுமன் தாங்க' என்ற கம்பராமாயணத் திருக்கோலச் சந்நிதித் திட்டம் கை கூடும் போது, பஞ்சமுகஸ்வாமியின் திருவுள்ளம் மேலும் குளிர்ந்து, அடியார்களின் மீது அன்பும் அருளும் பிரவாகமாய்ப் பெருகும் என நம்புவோம்.

ஆஞ்சநேய ஸ்வாமியின் திருப்பாதங்களை தரிசிப்பதே மனசுக்கு மிகவும் இதம் அளிக்கக் கூடியது. 'கோபுர தரிசனம் கோடிப் புண்ணியம்' என்பார்கள். இந்தப் பாதங்களின் தரிசனம், பரம்பரைக்கே அருள் சேர்க்கும். அத்தனை அழகு!

'ஜயமங்கள பஞ்சமுக ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமி'யின் விஸ்வரூப தரிசனம், இந்த பூமியைக் காத்து அருளட்டும்!

— சுப்ர.பாலன்



கும்பகோணம் தீ விபத்தில் பதின்மூன்று பிஞ்சுகளைப் பறிகொடுத்த நத்தம் கிராமம், மாதிரி கிராமமாக உருவெடுக்கிறது!



# மயானத் தீயில் மாதிரி கிராமம்!

கொரநாட்டுக் கருப்பூர் கிராமப் பஞ்சாயத்திற்குட்பட்ட, நத்தம் கிராமத்திலிருந்து தீ விபத்துக்குள்ளான பள்ளிக்குப் பயிலச் சென்றவர்கள் அறுபத்தியிரண்டு பேர்! இதில் பதின்மூன்று பேர் பலியாகி விட, ஆறுதல் சொல்ல கிராமத்துக்கு வந்த கலெக்டர் ராதாகிருஷ்ணன் வெலவெலத்துப் போனார். காரணம், ரோடுகளின் மேடுபள்ளங்களால் மினி பஸ் கூட ஒதுக்கி விட்ட இக் கிராமத்தில், எந்த வசதியும் இல்லை! உடனடியாக அதிரடி உத்தரவுகள் பறக்க, நத்தம் மாதிரி கிராமமாக மாறி வருகிறது.

ஊரின் முகப்பில் குடிநீர் மேல் நிலைத் தொட்டி. தெரு முனைகளில் ஆங்காங்கு குடிநீர்க் குழாய்கள். அவற்றிற்குப் புதிதாக சிமெண்ட் தொட்டிகள். குடிசை வீடுகளுக்கு தீப்பிடிக்காத தொகுப்பு வீடுகள் என வேலைகள் ஜரூராகத் துவங்கப்பட்டுள்ளன.

பலியாகிப் போன பதின்மூன்று பிள்ளைகளில், நான்காம் வகுப்பு மாணவ மாணவிகள் ஆறு பேர். மூன்றாம் வகுப்பு மாணவ மாணவிகள் ஏழு பேர். மீதம் அதிலிருந்து தப்பித்தவர்கள், நத்தம் கிராமத்துப் பிள்ளைகள் நாற்பத்தி ஒன்பது. அவர்களில் உயர்நிலைப் பள்ளி மாணவிகள் தவிர, இருபத்தி ஒன்பது இளஞ் சிறார்களுக்கென்று திடீர்ப் பள்ளி ஒன்று துவங்கப்பட்டுள்ளது.

ஒன்று முதல் ஐந்தாம் வகுப்பு வரை சொல்லிக் கொடுக்கப்படுகிறது. அதே கிராமத்தைச் சேர்ந்த பி.காம். படித்துள்ள காயத்ரி (24)தான் டீச்சர்!

ஈஜிஎஸ் எனப்படும் கல்விக் காப்புறு இத் திட்டத்தின் கீழ் செயல்பட்டு வருகிறது அந்த திடீர்ப் பள்ளி. இன்னும் ஆறு மாதத்திற்குள் புதிதாகக் கட்டடம் எழுப்பி அரசு தொடக்கப்பள்ளி ஒன்று துவங்கிச் செயல்பட இருக்கின்றது. உயர்நிலைப்பள்ளி மாணவிகளில் பலரும், குடந்தை நகரின் பல்வேறு பள்ளிகளில் சேர்த்து விடப்பட்டிருக்கின்றனர்.

இந்தியன் வங்கியின் கும்பகோணம் கடைத் தெரு கிளை அதிகாரிகள், அந்தக் கிராமத்தில் முகாமிட்டிருந்தனர். பாதிக்கப்பட்டவர்களுக்குக் கிடைத்திருக்கும் நிவாரண உதவித் தொகைக்கான



• தீப்பிடிக்காத தொகுப்பு வீடுகள் கட்டுமானப் பணி



• பறிகொடுத்த பெற்றோர்கள்



• சாலைப் பணி...



• குடிநீர் வசதி



• திடீர்ப் பள்ளி!

"இங்கு குடியிருக்கறவங்க எல்லாருமே ஏழைங்க. அதனாலதான் தமிழ் மீடியத்துக்குப் போனதுங்க. என்னோட மூத்த புள்ளை பாலமகேஸ் வரிய நெருப்பு திங்க நான் நிம்மதியில்லாமத் தவிக்கிறேனே...'' எனக் கதறுகிறார் இலக்கியா. இவரது கணவர் ரிக்ஷா ஓட்டும் தொழிலாளி. இவர்களது இன்னொரு மகள் பரமேஸ்வரி (விபத்திலிருந்து தப்பித்தவர்) தற்போது நத்தம் கிராமத்தின் திடீர்ப் பள்ளியில் இரண்டாம் வகுப்புப் படித்து வருகிறாள்.

டி.டிகளை பணமாக்க வேண்டி, சம்பந்தப்பட்டவர்கள் வங்கிகளுக்கு அலைவதைத் தவிர்க்கும்விதமாக, அதிகாரிகள் அங்கு தற்காலிகமாக வந்து செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். முதலில் ஒவ்வொரு வீடுகளுக்கும் சென்று ஆறுதல் சொல்கிறார்கள். தமிழக அரசு தந்திருக்கும் ஒரு லட்ச ரூபாய் நிவாரணம், திமுக அறக்கட்டளை தந்திருக்கும் இருபத்தைந்தாயிரம் ரூபாய் நிதியுதவி போன்றவற்றுக்கான டி.டிகளைப் பெற்றுக் கொண்டு, அவர்களது சேமிப்புப் புத்தகத்தில் வரவு வைத்துத் தருகின்றனர்.

கிளம்பும் போது இக் கிராமத்தைச் சேர்ந்த லட்சுமி சொன்னார், "எங்க பச்சை மண்ணுகளை தீ எரிச்சுக் கருக்க, இந்தக் கிராமத்துக்கு வெளிச்சம் வந்திருக்கு."

கட்டுரை, படங்கள் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**




# வாழ்க வளமுடன்

# கல்கி

## லைஃப் ஸ்டைல் மலர்







கண்ணைப் பறிக்கும்
வண்ணப் பகுதிகள்

ஷாப்பிங் செய்ய உதவும்
குறிப்புகள்

எண்ணி எண்ணி வியக்க
செய்திகள்

எப்போதும் பயன்
தரக்கூடிய படைப்பு.

விலை
ரூ. 40/-
மட்டும்

கூரியர் மூலம் பெற ரூ. 60/- அனுப்பவும்.
உள்ளூர் ஏஜெண்டிடமும் கிடைக்கும்.

---

சர்குலேஷன் மானேஜர், கல்கி,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097

# சோனியாவின் அலமாரி!

**ரா**ஜீவ்காந்தியின் படுகொலைக்குப் பிறகு, பட்டும் படாமல், ஒதுங்கியே இருந்த சோனியா காந்தி, சமீப காலமாக அரசியல் நிகழ்ச்சிகளிலும், பொது நிகழ்ச்சிகளிலும் நல்ல ரசனையுடன் ஆடை அணிந்து வருவதைக் கவனித்திருப்பீர்கள்.

"வெள்ளை நிறம் சோனியாவின் உள்ளம் கொள்ளை கொண்ட நிறம். அது அவருக்கு ராசியானதும்கூட. குடியரசுத் தலைவரைச் சந்திக்க, மன்மோகன்சிங்குடன் போனபோது, வெள்ளை நிற டாக்கா புடைவை அணிந்திருந்தார். பிரதமர் பதவியைத் துறந்தபோது, கறுப்பு நிற பார்டர் கொண்ட காஞ்சி காட்டன் வெள்ளைப் புடைவை அணிந்திருந் தார். வெண்மைக்கு அடுத்தபடியாக பிரவுன் நிறமும் அவருக்கு மிகவும் பிடிக்கும்" என்கிறார் கல்கத்தா சாந்தி நிகேதன் பருத்திப் புடைவைகளை சோனி யாவுக்கு விற்கும் அனுஷா முகர்ஜி.

பெல்லாரியின் இல்கால்ஸ், ஆந்திராவின் புட்டா பக்காஸ், தமிழ்நாட்டின் செட்டிநாட்டுப் புடைவை கள், ராஜஸ்தானின் பாக்ரு பிரின்டட் காட்டன்ஸ், வங்காளத்தின் டெலியா ரூமல்ஸ் என சோனி யாவின் அலமாரியிலும் தேச நல்லிணக்கம் தெரிகிறதாம்.

"காட்டன் புடைவை அணிவதற்கு, நிறையப் பொறுமையும், அழகுணர்ச்சியும் தேவை. சோனியா காந்திக்கு கிராமப்புற நெசவுக் கலையை வாழ வைக்க வேண்டும் என்ற எண்ணமும் இருப்பதால், அவரது ஆடைக்கே தனி அழகு வந்து விடுகிறது" என்று ஃபேஷன் வட்டாரப் பெண்கள் ஒட்டு மொத்தமாக உருகு கிறார்கள்.

- ஆர்.எல்

நன்றி: **'சவ்வி'**






# புக்ஷெல்ஃப்

### ....ம் - முகில்

முதல் தொகுப்பில் உணர்ச்சியோடும், உயிர்ப்போடும் உலகின் அவலங்களைக் கடியும் அங்கதக் கவிதைகள். மெல்லிய முரண், தொகுப்பின் முகப்பை பாரதியும், கலாமும் அலங்கரிப்பது. இரண்டாவது, காதலில் தோய்த்தெடுத்த கிராஃபிக்ஸ் கனவுகளின் கவிதைகள்.

**துடிப்புகள் பதிப்பகம், 104, W.G.C சாலை, தூத்துக்குடி, விலை ரூ. 50/-**

### வள்ளுவமும் இவர்களும் - பேரா. ந.க. மங்கள முருகேசன்

பாரதி, பாரதிதாசன், வ.உ.சி, வ.வே.சு.ஐயர், திரு.வி.க - தேசபக்தி என்பதைத் தவிர, இந்த ஐந்து பெருமக்களையும் இணைப்பது குறளுக்கு எழுதிய உரை. ஐவர் உரைகளைத் தொகுத்து தமிழுக்கும் குறளுக்கும் மட்டுமின்றி, ஐவருக்கும் பெருமை சேர்க்கும் ஆய்வு நூல்.

**தென்றல் பதிப்பகம், 13/3 பீட்டர்ஸ் சாலை குடியிருப்பு, ராயப்பேட்டை, சென்னை 600 014, விலை ரூ. 60/-**

### ஏன் முடியாது? - பேரா. இரத்தின நடராசன்

'நேற்றைக்கு இருந்ததைவிட இன்று ஒரு விதத்திலாவது வளர்ந்திருக்கிறேனா?' என்பது முதற்படி. பின்னர் பகிர்ந்து கொள்ளல், திட்டமிடுதல், உழைப்பு, நம்பிக்கை என தன்னம்பிக்கையின் அத்தனை பரிமாணங்களையும் விளக்கி, தோற்றுத் துவண்டவரையும் நிமிரச் செய்யும் சுய முன்னேற்ற நூல்.

**ஏகம் பதிப்பகம், 3. பிள்ளையார்கோயில் 2ம் சந்து, முதல் மாடி, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005, விலை ரூ. 100/-**

### அபிராமி அந்தாதி (உரை) புல. அறிவுடை நம்பி

சரபோஜி மன்னரின் தண்டனைக்கு அஞ்சி அந்தாதியைப் பாடி அழைத்த பட்டரைக் காக்க, அன்னை அபிராமி தன் தோட்டை எறிந்து நிலவாக்கியபோது எழுந்ததாய்ச் சொல்லப்படும் அபிராமி அந்தாதி. அந்தாதியையும், களமான கடவூரையும் ஆய்ந்து பொழிப்புரையுடன் படைக்கப்பட்ட தொகுப்பு.

**தமிழாலயம், சாமித்தோப்பு, குமரி மாவட்டம் 629 704, விலை ரூ. 40/-**

# சிறைக்குள்

## கண்ணாடிக் கல்வெட்டுகள்—9

ஆயிரத்தி எண்ணூறுகளில்
ஓர் இரவு!
வானம் கறுப்பு நிறத்தில்
வழிய வழிய நனைந்தது!

கட்டபொம்மனின் உடல்
தூக்குக் கயிற்றில்
துவண்டு தொங்கிய
நேரம்!

ஆங்கிலேயர்களின்
அராஜகத்தின்
ஓங்காரமாய்
பாஞ்சாலங் குறிச்சியின்
அரண்மனைகளும் -
கோட்டைகளும்
பீரங்கிக் குண்டுகளால்
பிளக்கப்பட்டு
தரைமட்டமாயின.

அரண்மனைகள்
இடிவதை
நரம்பெல்லாம் ஈயம் பாய
பார்த்துக்
கொண்டிருந்தான்
உயிரோடிருந்த
ஊமைத்துரை!

ஒரு பூ என்பது - அந்த
மரத்தின் அனுபவம்!
ஒரு வீடு என்பது - பல
இதயங்களின் மூச்சுக்காற்று!

தான் வாழ்ந்த பூமி
தரையோடு விழுவது கண்டு
உள்ளே ஓர் உதிரக் குரல்
ஊமைத்துரைக்கு!

காடும் - முள்ளும்
கால்கிழிய நடந்தான்
ஊமைத்துரை!

பசி என்பது
மனிதன் தனக்குத் தானே
தந்துகொள்ளும் மயக்க மருந்து!

அடர்ந்த காட்டின்
நரிகளின் நடமாட்டங்களிடையில்
உயிருள்ள சடலமாய்
உணர்ச்சி பிழன்று கிடந்தான்
ஊமைத்துரை.

சூரியனின் ஒளி ஊசிகள்
கண்களைத் தைக்க
கண் விழித்தான் ஊமைத்துரை.

கிடந்தது தரை!
இருண்ட அறை!
அது பாளையங்கோட்டைச் சிறை!

வெள்ளைக்கார



# சிறுத்தை-1

பா.விஜய்

வெறியாளர்களின்
வேட்டையில்
ஊமைத் துரைக்குள் நிறைய
உட்காயங்கள்!

"ஊமைத்துரை ஒரு
நாகம்!
எப்போதும் அது
சீறிக் கொண்டே இருக்கும்.
கவனம்! கவனம்!" என்ற
கட்டளைகள் இருந்தன!

திருச்சிராப்பள்ளி
மேலிடத்தில் இருந்து
ஊமைத் துரையைத் தண்டிக்க
அதிகாரிகள் குவிந்தனர்!

மனசுக்குள் இருந்த வெப்பத்தை
வெளியே எடுத்தால்
ஓர் இரும்பு ஆலையை
இயக்குமளவு இருக்கும்!

ஊமைத்துரையின் கண்களில்
ஆவேசம்!
சகோதரனுக்கு மரணதண்டனை
சொந்தங்களுக்குச் சிரச்சேதம்!
இடிக்கப்பட்ட கோட்டை!
உடைக்கப்பட்ட
வாழ்விடம்!
புதைந்துபோன
சொந்தங்கள்!
சிதறிக் கிடக்கும் மக்கள்!

அன்னியனின் உணவு
விஷமாய் இறங்கியது
தொண்டைக்
குழிக்குள்!

பாளையங்கோட்டைச்
சிறை என்பது
காட்டுக்குள் இருந்தது.
அத்தோடு
சிறைக்குள்ளேயே
காடுகளும் இருந்தன!

விறகு பிளக்கும்
வேலை
வீரன் ஊமைத்துரைக்கு!

ஒவ்வொரு துரோகியின்
தலையையும் பிளப்பதாய்
எண்ணி
விறகுகளைப் பிளந்து
நின்றான்
ஊமைத்துரை.

அவன் கண்ணில்
விடுதலை விடியலின் தேடல்!



அதே சமயம்
அதே பொழுது
கொத்தமரம் என்ற ஊரினுள்
ஓர் இதயம்!

இளம் மீசை!
இரும்புத் தகடாய் உடம்பு!
இறுகிய தசைக் கண்கள்!

குத்துவாளாலேயே
புலிகளைக் குத்திக் கொல்லும்
வீர இளைஞன் புலிகுத்தி நாயக்கன்!

ஊமைத்துரையின்
உற்றறிந்த சிநேகிதன்!



புலிகுத்தியான் இன்னும் சில
புதிய இளைஞர்களோடு
பேசிக் கொண்டிருந்தான்.

"நண்பர்களே!
ஒரு பூலித்தேவனைப்
பறி கொடுத்தோம்!
ஒரு கட்டபொம்மனை
பலி கொடுத்தோம்!
மிச்சமிருப்பது
ஒரு ஊமைத்துரை மட்டும்தான்!

ஆங்கிலேயர்களை எதிர்க்க
எந்தப் பாளையத்தானுக்கும்
துணிவில்லை - அல்லது
அவசியமில்லை!

ஊமைத்துரையையும்
தவற விட்டால்,
இது வெள்ளைக்காரபுரியாகிவிடும்!

ஊமைத்துரை தப்ப வேண்டும்!
ஏற்கெனவே அவர் இருமுறை
ஆங்கிலேயரிடம் தப்பியவர்

அதனால் காவல் மிகுதி
கெடுபிடி அதிகம்!

இந்தமுறை இந்தப் புலிகுத்தியான்
தப்பிவிப்பான்"
அவன் கண்ணுக்குள் நம்பிக்கை!

குத்தீட்டிகளும்
கூர்கத்திகளும் பிடித்த
கைகளில் முனை மழுங்கிய
முரட்டுக் கோடாலிகள்!

ஊமைத்துரைக்கு நாள் முழுக்க
விறகு பிளக்கும் வேலை!

அருகே சில வெள்ளைக்கார
துரையினரின் விசுவாசிகளான
குறுங்கிராம மக்கள் சிலரும்
சிறைக்குள் நுழைந்து
விறகு பொறுக்க
அனுமதிக்கப்பட்டிருந்தனர்!

முதுகொடிய விறகொடிக்கும்
ஊமைத்துரைக்குள்
ஒரே ஒரு துளி நம்பிக்கை

இந்தக் கடுங்காவலில் இருந்து
இந்த கிராமத்தினர் உதவியோடு
என்றாவது ஒருநாள்
தப்பித்தோட முடியுமென்று!

ஆனால்
சிறைக்குள் வரும்
அத்தனைத் தலைகளும்
கணக்கிடப்பட்டு அனுப்பப்பட்டன!

சிலபல
கறுப்புப் பகல்களையும்
விழித்த இரவுகளையும்
கடந்தான் ஊமைத்துரை!

ஒருநாள்...

(தொடரும்)

சிக்கென்ற மேனிக்கு

# ஸ்லிம் ஃபேர்

## அதிக உடல் எடையால் வரும் நோய்கள்



- இரத்த அழுத்தம்
- நீரழிவு
- மூட்டு வலி
- முதுகு வலி
- உடல் துர்நாற்றம்
- இருதய நோய்கள்
- சோர்வு
- மூச்சிறைப்பு
- மூலம்
- இன்னும் பல ...

இவற்றிலிருந்து விடுபட

## ஸ்லிம் ஃபேர்



*ஸ்லிம் ஃபேர்*

உடலில் உள்ள தேவையற்ற கொழுப்பை கரைத்து கழிவுகளை வெளியேற்றி உங்கள் உடலை சிக்கென்ற மேனியாக்குகிறது.

*ஸ்லிம் ஃபேர்*

சித்தா முறைப்படி தயாரிக்கப்பட்ட ஒரு முழுமையான இயற்கை மருந்து. இதை உட்கொள்வதால் உடலுக்கு வேறு உபாதைகள் (SIDE EFFECTS) ஏற்படுமோ என்ற கவலை சிறிதளவும் கொள்ளத் தேவையில்லை.

வியாபார விசாரணைக்கு :

**குளோபல் நெட்வொர்க்,**

9, கண்ணதாசன் தெரு, ரங்கராஜபுரம், கோடம்பாக்கம், சென்னை - 24.

போன் : (044) 24804133 , 23722656

SITA / 04 / 007

# ஆத்ரேயா

★ ரெடிமேட் ரவிக்கைகள்

★ பெட்டி கோட்ஸ் ★ நைட்டீஸ்



**ரெடிமேட்**
**பிளவுஸ்களுக்கு மட்டும்**
**10% சிறப்புத் தள்ளுபடி**
**ஆகஸ்ட் 1 முதல் 15 வரை**

# ஆத்ரேயா

## ரெடிமேட் ரவிக்கைகள்

வாருங்கள். அணிந்து மகிழுங்கள்

**A T H R E Y A**

**House of Blouses**




No.1, Jambulingam Street, (Valluvar Kottam High Road),
Nungambakkam, Chennai - 600 034.
☎ 28226586 Fax : 091-044-25360076
E-mail : raj@oceanload.com

| | | |
|---|---|---|
| SINGAPORE | : | MUSTAFFA (OLD) NALLI Pvt. Ltd., |
| UAE | : | LULUCENTRE |
| KARAIKAL | : | EVE'S PARK, BARATHIYAR STREET, |
| MADURAI | : | EVE'S ERA, CHINNA CHOKKIKULAM |

CHARY'S

# அகத்தின் அழகு

"நாளைக்குப் பெங்களூர் போகணும் ரேகா! வர நாலு நாள் ஆகும்னு நினைக்கிறேன்" என்று தன் மனைவியிடம் சொன்னான் கிஷோர்.

"என்ன கிஷோர்? நாளைக்கு ராத்திரி லோகு வரானே? மறந்து போச்சா? மூணு நாள் இங்கேதானே தங்கப் போறான்!" என்றாள் ரேகா.

ரேகாவின் அத்தை மகன் லோகு என்ற லோகேஷ். பல குடும்பங்களில் நடப்பது போல் ரேகாவிற்கும் லோகுவிற்கும் திருமணம் செய்யலாம் என்ற எண்ணம், இரு குடும்பங்களிலும் இலேசாக இருந்தது. அது அரசல் புரசலாக வெளிப்படவும் செய்தது. ரேகா காலேஜில் படித்துக் கொண்டிருந்த பொழுது, லோகேஷ் எம்.பி.ஏ. படிப்பை முடித்து விட்டு ரேகாவிற்காக சென்னையில் வேலை தேடிக் கொண்டான். ஒரு புகழ்பெற்ற விளம்பர நிறுவனத்தில் நல்ல வேலை



அமரர் கல்கி
நினைவு சிறுகதைப்
போட்டியில்
இரண்டாம் பரிசு
ரூ.7,500
பெற்ற சிறுகதை

கிடைத்தது. இயல்பாகவே கலகலப்பாகப் பழகுவான். ஏதாவது ஜோக் கடித்துக் கொண்டே இருப்பான். நேர்த்தியாகவும் சற்று ஆடம்பரமாகவும் உடை உடுத்துவான். ஒருநாள் வீட்டில் தங்கி விட்டுப் போனால், இரண்டு நாட்கள் அவனுடைய டியோடெரெண்டின் வாசனை அந்த அறையைச் சுற்றும். ரேகாவின் மனம் அவனைச் சுற்றியதில் ஆச்சர்யம் ஒன்றும் இல்லைதான்! இருவர் வீட்டிலும் சற்றுப் பழைமைவாதிகள் இருந்ததாலும், அதிகாரபூர்வமாக சம்மதம் கிடைக்காததாலும், சந்திப்புக்களும் பழக்கமும் ஒரு கட்டுப்பாட்டுக்குள்தான் இருந்தன.

ரேகாவின் படிப்பு முடிந்ததும் ஜாதகத்தைக் கையில் எடுத்த பெரியவர்கள், முதலில் லோகுவின் ஜாதகத்தோடுதான் ஒப்பிட்டார்கள். துளிக்கூட சேரவில்லை! தாம்பத்தியம் நீடிப்பது மிகவும்



ரம்யா நாகேஸ்வரன்

கஷ்டம் என்று இட்டவட்டமாகக் கூறிவிட்டார் ஜோசியர். மனம் உடைந்து போனான் லோகு. அழுது ஆர்ப்பாட்டம் செய்தாள் ரேகா. "ஜோசியத்தை நம்பாம திருமணம் செஞ்சுக்கப் போம்னு தீவிரமா இருந்திங்கன்னா, நாங்க குறுக்க நிக்கலை. ஆனால் நாளைக்கு ஒரு கஷ்டம்னா எங்ககிட்டே வந்து கண்ணைக் கசக்காதே" என்று இட்ட வட்டமாகச் சொல்லி விட்டார் ரேகாவின் அப்பா. இருவருக்கும் குடும்ப ஜோசியரிடம் நம்பிக்கை இருந்ததால், இந்த விஷப் பரீட்சையில் இறங்க அவர்களிடம் தைரியம் இல்லை. சில மாதங்களில் யதார்த்தத்தை ஒப்புக் கொண்டு விட்டனர் இருவரும். ரேகாவிற்கு கிஷோருடன் திருமணம் நடந்த இரண்டு மாதத்துக்குள், லோகுவுக்கு அனிதாவுடன் திருமணம் நடந்தது. உடனே லோகுவுக்கு மும்பைக்கு மாற்றமும் வந்தது.

கிஷோர் எந்தவிதத்திலும் லோகுவுக்குக் குறைந்தவனில்லை. ஆனால் சுபாவத்தில் நேர் எதிர்! அமைதியானவன், ஆழமானவன். சுலபத்தில் உணர்ச்சிவசப்படாமல், அறிவுப்பூர்வமாக விஷயங்களை அலசக்கூடியவன். தன் காதலைப் பற்றி யாராவது உறவினர் மூலம் கேள்விப்படுவதை விட, தானே சொல்லிவிடுவதுதான் நியாயம் என்று நினைத்த ரேகா, கல்யாணத்திற்கு முன்பாகவே கிஷோரிடம் தோற்றுவிட்ட தன் காதல் கதையைச் சொல்லிவிட்டாள்.

"ஸாரி, டு ஹியர் தட் ரேகா. நீ என்னைக் கல்யாணம் செஞ்சிக்கிட்டா எந்தவிதமான ஏமாற்றத்தையோ, வருத்தத்தையோ சந்திக்காம இருக்க, என்னாலான எல்லா முயற்சிகளையும் பண்றேன்" என்று பண்போடு பதிலளித்தான். அதற்கு மேல் துருவித் துருவி ஒன்றும் கேட்கவில்லை. லோகுவின் கல்யாணத்திலும் உற்சாகமாகக் கலந்து கொண்டான். இதுவே ரேகாவுக்கு அவன் மேல் ஒரு மரியாதை கலந்த காதல் உருவாக அஸ்திவாரமாக இருந்தது.

இப்பொழுது இரண்டு வருடங்கள் கழித்து லோகு வரப் போகிறான். ஆனால், கிஷோர் . ஊருக்குப் போக வேண்டிய சூழ்நிலை!

"நான் இல்லேன்னா என்ன ரேகா? உங்க ரெண்டு பேருக்கும் தான் பேச நிறைய விஷயம் இருக்குமே! நான் அடுத்த தடவை மீட் பண்ணாப் போச்சு!" என்றான் கிஷோர்.

கிஷோரைக் கொஞ்சம் சீண்டிப் பார்க்க நினைத்தாள் ரேகா. அந்த வலையில் தானே விழப் போவது தெரியாமல், "என்ன கிஷோர்? லோகு யாருன்னு மறந்து போயிடுச்சா? என் முன்னாள் காதலனோட நான் மூணு நாள் தனியா இருக்கிறதுலே ஆட்சேபம் ஒண்ணும் இல்லியா?" என்றாள் குறும்பாகச் சிரித்தபடி.

"லோகு யாருன்னு நல்லா ஞாபகம் இருக்கு ரேகா. ஒருவிதத்துலே நான் ஊர்லே இல்லாதது நல்லதுதான்னு நினைக்கறேன்" என்று சொல்லி நிறுத்தினான் கிஷோர்.

> "மருமகளே, காளியம்மா... பல் தேய்க்கறதுக்கு 'ஒரு செம்பு தண்ணி கொண்டுவா!"
> "போங்க அத்தை... எனக்குத் தண்ணியில் கண்டம்னு ஜோஸ்யர் சொன்னதை மறந்துட்டீங்களா?"
> - புளியறை கணேசன்

ரேகாவின் முகம் சிவக்க ஆரம்பித்தது. "நான் சும்மா தமாஷ் பண்ணா, நீ என்ன உளர்றே?" என்று சீறினாள்.

"கோபப்படாதே ரேகா. சொல்ல வந்ததை முழுக்கக் கேளு. இந்தச் சந்திப்பு உன் ஆழ் மனசுலே இருக்கிற சில உணர்ச்சிகளை நீ நேருக்கு நேர் சந்திக்க ஒரு நல்ல வாய்ப்பு" என்றான்.

குழம்பிய முகத்தோடு பார்த்தவள், "புரியலை" என்றாள்.

"நீ என்னைக் கணவனா பரிபூர்ணமா ஏத்துக்கிட்டாலும், லோகு மேலே ஒரு சின்னக் கவர்ச்சி பாக்கி இருக்கு இல்லையா?" அவன் கண்களை நேராகப் பார்த்தபடி கேட்டான் கிஷோர்.

சடாரென்று தலையைக் குனிந்து கொண்டாள் ரேகா. எல்லா விஷயங்

களையும் ஆழமாகப் புரிந்து கொள்ளும் தன் கணவனின் இந்தக் குணம் அவளுக்குப் பரிச்சயம்தான். ஆனால் தான் கையும் களவுமாகப் பிடிபடுவோம் என்று அவள் நினைக்கவில்லை. அவனை நேருக்கு நேர் பார்க்கக் கூச்சமாக இருந்தது. தன் உணர்வுகளை மறுத்து, கிஷோரை ஏமாற்ற அவள் விரும்பவில்லை.

"ஆமாம் கிஷோர், நான் அதை மறைக்க விரும்பலை. ஆனால் அதை நினைச்சு வெட்கப்படறேன். என்னோட உள் மனசுலே இருக்கிறதை எப்படிக் கண்டுபிடிச்சே கிஷோர்?" பாதி நேரம் தரையைப் பார்த்தபடி பேசி முடித்தாள் ரேகா.



"ரொம்பச் சுலபம். சாதாரணமாகவே ஒருத்தரைப் புரிஞ்சுக்க எனக்கு அதிக நேரம் தேவைப்படாது. அதுவும் தவிர, உன கண்கள் எவ்வளவு எக்ஸ்ப்ரஸிவ்னு நான் பல தடவை வர்ணிச்சுருக்கேன். அதை வைச்சே உன் உணர்ச்சிகளை கண்டுபிடிச்சுடுவேன். லோகுவைப் பத்தி பேசும் பொழுதெல்லாம் உன் கண்கள்ல ஒரு பிரகாசம். அவன் கல்யாணம் நடந்த பொழுது, அவன் மனைவி உன்னை விடப் பெரிசா அழகிலேயோ, படிப்பிலேயோ உசத்தி இல்லைன்னு நீயா முடிவு பண்ணிச் சந்தோஷப் பட்டே. உன் அம்மாவோட பேசும் பொழுதும் சரி, மும்பையிலே இருக்கிற உங்க ரெண்டு பேரோட இன்னொரு கஸினோட பேசும் பொழுதும் சரி, லோகுவைப் பத்தி விசாரிக்காம இருக்க மாட்டே. என்னை ஏமாத்தறதா நினைச்சுக் குரலை மட்டும் அசுவாரஸ்யமா மாத்திப்பே. என்னோட வேலையிலே எனக்குக் கிடைக்கிற வளர்ச்சியையும், நம்ம வாழ்க்கை முறையிலே ஏற்பட வளர்ச்சியையும், லோகுவோட வாழ் நிலையோட ஒப்பிட இந்த சம்பாஷணைகள் உனக்கு உதவியா இருந்ததுன்னு எனக்குத் தெரியும். இத்தனை க்ளுஸ் போதாதா ரேகா? உனக்கு இன்னும் கொஞ்சம் கவர்ச்சி பாக்கி இருக்குனு முடிவு பண்ணே?" என்ற கிஷோர் தொடர்ந்தான். "இதிலே வெட்கப் படவோ, வருத்தப் படவோ ஒண்ணுமே இல்லை ரேகா. ஒரு நல்ல ஸ்வீட் சாப்பிட்டா, அதோட சுவை கொஞ்ச நேரம் நாக்குலே தங்கறதில்லையா? அதே மாதிரி உன்னை உண்மையா நேசிச்ச ஒருவனோட அன்பு உனக்கு இன்னும் ஞாபகம் இருக்கு."

"ஒரு பக்கம் நான் இவ்வளவு ட்ரான்ஸ்பரண்டாவா இருந்திருக்கேன்னு நினைச்சு அவமானமா இருக்கு. இன்னொரு பக்கம் என் கணவன் என்னை இவ்வளவு தெளிவாப் புரிஞ்சு வைச்சுருக்கிறதை நினைச்சுப் பெருமையா இருக்கு. உனக்குக் கோபமோ, பொறாமையோ வரலையா?"

"முதல்லே கொஞ்சம் கஷ்டமாத்தான் இருந்தது. ஆனா தீவிரமா யோசிச்சுப் பார்த்தப்போ, நீ என் மேல மனப்பூர்வமா அன்பு செலுத்தறதுலே எந்தச் சந்தேகமும், எனக்கு இல்லை. லோகு மாதிரி நான் வெளித் தோற்றத்துலே கொஞ்சம் ஆடம்பரமா இல்லைங்கறதுதான் உன்னோட குறைன்னு எனக்குப் புரிஞ்சது. இதை நீ மறைமுகமா எனக்குப் பல தடவை உணர்த்தியிருக்கே. உனக்காக நான் ஓரளவு மாறினாலும், லோகுவை காபி அடிக்கறதுலே எனக்கு உடன்பாடு

இல்லை. வெளித் தோற்றத்துலே மயங்கறது மனித இயல்பு ரேகா. எவ்வளவோ பேரு மாதவன் போட்டோவையும், சிம்ரன் போஸ்டரையும் வீட்லே வைச்சுக்கறது இல்லையா? அதுக்காக எல்லா கணவனும் மாதவனாக முடியுமா, இல்லை மனைவிதான் ஆல்தோட்ட பூபதி டான்ஸ் ஆட முடியுமா?' என்று சிரித்தான் கிஷோர்.

"எனக்குப் புரியறது கிஷோர். நான் இப்ப என்ன செய்யணும்?"

"நாளைக்கு லோகுவைப் பார்க்கும் பொழுது தைரியமா உன் உணர்ச்சிகளை முழுமையா சந்திச்சு, இந்தக் கவர்ச்சி வாழ்நாள் முழுக்க நீடிக்கப் போறதா, இல்லை நீ இதை வெளிப்படுத்தக்கூடிய ஓர் ஆக்கப்பூர்வமான உணர்ச்சியா மாத்திக்கப் போறியான்னு முடிவு பண்ணிக்க. குட் லக்!" என்று சொல்லிவிட்டு ஆபீஸுக்குப் போய்விட்டான் கிஷோர்.

அடுத்த நாள் மாலை வாசல் மணி ஒலித்தது. லோகுவோடு உள்ளே நுழைந்தாள் அனிதா. சம்பிரதாயப் பேச்சுகளும், பரஸ்பர விசாரிப்புகளும் முடிந்தன. அனிதா பாத்ரூமில் நுழைந்ததும், "நீ மட்டும்தானே ஆபீஸ் விஷயமா வரதா இ ந்தே..." என்றாள் ரேகா.

"நேத்திக்கு சாயங்காலம் போன்லே பேசும் பொழுது, நீ, கிஷோர் ஊருலே இல்லைன்னு சொன்னே இல்லையா? அனிதாவுக்கு நம்ம காதல் விஷயத்தைச் சொல்லியிருக்கேன். அதான், அடம் பிடிச்சு கடைசி நேரத்துலே என் கூட வந்துட்டா. நான் அவளை உண்மையா நேசிக்கறேன் ரேகா. இருந்தாலும் எப்பப் பார்த்தாலும் சந்தேகம்..." என்று சோகமாக இழுத்தான் லோகு. அவன் முகத்தில் இருக்கும் சந்தோஷமும், உற்சாகமும் வடிந்து ஆயாசமும் அயர்ச்சியும்தான் தெரிந்தன.

லோகுவைப் பார்த்தால் பரிதாபமாக இருந்தது. மனத்தில் இருந்த உணர்ச்சிகளுக்கு விடுதலை அளித்து, மனத்தை விசாலப்படுத்திய கிஷோர் எங்கே? இல்லாததை இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு மனத்தைக் குறுகலாக்கிக் கொண்டிருக்கும் அனிதா எங்கே?

"கவலைப்படாதே லோகு. இன்னும் ஒரு இரண்டு நாள் கூட தங்கிட்டுப் போ. கிஷோர் வந்ததும், நானும் அவரும் அனிதாவோட பக்குவமாப் பேசி, அவ மனசை மாத்த எல்லா முயற்சியும் செய்யறோம். உன் சந்தோஷம்தான் எங்களுக்கு முக்கியம்" என்று ஆறுதலாகச் சொல்லிவிட்டு, தெளிந்த மனத்துடன் கிஷோரின் வரு கையை ஆவலுடன் எதிர் நோக்கினாள் ரேகா. ◎





• குடும்பத்தினருடன்...

'**கூ**டப்பா புலி' என்று செல்லமாக அழைக்கப்படும் ஆந்திர முதல்வர் டாக்டர் ஒய். எஸ். ராஜசேகர ரெட்டியிடம் ஒரு ஸ்பெஷாலிட்டி, அவருடைய இருபத்தைந்து வருட அரசியல் வாழ்க்கையில் ஒரு முறை கூட தேர்தலில் தோற்றதில்லை.

நெசவாளர்களுக்கான நலத் திட்டப் பணிகளும், மஹிளா மண்டலி பெண்களுக்காக குறைந்த சதவிகித வட்டியில் கடன் தரும் திட்டமும், ரெட்டிகாருவின் இமேஜை கிடுகிடு என உயர்த்தியுள்ளன.

இதெல்லாம் ஒருபுறமிருக்க, ராஜசேகர ரெட்டி, மதப் பற்றுமிக்க கிறிஸ்தவர்! தினமும் பைபிள் வாசிக்கும் பழக்கம் உடையவர். எங்கே போனாலும் கையோடு புனித பைபிள் புத்தகத்தையும் எடுத்துச் செல்கிறார்.

"நான் மிகுந்த கடவுள் நம்பிக்கை உடையவன். பிரார்த் தனை செய்யாமல் நான் எந்தக் காரியத்தையும் செய் வதில்லை" என்கிறார்.

"வேலைப் பளு அதிகமாகி, களைப்பு ஏற்பட்டால், நிம்மதி யாகச் சாய்ந்து கொண்டு, கிஷோர்குமார், கண்டசாலா பாடிய பழைய பாடல்களைக் கேட்பேன். டென்ஷன் பறந்தோடி விடும். வீட்டிலிருக்கும் போது, ரிலாக்ஸ் செய்து கொள்ளத் தோன்றினால், பண்ணைக்குப் போய் விவசாய வேலை பார்க்கத் தொடங்கி விடுவேன். நான் இன்றைக்கு வேண்டு மானால் முதலமைச்சர் நாற்காலியில் உட்கார்ந்திருக்கலாம். ஆனால் என்றைக்கும் நான் உழவன் மகன்தான்" என்கிறார் சிரித்துக் கொண்டே!

\- ஆர்.எல்.



# உழவன் மகன்!

"பத்தணாவென்றால் பாருங்க. அதுதான் கொள்முதல் விலை. லாபமே கிடையாது."

சில சமயம், கடையை விட்டு எழுந்திருக்கும்போது கடைக்காரர் விலை குறைத்துச் சொல்வார். சில சமயமோ, வாசல் வரையில் போன பிறகுதான் கடைசி விலை சொல்வார். ஆகவே அடிக்கடி நான் கடை வாசல் வரையில் போய்ப் பயமுறுத்துவதுண்டு. பிறகுதான் விலை தகையும்.

ஆனால் வாசல் வரையில் போவதுகூடப் போதாதென்று ஒரு சமயம் தெரிந்து கொள்ள நேர்ந்தது. பெங்களூரில் மாம்பழக் கிடங்கு ஒன்றுக்குப் போனோம். நாங்கள் கேட்ட மாம்பழம் "நூறு, எட்டு ரூபாய்" என்று விலை சொன்னான் கடைக்காரன். "அப்புறம்?" "அப்புறம்?" என்று கேட்டு ஆறு ரூபாய்க்குக் கொண்டு வந்தோம். ஆனால் என்னுடைய சிநேகிதர் திருப்தியடையவில்லை. இன்னொரு கடை பார்க்கலாமென்றார். வெளியில் சென்று அந்த வீதியின் கோடியிலிருந்த மற்றொரு கடைக்குப் போனோம். அந்தக் கடையின் வாசலை அடைந்தபோது, பின்னாலிருந்து ஒரு மனிதன் கூப்பிட்டான். திரும்பிப் பார்த்ததும் பழைய கடைக்காரனுடைய ஆள் என்று தெரிந்தது. "ஸ்வாமி! ஒரே பேச்சு; ஐந்தே கால் ரூபாய். தம்பிடி கூட எங்களுக்கு லாபமில்லை. உங்களுக்கென்று கொடுக்கிறோம்!" என்றான். எங்களிடம் அப்படிப்பட்ட விசேஷ கருணை அவனுக்கு ஏற்படுவதற்கு என்ன காரணம் என்று இன்று வரை எனக்குத் தெரியவில்லை.

நமது வியாபார உலகத்தில் முதலில் செய்யப்பட வேண்டிய இன்றியமையாத சீர்திருத்தம், "பேரம்" என்பதை ஒழித்து "கறார் விலை" முறையை ஏற்படுத்துவதாகும்.

பேர முறையின்போது சாமான் வாங்க வரும் ஒருவர் கடையில் ஒரு மணி நேரம் செலவழிக்கிறார் என்றால், கறார் விலை முறையில் அவர் ஐந்து நிமிஷத்துக்குமேல் இருக்கமாட்டார். கடைச் சிப்பந்திகளும் கடைக்கு வருகிறவர்கள் எல்லாரையும் நன்றாய்க் கவனித்துக் கொள்ளலாம்.





# பேரம் வியாபார லக்ஷணம்!

ஆரம்பத்தில் இதில் சிறிது சிரமம் இருக்குமென்பதை நானறிவேன். பேரமுறை அவ்வளவு பழகி விட்டபடியால், 'கறார் விலை' என்பதை சிலர் இலேசில்

நம்பமாட்டார்கள்; ஒப்புக் கொள்ளவும் மாட்டார்கள். அரைச் செவிடர் சாமான் வாங்கிய கதை தெரியுமல்லவா?

"பெட்டி என்ன விலை?" என்று அரைச் செவிடர் கேட்டார்.

"மூன்றரை ரூபாய்" என்றான் கடைக்காரன்.

"ஐந்தரை ரூபாயா? ரொம்ப அதிகம்.நாலு ரூபாய்க்குத் தருகிறாயா?"

"இல்லை, இல்லை. விலை மூன்றரை ரூபாய்?"

"ஓஹோ! அப்படியானால் இரண்டரை ரூபாய்க்குக் கொடு!"

இதைப் போல், கடைக்காரன் சொல்லுகிற விலைக்குக் குறைத்துக் கேட்க வேண்டுமென்பது சாமான் வாங்குவதில் நம்முடைய ஒரே நியதியாய் இருந்து வந்திருக்கிறது. அதை மறந்து, சொன்ன விலை கொடுத்து வாங்குவதென்றால், சிறிது சிரமந்தான்.

இம்மாதிரி சம்பவம் ஒன்றை ஒரு காதி வஸ்திராலயத்தில் பார்த்திருக்கிறேன். ஒருவர் கதரின் விலையை விசாரித்தார்.

"கஜம் பன்னிரண்டு அணா" என்றார் கடைக்காரர்.

"பத்து அணாவுக்குக் கொடுங்கள்."

'இல்லை; இங்கே ஒரே விலைதான்."

"எல்லாம் கொடுக்கலாம், கொடுங்கள்."

"இல்லை,ஐயா! இது காந்தி மகானுடைய இயக்கத்திற்காக நடக்கிற கடை; ஒரே விலைதான்.'

"எதுவாயிருந்தா லென்ன, ஐயா! ஒரு அணா குறைத்துப் பதினோரு அணாவுக்காவது கொடுங்கள்."

"முடியவே முடியாது."

"என்ன, ஐயா! காலணாக்கூடக் குறைக்க மாட்டீர்களா?"

"குறைப்பதில்லை."

"அப்படியென்றால் வேண்டாம், போம்!" என்று கோபித்துக் கொண்டு போயே போய்விட்டார்.



# அமரர் கல்கி

இம்மாதிரி கஷ்டங்கள் ஆரம்பத்தில் நேர்ந்தாலும், நாளடைவில் 'கறார் விலை'யினால் வியாபார விருத்திக்கு மிகவும் அனுகூலமுண்டென்பதில் சந்தேகமில்லை. புதிதாக வியாபாரத் துறையில் இறங்கும் படித்த இளைஞர்கள் இவ்விஷயத்தில் ஒரு புது வழி காட்டுவதற்கு இடமிருக்கிறது.

- கல்கி களஞ்சியம்
(வானதி பதிப்பகம்)

# "கமலே

'**ச**ச... ரிரி...கக...மம...' என பாடும் குட்டீஸ்களின் கோரஸ் விருகம்பாக்கத்திலுள்ள பின்னணிப் பாடகி மஹதியின் வீட்டை சுலபமாகக் காட்டிக் கொடுத்து விடுகிறது. வழக்கமான 'ஹாய், ஹவ் ஆர் யூ'க்களுக்குப் பிறகு வித்யா, ஐஸ்வர்யா, மகாலட்சுமி, காயத்ரி, ஜனனி, ராகவ் - இந்த டீன்களோடு மஹதியைக் கலாய்க்க விட்டோம்.




• ராகவ், ஜனனி, வித்யா, மஹதி, ஐஸ்வர்யா, காயத்ரி, மகாலட்சுமி

*ராகவ்:* ஹாரிஸ் ஜெயராஜ் மியூசிக்லியே அடிக்கடி பாடுறீங்களே, ஏதாவது கான்ட்ராக்டா?

**மஹதி:** ஆ! (முதல் கேள்வியிலேயே 'போல்ட்' ஆகிறார்). அவர் இசையிலே ஹிட் சாங்க்ஸ் பாடியதாலும், அவருக்கு என் வாய்ஸ் பிடிச்சதாலும் தொடர்ந்து பாட வாய்ப்புக் கிடைக்குது. அவ்வளவுதான்.

**ஜனனி:** ஓகே! உங்க செல்ஃபோன் பற்றிய சீக்ரெட்டான விஷயங்கள்...

**மஹதி:** (விழிகள் விரிய) ராஜா சாரோட 'ஹௌ டு நேம் இட்' தான்

## -மஹதியின் குளு குளு சாட்!

## ா-கால்ஷீட் ரெடி!”

என்னோட ரிங்டோன். ஒரு எஸ்.எம்.எஸ் இப்படி வந்தது - I love u ... ஆஹா யார் இதுன்னு தொடர்ந்து படிச்சா, ttappam -னு முடியுது. அதாவது ஐ லவ் ஊத்தப்பம்! ஹா...!

**ஐஸ்:** இசைக்காக என்னென்ன விட்டுக் கொடுத்தீங்க. ஐஸ்க்ரீம், கூல்ட்ரிங்ஸ் தவிர?



**மஹதி:** மீனாட்சி காலேஜ்ல டிகிரி பண்ணும்போது நிறைய கெடுபிடிகள் கொடுத்தாங்க. இசைதான் முக்கியம்னு வெளியேறிட்டேன். ரிக்கார்டிங் போறதுக்கு வசதியா, ஃப்ரெண்ட்ஸோட வெளிய சுத்தறது கிடையாது. அப்படியே ஒருசில நாள் போனாலும் தெரிஞ்சவங்க அம்மா கிட்ட போட்டுக் கொடுத்துடுவாங்க. அவங்களுக்கு இதெல்லாம் பிடிக்காது. ஆமா நீ ஏன் இங்கிலீஷ்லேயே கேள்வி கேட்கறே?

**வித்யா:** அவ

எப்பவும் செம பீட்டரிங்தான். ஆனா நான் அப்படியில்லே. இப்போ பி.ஏ. இங்கிலீஷ் லிட்டரேச்சர் படிச்ச பிறகு எம்.ஏ.ல தமிழ் இலக்கியம்தான் படிக்கப் போறேன்.

*(உணர்ச்சிவசப்பட்டு கை தட்டுகிறார் மஹதி)*

**மஹதி:** தெரியுமா, சமீபத்துல என் ஃப்ரெண்டுக்கு ரொம்ப நாள் கழிச்சி ஃபோன் பண்ணி, எங்கடி இருக்கேன்னு கேட்டேன். என் புருஷன் வீட்டுலன்னு கூலா சொன்னா. பாவி, பத்தொன்பது வயசுல கல்யாணம் பண்ணிகிட்டா. நான் எப்படியும் மூணு வருஷம் கழிச்சுதான் இதே மாதிரியான சர்ப்ரஸை அவளுக்கு கொடுக்கப் போறேன்.

**ஜனனி:** (டக்கென்று) சிங்கர் கார்த்திக்கோட அடிக்கடி பாடுறீங்க. அதனால...

**மஹதி:** போதும்பா, ஏகப்பட்ட கிசுகிசுக்கள் கிளம்பியாச்சு. நீ வேறயா? கமலை எனக்கு ரொம்பப் பிடிக்கும். அதையெல்லாம் கேட்க மாட்டியா?

**மகாலெட்சுமி:** சரி, கேக்கறோம். ஜொள்ளுங்க.

**மஹதி:** எங்க வீட்ல கொள்ளுப் பாட்டி வரைக்கும் கமலை ஜொள்ளு விட்டு பார்ப்போம். நடிக்கக் கூட என்னைக் கூப்பிடறாங்க. இப்ப சொல்றேன். கொட்டை எழுத்துல போடுங்க. கமலோட நடிக்க வாய்ப்புக் கிடைச்சா நான் உடனடியா கால்ஷீட் கொடுக்கத் தயார்.

**ராகவ்:** காயத்ரி, நீ இன்னைக்கு மௌன விரதமா? பே... பேப்பே... பே?

**காயத்ரி:** ஏய் (சவுண்டு விடுகிறார்...!)

**மஹதி:** சரி, பெண்கள் தவிர்க்க முடியாத விஷயம் எது?

**ஜஸ்:** கண்ணாடி! ஒருநாள் சாப்பிடாமக்கூட இருந்துடுவேன். கண்ணாடியில் அழகு பார்க்காம இருக்கவே முடியாது.

*(கமெண்ட்ஸ் நாலா பக்கமும் இருந்து விழுகிறது)*

**மஹதி:** ஓகே. ஓகே... இதுமாதிரி எனக்கு முன்னாடி இருந்தது. டி.வி சீரியல்கள். ரிக்கார்டிங் டைம்ல 'சித்தி' பார்க்காம டென்ஷனாகி, அம்மாவை, பார்க்கச் சொல்லி கதை கேட்பேன். அப்படி பைத்தியமா இருந்தவ நான். இப்பவெல்லாம் சீரியல் பக்கமே போறதில்லை. எவ்வளவு சந்தோஷமா இருக்கேன் தெரியுமா? ஹி... ஹி..ஹி...!



**வித்யா:** மஹதி, உங்க 'ஆட்டோ கிராஃப்'புல காதல் வந்துச்சா வந்துச்சா?

**மஹதி:** ம்... (உற்சாகமாகிறார்) அந்த ஸ்கூல் வயசுல கூடப் படிக்கும் பாய்ஸ் மீது க்ரஷ் இருந்தது உண்மை. அதெல்லாம் அந்த வயசுக் கோளாறு இல்லையா? முதன்முதலா நான் பாடின 'ஐய்யய்யோ புடிச்சிருக்கு' பாட்டை வைச்சு, ஃபேமிலி ஃப்ரெண்டு ஒருத்தர் "இத்தனை தடவை புடிச்சிருக்குன்னு சொல்றியே. என்னை அப்படி சொல்லேன்"னு சொல்ல, நான் ஆடிப் போயிட்டேன்.

**ராகவ்:** நல்லவேளை! நீங்க 'மன்மதராசா' பாடல! (அதற்கும் சில்லரைகள் ஏகத்திற்கு விழுகின்றன)

சந்திப்பு: **ச. ந. கண்ணன், முகில்**
படங்கள்: **ஷிவ்**

இரவு எட்டு மணிக்கு நாராயண வாத்தியார் டெலிபோன் செய்தார். "என்ன சௌக்யமா?" எனக் குசலம் விசாரித்தேன்.

"உம்.. சௌக்யம்தான். அடுத்த புதன் கிழமை கிருஷ்ண த்விதியை; உங்கள் தோப்பனார் சிராத்தம். வழக்கம்போல் எல்லா ஏற்பாடுகளும் செய்து வைத்துக் கொள்ளுங்கள். நாங்கள் சரியாகப் பத்து மணிக்கு வந்துடறோம்."



"யார் போனில்?" என்று கேட்டபடி வந்தாள் என் மனைவி கோகிலம்.

"வாத்தியார் பேசறார். அடுத்த வாரம் புதன்கிழமை அப்பா சிராத்தம் வருதாம்" - நான் பேசுவது அடுத்த பக்கம் கேட்காமல் டெலிபோனை மூடிக் கொண்டு அவளுக்குப் பதில் சொன்னேன்.

'அப்புறம் பேசுவதாகச் சொல்லி போனை வையுங்கள்" என்று கைகளால் ஜாடை காட்டியபடி சொன்னாள் கோகிலம்.

"எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு நான் உங்களை டெலிபோனில் கூப்பிடுகிறேன்" என வாத்தியாரிடம் சொல்லிவிட்டுத் தொடர்பைத் துண்டித்தேன்.

# கண்ணாடி மனசு

"அடுத்த புதன்கிழமை கங்கா வீட்டுக் கல்யாணம். மாப்பிள்ளை அழைப்பிற்கே கூப்பிட்டு இருக்கிறான்."

"அப்பா சிராத்தம்..." என இழுத்தேன்.

"எங்கப்பா சிராத்தம் பண்ணி நான் பார்த்ததில்லை. என் அண்ணாவும் இப்ப எதுவும் செய்யறதில்லே. அவர்கள் என்ன கெட்டா போய்விட்டார்கள்.."

"ஆரம்பத்திலிருந்து செய்யாமல் இருந்துவிட்டால் பரவாயில்லை. இத்தனை நாள் செய்துவிட்டு, இப்போ நிறுத்தினால்..."

"ஒன்றும் ஆகாது... அனாவசியமாக இரண்டாயிரம் ரூபாய் செலவு மிச்சப்படும்."

"தம்பி டெலிபோனில் கூப்பிட்டு 'எப்போ வரட்டும்'னு கேட்பானே."

"அத்தனை அக்கறை இருந்தால் அவரு இனிமேல செய்துவிட்டுப் போகட்டும்" என்றாள் கோகிலம்.

தம்பி கேட்கமாட்டான் என்ற தைரியம் அவளுக்கு. எத்தனையோ தடவை, ஏதோ சாக்கு போக்கு சொல்லி வராமல் இருந்திருக்கிறானே...

ஆனால் அம்மா கேட்பாளே...

போன மாதம் முதல் தேதி முதியோர் இல்லத்தில் பணம் கட்டப் போனபோதுகூட ஞாபகப்படுத்தினாளே...



**போ**ன வருஷம் வரை அம்மா என்னுடன்தான் இருந்தாள்... கோகிலத்திற்கு அதிகப்படி வேலை வைக்கமாட்டாள். காலை நான்கு மணிக்கெல்லாம் எழுந்திருந்து, எலும்புக்கூடு போல் பின்னியிருந்த தன் உடம்பை வருத்திக்கொண்டு, எல்லா வேலைகளையும் அவளே செய்து முடிப்பாள்.



நானும் கோகிலமும் வேலைக்குப் போகிறவர்கள். வயதான அம்மாவை வீட்டில் விட்டுப் போக வேண்டுமே என்ற போலிக் கரிசனத்துடன், அம்மாவை முதியோர் இல்லத்தில் சேர்த்தாயிற்று.

என்ன செய்யலாம்!

என்னையே நான் நொந்து கொண்டேன் - கோகிலத்தை மறுத்துப் பேச நாக்கு எழவில்லை.

அன்னம்

அப்படியே பழகிவிட்டது. 'சரி, சரி' என்று சொல்லியே, அவளை வளர விட்டுவிட்டேன்.

சில சமயம் எனக்கு என் மேலேயே ஆற்றாமை வரும். என்ன செய்ய? அவள் சொல்வதை எதிர்த்து மாறாகச் செயல்பட்டால், வீடு சரியாக ஒரு மாதம் பிடிக்கும்.

மறுநாள் மதியம் கோகிலம் என் ஆபீஸுக்கு டெலிபோன் செய்தாள்.

"மத்தியானம் மறுபடியும் வாத்தியார் ஞாபகப்படுத்தினார். இந்தத் தடவை ஊரில் உங்கள் தம்பி சிராத்தத்திற்கு ஏற்பாடு செய்திருப்பதாகச் சொல்லி விட்டேன்."

கோகிலம் அதில் எல்லாம் கெட்டிக்காரி. தன் மேல் பொல்லாப்பு வராமல் பார்த்துக் கொள்வாள்.

அடுத்த திங்கட்கிழமை காலை.

யாரோ வாசலில் வந்து நின்றார்கள்.

"என்ன?" என விசாரித்தேன்.

அம்மாவின் பெயரைச் சொன்னார். அவளைச் சேர்த்திருந்த முதியோர் இல்லத்தைக் குறிப்பிட்டார்.

நான் பதறிப் போனேன். அம்மாவிற்கு விபரீதமாக...

வந்தவர் தமது கையிலிருந்த பிளாஸ்டிக் கவரை எடுத்தார்.

"நேற்று நான் திருவேற்காட்டுக்குப் போயிருந்தேன். நேற்று உங்கள் மனைவி பிறந்த நட்சத்திரமாம். ஒரு அர்ச்சனை செய்து பிரசாதத்தை உங்களிடம் கொடுத்து விட்டு வரச் சொன்னார்."

என்னை மீறி என் குரல் உயர்ந்தது.

"கோகிலம்... பிரசாதத்தை வாங்கி உள்ளே கொண்டு வை. ஸாருக்குக் குடிக்க காபி எடுத்து வா" என்றேன்.

சவுக்கைச் சண்டி, எழும் சத்தத்துக்கு பயப்படும் ஸர்க்கஸ் சிங்கம் போல, கோகிலம் சொன்னபடி செய்தாள்.

மௌனமாக நான் ஆபீஸுக்குப் புறப்பட்டேன், கோகிலமும்தான். வாசல் வரை வந்த அவள், தயங்கித் தயங்கி என்னிடம் சொன்னாள்.

"மத்தியானம் நானே வாத்தியாரைக் கூப்பிட்டு அடுத்த புதன்கிழமை வரச் சொல்கிறேன்" என்றாள். ●



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதைகள் :**

**குரல்**
- வதானந்த்

**அடையாளம்**
- க.சி. சிவகுமார்

**எங்கிருந்தோ வந்தான்**
- வேதா கோபாலன்

**சம்சாரி மனசு**
- பி. மாரிமுத்து

**பெண்ணியம்**
- ரம்யா நாகேஸ்வரன்

**பருந்துகளும் குஞ்சுகளும்**
- மகேஷ்வரன்

**உங்கள் நண்பர்**
- பாலுசத்யா

**அடையாளம்**
- திருவாரூர் பாபு

**ஆறுதல்**
- சி.வி. கார்த்திகேயன்

**நினைப்பதெல்லாம்**
- படுதலம் சுகுமாரன்

**சுப்புணி மாமா**
- ஆர். பிரகாஷ்

**அய்யனார் உறக்கப்பாட்டு**
- நெய்வேலி பாரதிக்குமார்

**ஆசை ஆசையாய்**
- விஜயலக்ஷ்மி ஸ்ரீதர்

**கண்ணுக்குள் கனவு**
- பி. ராஜ்பாரதி

# பொறுக்காத கூடு

அதிகாலைக் குளியலுக்கு
சுடுதண்ணீர் கேட்டவனே
புதிதான சீருடையை
தேய்சூட்டில் போட்டவனே
கொதிக்கின்ற இட்டிலியை
விரல் வேகப் பிட்டவனே
ஆடிவெள்ளி அம்மனுக்கு
சூடத்தீ தொட்டவனே

பொறுக்கின்ற சூடெல்லாம்
சுகமென்று சொல்லிட்டாய்
கன்னத்தில் முத்தமிட்டு
கண்ணடித்துக் கையசைத்தால்
காத்திருக்கும் சூடொன்று
தெரியாமல் புறப்பட்டாய்
விறகுக் கட்டையாக
வீடு வந்து சேர்ந்திட்டாய்

ஆவி போகையிலே
அம்மாவை நினைத்தாயா
கூவிக் குரல் கொடுத்து
கூப்பிட்டுக் களைத்தாயா
பாவி என் மேலே
பாழ் நெருப்பு பாயாதா
தாவி மேல் வந்து
தங்கத்தைப் பார்ப்பேனா!

- நாகேந்திர பாரதி

# திடீர்ப் பரிசுப் போட்டி-2

# முடிவு

சீருடைச் சிறுவனின் புகைப்படத்தை வெளியிட்டு, பொருத்தமாக ஒரு கவிதை எழுதச் சொல்லிக் கேட்டாலும் கேட்டோம்..!

அடேயப்பா... இவ்வளவு கவிஞர்களா, இத்தனை கற்பனைகளா என்று வியக்க வைத்து விட்டீர்கள். வெற்றி பெற்ற வரிகள் உங்கள் பார்வைக்கு...

**ரூ.200 பரிசு பெறும் கவிதை**

"வாசக்காலுல நிக்காதடா, அது சாமிடா" பாட்டி கத்தினாள்.

"வாசல் குறுக்கே நிற்காதடா, லட்சுமி வரமாட்டாள்" தாத்தா சொன்னார்.

"படிக்கறதை விட்டுட்டு ஏண்டா வாசல்ல நிக்குற?" அப்பா கேட்டார்.

"கதவிடுக்குல கையை நசுக்கிக்காதேடா" என்றாள் அம்மா மட்டும்.

- **கிருஷ்ணகிரி வீ. விஷ்ணுகுமார்.**

## பிரசுரத்துக்குத் தேர்வானவை

நாலாவது மாடியில்,
கீற்றுக் கொட்டகை என் வகுப்பறையாம்
அப்பா நடையாய் நடந்து
கிடைத்த இடமாம்!
மழை வந்தால், விடுமுறையாம்,
மேகம் எல்லாம் பக்கமாம்.
நல்ல காற்று வருமாம்.
அளக்கிறார் அம்மா...
அங்கே 'நெருப்பு' வருமா?

- **காஞ்சிபுரம் பி.கே. தங்கராஜ்.**

தலைவாரிப் பூச்சூடி
பள்ளிக்குப் போன
அக்காவுக்கு
கற்பூர புத்தினு
அம்மா சொல்லுவா!
சமைக்கப் பற்ற வைத்த
நெருப்புக்கு
சட்டுனு உணவானவளை
வாழையிலையில் கிடத்தியதை
சகிக்கவில்லை மனசு!

- **தஞ்சாவூர் ராகவ். மகேஷ்.**

வீ(கூ)ட்டு வாசலில்
வெள்ளைச் சீருடையில்
பிள்ளைப் புறா
எதிர்காலக் கனவுகளை
இருவிழிகளில் குவித்து
இரு கைச் சிறகை
அகலமாய் விரித்து,
பருவத்தே பயிர் செய்யும்
பள்ளிப் படிப்பிற்கு



பயணிக்கத் தயாராகிறதோ!

**- கும்பகோணம் சாமிநாத மூர்த்தி**

பள்ளிக்கூடம் திறந்தாச்சு
பட்ஜெட்டும் போட்டாச்சு
பாதி விலைப் பொருளெல்லாம்
மீதி வழியில உயர்த்தியாச்சு
எங்க பள்ளிக் கட்டணம் குறையல
பாடச் சுமையும் குறையல
என்னோட வெள்ளைச் சட்டை போல
இதுக்கு வெள்ளை அறிக்கை குடுக்கணும்
இதுக்கெல்லாம் பதில் சொல்லாம
உள்ளே போகக் கூடாது
அமைச்சரான அப்பாவே!

**- விருதுநகர் ஜி. மகேஷ்**

'மம்மி' என்றேன், அம்மா
மயங்கித்தான் போனாள்.
'டாடி' என்றேன், அப்பா
ஆனந்தமாகிப் போனார்
'ஆன்ட்டியும் அங்கிளும்'
டாடா சொல்லித் தந்தார்கள்
எல்லோரும் போயாச்சு
தமிழை செம்மொழியாக்கும்
ஊர்வலத்துக்கு!

**- தேவூர் ஆர். கிருஷ்ணமூர்த்தி**

யாரும் சொல்லாமலே
சந்தமின்றி மரபின்றி
கவிதையொன்று
வீட்டு வாசலிலே
வழி மறித்து நிற்குது...!

**- இளையான்குடி எம். ஜான்**

இந்தியக் கடன் தொகையில்
ஒவ்வொருவரும்
இரண்டாயிரம் கடனாளி
நீங்களும் அதில் அடக்கம்
உள்ளே
விடுவதாய் இல்லை யாரையும்...!
என் கான்வென்ட்டுக்கு
கட்டத்தான்
கடன் வாங்கியிருந்தார்
அதற்காக
பாரம் தூக்கிவிட்டு
படுத்திருக்கும் அப்பாவை
அடிக்கடி எழுப்பாதீர்...!

**- புதுக்கோட்டை தீபம் முத்து**



**மி**ஸ்டர் எக்ஸின் பக்கத்து வீட்டுக்காரர் லாரி வைத்திருந்தார். நமது மிஸ்டர் எக்ஸ் தினமும் லாரியின் அருகில் சென்று சப்தமிட்டார். இதைக் கவனித்து வந்த பக்கத்து வீட்டுக்காரர் எக்ஸிடம் "ஏன் இப்படிச் செய்கிறாய்?" எனக் கேட்டார். அதற்கு மிஸ்டர் எக்ஸ், அவரை லாரி அருகே கூட்டிச் சென்று லாரியில் எழுதியிருந்த வாசகத்தைப் படிக்கச் சொன்னார். அங்கே எழுதியிருந்த வாசகம் இதுதான். 'தினமும் என்னை கவனி, ஒலி எழுப்புக!'

- நாமக்கல் இரா. கமலக்கண்ணன்

**ஒ**ரு பைத்தியக்கார ஆஸ்பத்திரி, அங்கே ஒருத்தன் ஒரு ஸ்டூல் மீது அமர்ந்து, "பே, பே" என்று மாடுகளை விரட்டும் பாவனையிலும், தார்க் குச்சியை வைத்து மாட்டின் பின்புறம் குத்துவது போன்ற செய்கையிலும் இருந்தார். இதைக் கவனித்த ஒருவர் அருகில் இருந்த மிஸ்டர் எக்ஸிடம், "ஏன் இப்படிச் செய்யறாரு?" என்று கேட்க, "ஒரு விபத்துல இவரோட மாடுகள் செத்துப் போனதுலருந்து இப்பிடி ஆயிட்டாரு!" என்றார் மிஸ்டர் எக்ஸ்.

"மாடுகள் எதுவும் இங்கே இல்லை... வெறும் ஸ்டூல்தான் இங்கே இருக்குதுன்னு நீங்க எடுத்துச் சொல்லக் கூடாதா?"ன்னு அவர் கேட்க, மிஸ்டர் எக்ஸ் "அது முடியாதுங்க. இவரோட மாடுகள குளிப்பாட்டறதுக்கு தினமும் இருபது ரூபா தர்றாரே!" என்று சொன்னாரே பார்க்கலாம்!

- மதுரை டி. ஆனந்தபிரியா






**ஒ**ரு நூலகத்தின் வாசலருகே நூலகர் "மேஜை மேல வச்சிருந்த என் மணிபர்ஸை எவனோ அடிச்சுட்டுப் போய்ட்டான்" என்று புலம்பியபடி வந்து கொண்டிருந்தார். அங்கு நின்றிருந்த மிஸ்டர் எக்ஸ், "பர்ஸை ஒரு பயல் எடுத்துட்டுப் போனதை நான் பார்த்தேன்" என்றார்.

"ஒரு சத்தம் கொடுத்திருந்தா என்ன?" என நூலகர் கேட்க, "உள்ளே 'சப்தம் செய்யாதீர்'னு போர்டு வச்சிருக்கீங்களே!" என்றார் எக்ஸ்!

- வசந்தி வள்ளுவன்,
மதுரை - 10

# ஒலி எழுப்புக!

நான்கு மணி நேரம் பயண நேரம் பிடிக்கும் ஒரு ஊருக்குச் செல்ல பேருந்துக்காகக் காத்திருந்தார் மிஸ்டர் எக்ஸ். அவரை வழியனுப்பி வைக்க, அவருடன் அவரது நண்பரொருவரும் நின்றிருந்தார். அப்போது, பயணத்தின்போது படிப்பதற்காக, அந்த வாரப் பத்திரிகையொன்றை பக்கத்துக் கடையிலிருந்து வாங்கினார் மிஸ்டர் எக்ஸ். இதைக் கவனித்த நண்பர் "இந்த புக்கை ரெண்டு மணி நேரத்துல படிச்சு முடிச்சிடலாமே... மீதி இரண்டு மணி நேரம் என்ன பண்ணுவீங்க?'' என்றார். சற்று யோசித்த மிஸ்டர் எக்ஸ், "நீங்க சொல்றது சரிதான்'' என்றபடி விறுவிறுவென அதே கடைக்குச் சென்று, ஏற்கெனவே வாங்கிய அதே வாரப் பத்திரிகையை இன்னொன்று வாங்கிக் கொண்டார்.

- கிருஷ்ணகிரி வீ.விஷ்ணுகுமார்




சிவப்பு விளக்கு எரிந்தும் சிக்னலில் நிற்காமல் மோட்டார் சைக்கிளில் சென்ற மிஸ்டர் எக்ஸை, போலீஸ்காரர் தடுத்து நிறுத்தி, ''என்ன, சிக்னலை கவனிக்கவில்லையா?'' என்றார். அதற்கு மிஸ்டர் எக்ஸ், ''சார் சிக்னலை கவனித்தேன். ஆனா உங்களைக் கவனிக்கவில்லை'' என்றார்.

- திருச்சி செல்வன்ஜி





ஒரு நாள் ரேஸுக்குப் போக விரும்பிய எக்ஸ், ரேஸ் மைதானத்துக்குப் போன் செய்தார், விவரங்களை அறிவதற்காக. 'இஸிட் ரேஸ் கோர்ஸ்?' என்று கேட்க 'அஃப்கோர்ஸ்!' என்று பதில் வர, 'ஸாரி ராங் நம்பர்' என்று போனை வைத்துவிட்டார் எக்ஸ்!

- சென்னை ர. மாலதி

# 2. விக்கிரம வரையன்

எந்த மாணிக்கம் உக்ரோதயம் என்று பெயரிடப்பட்டு மூன்று தலைமுறைகளுக்கு முன்பு வரை சோழர் மணிமகுடத்தில் ஜொலித்ததோ, எதைப் பெறுவதற்காக பல்லவ நந்திவர்மன் சாளுக்கியருடனும், கங்கர்களுடனும் பெரும்போர் புரிந்தானோ, எந்த மாணிக்கத்தை மீட்டு வரும் முயற்சியில் அந்தச் சோழ வீரன் உயிர் துறந்தானோ, அந்த மாணிக்கம் பிரவாகத்தில் விழுந்து விடும் அபாயத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. அபகரித்துச் சென்ற சோழ வீரனைப் பற்றி அறிய குடந்தையின் ஊர்த்தலைவரைத் துன்புறுத்தி, நகரை இரு தினங்களாகச் சல்லடை போட்டுச் சலித்துக் கொண்டிருக்க, வழியில் சந்தித்த கிராமத்து வாலிபனின் துணி முடிப்பிலிருந்து, தாங்களும் பல்லவ மகாராணியும் தேடி வந்த பொருள் வெளிப்பட்டதைக் கண்ட ராஷ்டிரகூடர்கள் அடியோடு திகைத்தே போயிருந்தார்கள்.

கீழே உருண்டு மரத்தில் மோதி எழுந்து நின்ற பராந்தகனின் அசைவு, அவர்களை சுயநினைவுக்குக் கொண்டு வரவே, "அவனைப் பிடித்துக் கட்டுங்கள்" என்று இரைந்தான் வீரர் தலைவன்.

வாட்களை உருவிக் கொண்டு தன்னை நெருங்கியவர்களை வெறித்த பராந்தகன் சித்தத்தில், அந்தச் சோழ வீரன் உயிர் பிரியுமுன் கூறிய வார்த்தைகள் எழுந்து பலமாக ஒலித்தன. ஒரே தாவலில் எம்பிய பராந்தகன், தான் மோதி விழுந்த மரத்தின் கிளையொன்றை முறித்து, தன்னை நெருங்கியவர்களை நோக்கிப் பலமாக வீசத் தொடங்கினான். தாங்கள் எண்ணியது போல் அந்த வாலிபன் ஒன்றும் அத்தனை அப்பாவியல்ல என்பதைப் புரிந்து கொண்ட ராஷ்டிரகூடர்கள், அவன் வீசிய கிளையை இரண்டொரு கணங்களில் துண்டுகளாக வெட்டித் தள்ளிவிட்டு அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். பராந்தகனின் கரங்களிலும், தோள்களிலும் வாட்கள் பதிந்து இழுக்கப்பட்டன. உடலெங்கும் குருதி வழிய, கண்மூடித்தனமான ஆவேசத்துடன், சிறு கழியாகிவிட்ட அந்தக் கழியைச் சுழற்றிய பராந்தகன், வீரர் தலைவன் ஓங்கிய வாளுடன் நெருங்குவதைக் கவனித்தான்.

எதிர்க்கரையிலிருந்தும் வீரர் பலர் ஓடி வருவதையும் கவனித்தவன், கிளையை ஓங்கிக் கொண்டு வீரர் தலைவன் மீது பாய்ந்தான். கிளை வீரர் தலைவனின் முகத்தில் தாக்கவும், வீரர் தலைவனின் வாள் பராந்தகனின் விலாப்புறத்தில் பாயவும் சரியாக இருந்தது. ஒருமுறை தள்ளாடிய பராந்தகன், மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டு மூங்கிற் பாலத்தை நோக்கிப் பாய்ந்தான். பின்னாலிருந்து அவன் முதுகில் குறுவாளொன்றும் பாய்ந்தது. தூக்கி எறியப்பட்டவன் போல் பாய்ந்தவன், கழிநுனியில் ஊசலாடிக் கொண்டிருந்த ஆரத்தை ஒரு கையால் பற்றிக் கொண்டு, காவிரியின் பிரவாகத்தில் தலைகுப்புற விழுந்தான்.

எழுந்து ஓடிவந்த வீரர் தலைவனுக்கும், மற்ற வீரர்களுக்கும் நீர்ச் சுழலில் கரைந்து மறைந்த குருதி மட்டுமே புலப்பட்டது. கரையோர நாணற் புதர்களிலும், ஓரங்களிலும் எத்தனை தேடியும், காயங்களுடனும், முதுகில் பாய்ந்த குறுவாளுடனும் விழுந்து விட்ட பராந்தகன் கிடைக்கவேயில்லை. அவன் மடிந்திருக்க வேண்டும் என்று எண்ணிய ராஷ்டிர கூடர், நீரிலும் குதித்து அடிப்

மகுட

விஷ்வக்ஸேனன்



# வைரம்

நட்சத்திரக் கூட்டம் மேற்கில் நன்றாகச் சரிந்து, இரவின் மூன்றாவது ஜாமம் முடியப் போவதை அறிவித்தபடி, கோரைகளுக்கு நடுவே அசைவற்றுக் கிடந்த வாலிபனின் உடலை அச்சத்துடனும், பரிதாபத்துடனும் பார்த்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டிருந்தது. கிழக்கிலிருந்து வந்த மேகங்களும் நீர்த் துளிகளைத் தெளித்து, அவனைச் சுய நினைவுக்குக் கொண்டு வர முயன்று பலனின்றி நகர்ந்தன.

பகுதியிலும் தேடினர். கையில் கிடைத்த மாணிக்கத்தை நழுவ விட்டு விட்ட வீரர் தலைவன், வாலிபன் கூறிய வண்டாழஞ் சேரிக்குச் சென்று, தக்கபடி விசாரித்து வர வீரர்களுக்கு உத்தரவிட்டான்.

புஷ்பக் கொத்துபோல் தெரிந்த புஷ்ய

ஆற்றில் துடுப்புகள் துழாவும் ஒலி மெல்ல எழுந்து, சற்று நேரத்தில் சிறு படகு ஒன்று புலப்பட்டது. இருளையும் சாரலையும் அசட்டை செய்து, படகில் அமர்ந்து வந்த மனிதனின் விழிகள் இருளில் அனல் துண்டங்களைப் போல் ஜொலித்து, கரைப் பகுதிகளைத் துழாவின.

மங்கிய நிலவொளியில் தெரிந்த அவன் முகம் நடுத்தர வயதைக் கடந்தவன் என்பதைத் தெரிவித்தாலும், வலுவான அவன் கரங்களும், இரும்புச் சலாகை போல் அகன்று கிடந்த மார்பும் உறுதியையும், இடைவிடாத பயிற்சியையும் காட்டின. அவன் கழுத்திலாடிய சங்கிலியும், அதில் இணைக்கப்பட்டிருந்த பெரும் புலிப் பதக்கமும், இடையில் நீண்டு கிடந்த வாளின் பிடியிலிருந்த கற்களும், அவன் சாதாரண மனிதனல்ல என்பதை அறிவுறுத்தின.

துடுப்புகளை நிலையாகப் பிடித்து படகை மட்டுப்படுத்திய அந்த மனிதனின் கூர்விழிகள், கோரைகளுக்கு நடுவேயிருந்து நீர் மட்டத்தில் மிதந்து ஆடிக் கொண்டிருந்த பராந்தகனின் ஒரு காலைக் கவனித்துப் பளிச்சிட்டன.

சாளரமொன்றினருகே நின்று, எதிரே விரிந்த நீலக்கடலையும், அதில் ஆடி நின்ற பல நாட்டுக் கலங்களையும் வெறித்துக் கொண்டிருந்த பராந்தகனது முகத்தில் தெளிவு சற்றுக் கூடியிருந்தது. தான் உயிர் பிழைத்ததே வெகு அதிசயமாயிருக்க, அவன் உடைகளும், கச்சையும், அதில் தான் குடந்தைக்கு வந்த போது கொண்டு வந்ததை விட அதிகமான பொற்காசுகளுடன் துணி முடிப்புமிருந்தது இன்னும் அதிசயமாயிருந்தது. போதாக்குறைக்கு அவன் மீட்டு வந்த பொன்னாரமும் பட்டுத் துணியொன்றில் சுற்றப்பட்டு கச்சையிலிருந்தது. தன்னைக் காப்பாற்றியவரைப் பற்றி அறிய அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகளேதும் பலனளிக்கவில்லை. மேல்

*"மன்னர் ரொம்ப சிக்கனமாயிட்டார்!"*

*"என்ன சொல்றே?"*

*"கவிஞர்கள் ரெண்டு வரிக்கு மேல கவிதை பாடக் கூடாதுனு சொல்லிரேட்டும் நிர்ணயிச்சுட்டார்!"*

*— அம்பை தேவா*

பராந்தகன் மீண்டும் கண் விழித்த போது மேலே ஓலைகளால் வேயப்பட்ட கூரையும், எதிரில் யாரோ இருவர் நிற்பதும் மங்கலாகப் புலப்பட்டன. தெளிவற்ற சொற்களும் காதில் விழுந்தன. "பிரபு, இவன் உடல் இரும்பாயிருக்க வேண்டும். காவிரியின் பிரவாகமும் இவனுக்குப் புதிதில்லை. சஞ்சீவினி மூலிகையை இவன் உடல் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இன்னும் அறுபது நாழிகைக்குள் எழுந்து அமர்ந்து..." மேற்கொண்டு சொற்கள் விழவில்லை பராந்தகனுக்கு. நினைவை இழந்தான் அவன்.

பெரும் ஸர்ப்பமொன்று படுத்துக் கிடப்பது போல் நீண்டு வளைந்து கிடந்த அந்தக் கடற்கரையில், துறைமுகத்திலிருந்து அரைக்காத தூரத்தில் தொடங்கிய விடுதிகள், வெகு தூரம் வரை நீண்டு கிடந்தன. தென்கோடியிலிருந்த விடுதியொன்றின் மேற்புரத்து தளத்து அந்த அறையின் வாயிலில் ராட்சதன் போல் காவலுக்கு நின்றிருந்த யவனன், பராந்தகனை அறைக்கு வெளியே அனுமதிக்க மறுத்தான். எல்லாக் கேள்விகளுக்கும் தலைவணங்கி விட்டுச் சிரிப்பதைத் தவிர வேறு பதிலும் பேச மறுத்தான். கீழ்த்தளத்தில் வணிகராகத் தெரிந்த பலர் வருவதும் போவதுமாயிருப்பது, பேச்சுக் குரல்களால் புலப்பட்டது. மூலிகைகளும், குளிகைகளையும், உணவையும் கொண்டு வந்து அளிப்பதைத் தவிர, இரவும் பகலும் காவல் நிற்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தான் யவனன்.

இரண்டாவது தினம் மாலையில் விடுதியில் மாற்றம் தெரிந்தது. தடதடவெனப் புரவிகள் பல வாயிலில் வந்து நின்று, திடகாத்திரமான பலர் உள்ளே நுழைந்தார்கள். கனத்த குரல் ஒன்றும் கீழ்த்தளத்தில் ஒலித்தது. சற்றுக் கழித்து திடமான காலடிகள் படிகளில் ஒலித்தன.

யவனனது தலை தரையைத் தொட்டு விடுவது போலத் தாழ்ந்து நிமிர்ந்தது.

திடமான சரீரத்துடனும் ஆஜானுபாகுவான வலிய கரங்களுடனும், மார்பில் புலிப்பதக்கம் கொண்ட சங்கிலி ஊசலாட, உள்ளே நுழைந்தார் அந்த மனிதர். அசல் வேங்கையின் விழிகளாகவே ஜொலித்த அவரது விழிகளில் பராந்தகன் திடமாக அமர்ந்திருப்பதைக் கண்டதும் மகிழ்ச்சி பரவியது.

''நன்றி பராந்தகா, மிக்க நன்றி'' முகமெங்கும் மகிழ்ச்சி பொங்க கூறவும் செய்தார் அவர்.

பராந்தகன் முகத்தில் குழப்பம் விரிந்தது.



''ஐயா, தாங்கள்தான் என்னைக் காப்பாற்றியவராக இருக்க வேண்டும்..'' பாதிக் கேள்வியாகக் கேட்டான் பராந்தகன்.

''காவிரிக் கரையிலிருந்து உன்னை இங்கு கொண்டு வந்தது நான்தான். உன்னை உயிர் பிழைக்க வைத்தது அந்த ஆண்டவனின் கருணை'' என்றார் அவர் முறுவலுடன்.

''அப்படியானால் நானல்லவா தங்களுக்கு நன்றி கூற வேண்டும்?''

அந்த மனிதர் மெல்லச் சிரித்தார். ''பராந்தகா, உனக்கு வாள் வீசத் தெரியுமா?'' என்றார்.

''இல்லை ஐயா, தெரியாது.''

''வேறு போர்ப் பயிற்சியேதும் உண்டா?''

''இல்லை ஐயா, எனக்கு வாளைப் பிடிக்கவும் தெரியாது. வேறெந்தப் பயிற்சியும் பெற்றதில்லை.''

''இதுவரை வாளைப் பிடித்துமறியாத நீ, ராஷ்டிரகூடவீரர் பதின்மரை வெறும் மரக்கிளையுடன் எதிர்த்து சண்டையிட்டு காயப்படுத்தியிருக்கிறாய். எந்த வினாடியிலும் உன் உயிர் பறிக்கப்பட்டிருக்கலாம். அத்தனை பேரையும் மீறி, அந்த மாணிக்க ஆரத்தையும் மீட்டுக் கொண்டு தப்பியிருக்கிறாய். அது வெறும் மாணிக்கமல்ல பராந்தகா. என் உயிரையும், பல ஆயிரம் சோழ வீரர் உயிரையும் விட மேலானது. சோழ மன்னரின் மகுடத்தை அலங்கரித்தது. மூன்று தலைமுறைகளுக்குப் பின் மீண்டு வந்திருக்கும் உக்ரோதயம் அது. அதை மீட்டு வந்த உனக்கு நன்றி கூற வேண்டியது என் முதல் கடமை'' - அந்த மனிதரின் வார்த்தைகளில் உணர்ச்சி ததும்பியது.

பராந்தகன் மெல்ல வினவினான், ''ஐயா, தாங்கள் யாரென்பதை நான் அறியலாமா?''

வெகு சகஜமாக வந்தது அவரது பதில், ''பெண்ணாகடத்துப் போரில் மறைந்த செங்கட்சோழரின் படையைச் சேர்ந்தவன் நான். என்னை விக்கிரம வரையன் என்று அழைப்பார்கள்.''

பதறி எழுந்தான் பராந்தகன். என்னதான் வயலும், வாய்க்காலுமே கதியென்று வாழ்க்கை நடத்தினாலும், சோழ நாட்டில் நடப்பவைகளை தந்தையார் மூலமும், ஊரார் மூலமும் ஓரளவு அறிந்திருந்தவனுக்கு, எதிரிலிருப்பவர் யாரென்பது புரிந்தது.

பாண்டிய வரகுணனுடன் சேர்ந்து, சோழ மன்னர் பல்லவ நந்திவர்மனுடன் நடத்திய போரிலும், களப்பிரரை ஒடுக்குவதிலும் பெரும் சாகசங்கள் புரிந்தவரும், சோழ மன்னன் மறைந்த பின்னும் ராஷ்டிரகூடரின் கரங்களை வெகுவாகத் தேக்கி வைத்திருப்பவரும், அரிசிலாற்றங்கரை மண்டபத்தில் அந்த சோழ வீரன் எவரிடம் பொன்னாரத்தை ஒப்படைக்கக் கேட்டுக் கொண்டானோ, அந்த சோழர் படைத்தலைவர்தாம் தன்னெதிரில் அமர்ந்து சகஜமாக உரையாடிக் கொண்டிருக்கிறார் என்பது புரிந்தது பராந்தகனுக்கு.

அவன் கரங்கள் மாணிக்க ஆரத்தை

எடுத்து பயபக்தியுடன் அவரை நோக்கி நீட்டின. "ஐயா, இதைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றான் மெல்ல.

படைத்தலைவரின் வலிய கரங்கள் நீண்டு அந்த ஆரத்தை தொட்டு விழிகளில் ஒற்றிக் கொண்டன. அடுத்து அவர் குரலும் பெரும் உணர்ச்சியுடன் ஒலித்தது. "பராந்தகா, இதனுடன் பெரும் அரசுகள் பின்னிக் கிடக்கின்றன. ராஷ்டிரகூடரிடமிருந்து விடுபட்டு சோழநாடு சுதந்திரம் பெறும். அப்போது சோழர் மணிமுடியை மீண்டும் இது அலங்கரிக்கும். இது உன்னிடமே அதுவரை இருக்கட்டும். இதைப் பாதுகாத்து வைத்திருக்கத் தகுந்தவன் தான் நீ."




சற்றே தயங்கிய பராந்தகன், "உத்தரவு படைத் தலைவரே" என்று ஆரத்தை மீண்டும் கச்சையில் பத்திரப்படுத்திக் கொண்டான்.

"பராந்தகா, எனக்கு இன்னும் கடமைகளும், உடன் அபாயமும் காத்துக் கிடக்கின்றன. நானாக வந்து கேட்கும் வரையில் இதைப் பாதுகாத்து வைத்திரு. சோழ மன்னர் மணிமகுடத்தில் என்றும் இருக்கப் போகும் இந்த மாணிக்கத்துடன், அதை மீட்டு வந்து பாதுகாத்த உன் பெயரும், சோழர் சரித்திரத்தில் என்றும் நிலைத்திருக்கும்."

உணர்ச்சிவசப்பட்டு நின்ற படைத்தலைவரும், ஏதோ பெரும் சுமை தன் மீது சுமத்தப்பட்டுவிட்டதாகவும், அதைப் பெருமையாகவும் எண்ணிய பராந்தகனும் அப்படியே சற்று நேரம் நின்றிருந்தார்கள்.

மெல்ல தன் நிலைக்குத் திரும்பிய பராந்தகன், "படைத் தலைவரே, நான் ஊர் திரும்ப அனுமதியளிக்க வேண்டும். இத்தனை தினங்களாக நான் திரும்பவில்லையென தந்தையார் கவலை கொண்டிருப்பார்" என்றான்.

விக்கிரம வரையர் முகத்தில் வருத்தம் படர்ந்திருந்தது. "பராந்தகா, நானும் உன்னுடன் வருகிறேன். ராஷ்டிரகூடரிடம் உன் பெயரையும் ஊரையும் கூறியிருக்கிறாய். சுற்றுப் பகுதியில் விசாரித்தவர்கள், இன்று காலை வண்டாழஞ்சேரிக்குச் சென்றதாக அறிகிறேன். இன்னும் இரு நாழிகைகளில் நாம் புறப்படலாம்" என்றார் படைத்தலைவர். அவரது வார்த்தைகளைக் கேட்டபின் பராந்தகனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. சற்று நேரத்தில் படைத்தலைவரிடம் புரவியேற்றத்தைப் பயின்று கொண்டவன், மூன்றாவது நாழிகையில் படைத்தலைவரும், வீரர்களும் உடன் வர பயணப்பட்டான்.

வண்டாழஞ்சேரியை நெருங்க நெருங்க அவனது இதயம் வேகமாகத் துடிக்க ஆரம்பித்தது. ஊர் எல்லையை அடைந்ததும் அவன் இதயம் ஒருகணம் சட்டென்று நின்று மீண்டும் அதி வேகத்தில் ஓடியது.

வண்டாழஞ்சேரியின் ஒரு பகுதி, அதுவும் அவனது இல்லம் இருந்த பகுதியில், பெரும் தீயின் ஜ்வாலை எழுந்து வெகு உயரமாக எரிந்து அவனை வரவேற்றது.

(தொடரும்)

## விடமாட்டேன் வேங்கைப்புலி!

நெருப்பு வளையத்துக்குள் தாவத் தயாராக இருக்கும் அழகுப் புலி யார் தெரியுமா? ஷில்பா ஷெட்டி! பிராணிவதை தடுப்புச் சங்கத்தின் சார்பில் தயாரிக்கப்பட்டுள்ள இந்த விளம்பரத்தில், 'சர்க்கஸைப் புறக்கணியுங்கள்' என்று வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள்!

- அனு



# தீக்காயத்தின் மீது தண்ணீர் ஊற்றலாமா?

**டாக்டர் ஸ்ரீதர் சென்னை நகரின் முன்னணி பிளாஸ்டிக் சர்ஜன். தீக்காயங்கள், அதற்கான சிகிச்சை பற்றி அவர் அளித்த பேட்டி :**

**சாதாரணமாக விபத்துகளின்போது ஏற்படும் காயங்களுக்கும், தீக்காயங்களுக்கும் என்ன வித்தியாசம் டாக்டர்?**

நம் உடம்பின் பாதுகாப்புக் கவசம்போல சருமம் இருக்கிறது. தீவிபத்துக்களின்போது சருமம் பாதிப்புக்குள்ளாகிறது. இதனால் இரண்டு விதமான பாதிப்புகளை நம் உடல் சந்திக்க வேண்டியிருக்கிறது. முதலாவது, பாக்டீரியாக்களின் தாக்குதல் சுலபமாகி, நோய்த் தொற்று ஏற்படுகிறது. இரண்டாவது நம் உடலில் இருந்து ஏராளமான நீர் ஆவியாகிறது. இப்படி திடீரென்று உடலில் தண்ணீரின் அளவு குறைவதை 'ஷாக்' என்று குறிப்பிடுவோம். இத்தகைய ஷாக் மிகவும் ஆபத்தானது. இது தவிர, ரத்தமும் தீப்புண் காரணமாக விரயமாகிறது. இதனால் உடலில் இருக்கும் சிறுநீரகம், இதயம், நுரையீரல் என்று ஒவ்வொன்றாக பாதிப்புக்குள்ளாகி, மரணத்தில் போய் முடியும். எனவே, தீக்காயங்களுக்கு உடனடியாக, முறையான சிகிச்சை அளிக்க வேண்டியது மிகவும் அவசியம்.

**தீக்காயத்தில் முதல் டிகிரி, இரண்டாம் டிகிரி, மூன்றாம் டிகிரி என்று எந்த அடிப்படையில் வகைப்படுத்தப்படுகிறது?**

நம் சருமத்தின்மீது அனல் படுகிறபோது, அது பாதிப்புக்குள்ளாகி சிவக்கும். இதுதான் முதல் டிகிரி தீக்காயம். இதற்கு ரொம்ப பயப்படத்



* டாக்டர் ஸ்ரீதர்

தேவையில்லை. சாதாரண சிகிச்சையே போதுமானது. சீக்கிரமே குணமடைந்து விடும். இரண்டாவது டிகிரியில் மேலோட்டமானது, ஆழமானது என்று இரு வகை உண்டு. மேலோட்டமான தீக்காயங்களில் கொப்புளங்கள் ஏற்படும். ஆழமான வகை எனில் கொப்புளங்கள் வராது. ஆனால், உணர்ச்சியே இல்லாமல் போய்விடும். மூன்றாவது டிகிரி என்றால், தோலும், திசுக்களும் மட்டுமின்றி, தசையும் பாதிப்புக்குள்ளாகும். சமயத்தில் எலும்புகளையும் அது பாதிக்கக் கூடும்.

**தீக்காயங்கள் மீது தண்ணீரே படக் கூடாது என்று சிலரும், காயங்கள்மீது தண்ணீர் ஊற்றுவது நல்லது என்று சிலரும் சொல்லுகிறார்களே! எது சரி?**

தீக்காயங்களின்மீது தண்ணீர் ஊற்ற லாம். உடலில் தீப்பிடித்துக் கொண்டால், உடனே கம்பளி அல்லது தடித்த போர்வையைச் சுற்றி, தரையில் உருட்டு வது வழக்கம். அப்படிச் செய்கிறபோது, தீ அணையும். ஆனால் தீ காரணமாக ஏற்பட்ட வெப்பம் தணியாது. அது பாதிப்பை ஏற்படுத்தும். ஆனால் தீப் பிடித்தவுடன் தண்ணீரை ஊற்றினால், தீயும் அணையும். வெப்பமும் குறைந்து, அதிக பாதிப்பை ஏற்படுத்தாமல் இருக்கும்.

**தீக்காயங்களை இத்தனை சதவிகிதம் பாதிப்பு என்று எந்த அடிப்படையில் கணக்கிடுகிறார்கள்?**

உடலின் மொத்த சரும பரப்பளவில், தீக் காயம் பட்ட பகுதி எவ்வளவு சதவிகிதம் என்கிற கணக்குதான் அது. முப்பது, நாற்பது சதவிகிதம் வரை வெளி தீக்காயம் மட்டும் என்றால், உயிர் பிழைக்க வாய்ப்பு கள் அதிகம். அனல் தகிக்கும் புகைக் குள் சிக்கிக் கொள்கிறபோது, சூடான புகைக்காற்று மூச்சுக்குழாய், நுரையீரலுக் குள் சென்று, அங்கும் பாதிப்பை ஏற் படுத்திவிடும். அது இன்னும் ஆபத் தானது. பாதிப்பின் சதவிகிதம் அதிக மானால், பிழைக்கும் வாய்ப்பு குறையும். பெரியவர்களைவிட, குழந்தைகள் உயிர்பிழைக்கும் சதவிகிதம் குறைவு என்பது சோகமான நிஜம்.

**தீக்காயங்களுக்கு அளிக்கப்படும் சிகிச்சை முறை பற்றிச் சொல்லுங் களேன்.**

உடலில் ஏற்பட்ட தண்ணீர் இழப்பை முதலில் சரிக்கட்ட வேண்டும். உதாரண மாய், அறுபது கிலோ எடை உள்ள

# தர்மமே செல்லாயினார்!

**மோ**ட்டரோலா மொபைல் ஃபோன் நிறுவனம் சமீபத்தில் சில லேட்டஸ்ட் செல்ஃபோன் மாடல்களை ஏழை எளியவர்களுக்கு இலவசமாகக் கொடுத்து புண்ணியம் கட்டிக்கொண்டது.

ஹைடெக் ஏ760 மாடல் செல் ஃபோனை, ஷாருக்கான், ஹ்ருத்திக் ரோஷன், சஞ்சய் தத், ஐஸ்வர்யா ராய் போன்ற ஏழைகளும், ஸ்லீக் வி 600 மாடலை, அமிதாப்பச்சன், ப்ரீத்தி ஜிந்தா, கரீனா கபூர், பிபாஷாபாஸு, இஷா கோபிகர் போன்ற எளியவர்களும் பெற்று பயன் அடைந்தனராம்!

**- அனு**



# கும்பகோணம் சொல்லிக் கொடுத்த பாடங்கள்

அண்மையில் 'அப்சர்வர் ரிசர்ச் ஃபவுண்டேஷன்' என்ற அமைப்பின் கூட்டத்தில் 'கும்பகோணம் கற்றுத் தந்த பாடங்கள்' என்ற தலைப்பில் பேசினார் ஆர். நித்யானந்தம். தமிழ்நாடு தீயணைப் புத்துறை இயக்குனராக இருந்து ஓய்வு பெற்றவர். அவர் பேசியதிலிருந்து :

இயற்கையின் அபாயகரமான முகம் தீ. எதையும் சாம்பலாக்கி விடும். கவனத்துடன், பயன்படுத்திக் கொள்ள வேண்டும். தீ விபத்து ஏற்பட்டவுடன் பல சமயங்களில், தீயணைப்புப் படையினருக்குத் தகவல் தெரிவிப்பது இல்லை. தாங்களாகவே நெருப்பை அணைக்க முயற்சி செய்து, அது முடியாதபோது, தகவல் சொல்லி, தீயணைப்புத் துறையினர் ஸ்தலத்துக்கு வரும்போது, சேதம் அதிகமாகி விடுகிறது. நெருப்புப் பிடித்தவுடன் தீயணைப்புப் படைக்குத் தகவல் தரவேண்டும்.



* ஆர். நித்யானந்தம்

பொது அரங்குகளில், கொலாப்சிபிள் கதவு போடவே கூடாது. இத்தகைய கதவுகளை, நெருக்கடியான நேரங்களில் சரிவரத் திறக்க முடியாமல் போனால் நெரிசலில் சிக்கி, மரணங்கள் அதிகரிக்கும்.

தீப்பிடித்த கட்டடங்களிலிருந்து படிக்கட்டுகள் வழியே இறங்கி வரும்போது சுவரை ஒட்டியே இறங்குவது பாதுகாப்பானது. உடலில் தீப்பிடித்து விட்டால், இரண்டு கைகளாலும், முகத்தை முழுவதுமாக மூடிக் கொண்டு, தரையில் படுத்து உருண்டால், தீ அணையும்.

ஒரு கட்டடத்துக்கு லைசென்ஸ் வழங்குவதற்கு முன் தீயணைப்புப் படையினர் 'நோ அப்ஜக்ஷன் சர்டிபிகேட்' தர வேண்டும். குறிப்பிட்ட கட்டடத்தை ஆய்வு செய்து, தீ விபத்து பாதுகாப்பு விதிமுறைகள்படி முறையான லைசென்ஸ் வழங்க வேண்டும்.

ஒருவர், நாற்பது சதவிகித தீக்காயத்துடன் ஆஸ்பத்திரிக்கு அழைத்து வரப்பட்டால், முதல் இருபத்து நான்கு மணி நேரத்தில் பதினைந்து பாட்டில் சலைன் வாட்டர் உட் செலுத்தப்பட வேண்டும். அதுவும், அதில் பாதி, முதல் எட்டு மணி நேரத்துக்குள் செலுத்தப்பட வேண்டும். தீக்காயத்துக்கு சிகிச்சை அளிப்பது இன்னொரு பக்கம்.

சருமம் முழுவதுமாய் பாதிக்கப்பட்ட கேஸ்களில், உடலின் நன்றாக இருக்கும் பகுதியிலிருந்து சருமத்தை எடுத்து, பாதிக்கப்பட்ட பகுதியில் ஒட்ட வைப்போம். தற்காலிக ஏற்பாடாக, ரத்த சம்பந்தமான உறவுகளின் சருமத்தையும் எடுத்துப் பொருத்தலாம். சில செயற்கையான சருமம், பன்றியின் தோல் கூட தற்காலிகமாக உதவும். தீக்காயங்களுக்கு எந்தவிதமான சிகிச்சை என்பது மட்டுமில்லை, எவ்வளவு சீக்கிரம் சிகிச்சையளிக்கிறோம் என்பதும் முக்கியம்.

**தீக்காயம் பட்டவர்களுக்கு பிரத்யேகமான உணவு அவசியமா?**

ஆமாம்! அவர்கள் உடம்பில் ரத்த விரயம் இருக்கும். புரொட்டீன் சத்து இழப்பு இருக்கும். எனவே புரதச் சத்து மிகுந்த உணவைத் தர வேண்டும். சரிவிகித உணவு தந்து, உடம்புக்கு தெம்பூட்ட வேண்டும்.

**தீக்காயம் பட்டவர்களின் மனோரீதியான பாதிப்பைப் போக்க என்ன வழி?**

மற்றெந்த விபத்துகளையும்விட, தீ விபத்துக்களில் பாதிக்கப்பட்டவர்களுக்கு மனோரீதியில் அதிர்ச்சி அதிகம் இருக்கும். தீக்குளித்து தற்கொலை முயற்சியில் ஈடுபடுகிறவர்கள் உயிர் பிழைத்துவிட்டால், அவர்கள் மனோரீதியாக பெரும்பாதிப்புக்குள்ளாவர்கள். அதுபோன்ற கேஸ்களுக்கு சிகிச்சையளிக்கும்போது, எங்கள் டீமில் மனோதத்துவ நிபுணரும் இடம் பெறும் படி பார்த்துக் கொள்வோம்.

**- எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **கௌதம் ராம்**

"மேடம்... தியாக்குட்டி ரொம்ப அழுதுட்டிருக்கு. என்னென்னமோ பண்ணிப்பார்த்தாச்சு. சமாதானம் பண்ண முடியல. அவ அம்மாவுக்கு போன் பண்ணி வரச் சொல்லிடலாமான்னு, ப்ரியா டீச்சர் கேட்டுட்டு வரச் சொன்னாங்க."

இடுப்பில் இன்னொரு குழந்தையுடன் ஆயா வந்து கேட்டாள். ப்ளே ஸ்கூல் ப்ரோக்ராம் லிஸ்ட் தயாரித்துக் கொண்டிருந்த நந்தனா, கம்ப்யூட்டர் திரையிலிருந்து கண்களை அகற்றி அவளைப் பார்த்தாள். "என்னாச்சு?" என்றாள்.

"காலைல வந்ததிலிருந்தே ஒரே அழுகை மேடம். ஏன்னு தெரியல."

'குழந்தைகளுக்கான ப்ளே ஸ்கூல் என்றால், இதெல்லாம் நடக்கத்தான் செய்யும். இது ஒரு சின்ன விஷயம். இதை லாகவமாகக் கையாள யாருக்கும் தெரியவில்லையா? இந்த ப்ரியா டீச்சர் அழுகிற குழந்தையையும் சமாளிப்பாளே! அவளால் கூடவா தியாவை சமாதானப்படுத்த முடியவில்லை'

நந்தனா, யோசனையுடன் பேபி கிளாஸ் நோக்கி நடந்தாள்.

வகுப்பறைக்குள் நுழையும்போதே பத்து கட்டடங்களுக்குக் கேட்கிற மாதிரி ஓ- என்ற சத்தம். சுற்றிலும் மற்ற குழந்தைகள் கண்களில்



# அம்மா வந்தாள்

மிரட்சியுடன் பார்த்துக் கொண்டிருக்க, தியா அழுதுகொண்டிருந்தது.

"இங்க பாரு... இங்க பாரு" என்று நிறைய பொம்மைகளைக் காட்டி கவனத்தைத் திருப்ப முயற்சித்துத் தோற்றுக் கொண்டிருந்தாள் ப்ரியா டீச்சர். நந்தனாவை பரிதாபமாகப் பார்த்தாள்.

தியாவின் அருகில் உட்கார்ந்தாள் நந்தனா. "டோன்ட் க்ரை பேபி டோன்ட் க்ரை..." என்று அவளை அணைத்து எடுத்துக் கொண்டு,



சித்ரன்

அவளது அறை நோக்கி நகர்ந்தாள். ப்ரியா தோள்களைக் குலுக்கிக் கொண்டு "கமான் இட்ஸ் ஸ்டோரி டைம் நௌ..." என்று மற்ற வாண்டுகள் பக்கம் திரும்பினாள்.

ஒரு பத்து நிமிடத்தில் தியாவைச் சரி பண்ணிவிடலாம் என்றுதான் நினைத்தாள் நந்தனா. ஆனால் தியாவின் அழுகை அத்தனை சீக்கிரம் அடங்கிவிடும் போல் தோன்றவில்லை. அவள் கத்தின கத்தலில், காதே கிழிந்துவிடும்போல இருந்தது. எங்கேயோ பலமாய் அடிபட்ட மாதிரி கதறிக் கதறி அழ ஆரம்பித்தாள். நந்தனா அவள் கழுத்தில் கைவைத்து, சுடுகிறதா என்று பார்த்தாள். காய்ச்சல் மாதிரி எதுவும் தெரியவில்லை. ஒரு வேளை வயிறு ஏதாவது வலிக்கிறதோ? எதற்கும் வீட்டுக்குத் தெரிவித்துவிடுவது நல்லது. நந்தனா டெலிபோனை தன் பக்கம் இழுத்து தியாவின் அம்மாவுக்கு டயல்செய்து காத்திருந்தாள்.

மறுமுனையில் வேறு யாரோ எடுத்தார்கள். வேலைக்காரப் பெண் போலும். "மிஸஸ் மணிமேகலைகூடப் பேசணும். கொஞ்சம் அர்ஜண்ட்" என்றாள்.

"அம்மா இல்லையே... க்ளப்புக்குப் போயிருக்காங்க. என்ன விஷயம் சொன்னீங்கன்னா, வந்ததும் சொல்றேன்" என்றாள்.

"எந்த க்ளப்? போன் நம்பர் ஏதாச்சும் இருக்கா? அவங்க குழந்தை ரொம்ப அழுதும்மா. வந்து கூட்டிட்டுப் போகச் சொல்லணும்."

"லேடீஸ் கிளப்ங்க.." என்று நம்பர் கொடுத்தாள்.

ப்ரியா, நந்தனாவைப் பார்த்து "தியா ஈஸ் ஷிவரிங் நௌ மேடம். சம்திங் ராங்." என்றாள். நந்தனா தியாவை கவலையாக கவனித்தபடி, லேடீஸ் க்ளப் நம்பரை முயற்சித்தாள்.

லைன் கிடைத்தபோது மறுமுனை பெண்குரல் "மிஸஸ் மணிமேகலையா? ஒன் செகண்ட்... ம்ம்ம்... அவங்க ஒரு மீட்டிங்ல இருக்காங்க" என்றது.

விஷயத்தைச் சொல்லிவிட்டு, உடனே ஸ்கூலுக்கு வரச் சொன்னாள்.

அடுத்த பத்தாவது நிமிடத்தில் டாடா சுமோ ஒன்று விர்ரென்று உள்ளே வந்தது. நந்தனா பெருமூச்சு விட்டாள்.

"தியாக்குட்டி... இங்க பாரு, மம்மி வந்தாச்சு." என்று சொல்லிவிட்டு அவளை இறக்கிவிட்டாள். தியா விசும்பலை விடாமல் முழித்துப் பார்த்தாள். சுமோவிலிருந்து அந்தப்பெண் இறங்கி ஓட்டமாய் வந்தாள். மறுகணம் "ஓ" என்று குரலை உயர்த்திக் கொண்டு தியாவும் அவளிடம் ஓடினாள். ஒரே தாவலில் அவள்மேல் தொற்றி அவள் இடுப்பில் உட்கார்ந்து கொண்டு, கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டாள்.

அந்தப் பெண் நந்தனாவின் அருகில் வந்தாள். "பாப்பா அழுவுது. போய்ப் பாருன்னு அம்மா போன் பண்ணிச் சொல்லிட்டு வண்டி அனுப்பிச்சாங்க மேடம். நான் அவங்க வூட்ல வேல செய்யறேன்." என்றாள். தியாவிடம் திரும்பி "என்னடி கண், எதுக்குடா அழற?" என்று கொஞ்சி முத்தம் கொடுத்தாள். அவளை இதமாய் அணைத்துக் கொண்டு, முதுகில் ஜோ ஜோ-வென்று தட்டிக் கொடுத்தாள்.

நந்தனா ஆச்சரியமாய் ஒரு விஷயத்தைக் கவனித்தாள். தியா இப்போது அழுகையை நிறுத்தியிருந்தது. ●



"உங்க புருஷனுக்கு எப்ப இருந்துமா காது கேக்காமப் போச்சு?"

"நான் வயலின் கத்துக்க ஆரம்பிச்சதிலிருந்து, டாக்டர்!"

- அரிச்சந்திரன்

# சிரிக்காம இருங்க!



"தலைவருக்கு தலையும் சுளுக்கு— காலும் சுளுக்கா!
"அதெப்படி?"
"தேர்தல்ல ஜெயிச்சதும் தலை கால் புரியாம நடந்துகிட்டா அப்படித்தான்!"

- அம்பை தேவா



"ஐயா நான் செய்தது தப்புதான். ஒப்புக்கறேன். தண்டனையா ஏதாச்சும் நீதி நூல் சொல்லுங்க; மனப்பாடம் பண்ணி ஒப்பிக்கிறேன்!"

- லலிதா செல்லப்பா



"ஏங்க, எனக்கு மட்டும் ஏன் பான் பீடா வாங்கித் தரீங்க, நீங்களும் போட்டுக்கிறது...?
"என்னால் பான் பீடா மெல்லாமலேயே மௌனமாக இருக்க முடியும், மீனா!"

- எம். சங்கர்



"சீனியாரிட்டிக்கும் வயதுக்கும் மரியாதையே இல்லாமல் போச்சு அப்பனே!"
"சும்மா வயிற்றெரிச்சல் படாதீங்க குருவே... குட்டிச் சாமியாருக்குக் கிடைக்கிற பப்ளிசிட்டியைப் பார்த்து!"

- உ. ராஜாஜி

# நடக்குமென்பார் நடக்கும்!

**மேஷம் :** இந்த ராசிக்காரர்களுக்கு கிரகங்களோட சாதகமான பார்வையால தெய்வபலம், தெய்வீக ஈடுபாடு கூடி புனிதஸ்தல யாத்திரை போவாங்க. எதிர்பாராத சந்திப்பு, துணிவு, நம்பிக்கை ஏற்படும். பணவசதி சரளமா இருக்கும். உத்தியோகத்தில நிதானமான போக்கும் சகஜமான பழக்கமும் அவசியம். புதிய முயற்சிகள்ல நிதானம் அவசியம். யந்திரம், இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், டிராவல்ஸ் தொழில்கள் ஆதாயம் தரும். குடும்பத்தில் சுபகாரியங்கள் நிறைவேறும். புதிய வீடு கட்டவோ, வாங்கவோ யோகம் கூடி வரும். மாணவர்கள் படிப்புக்காக வெளி நாடு போகும் வாய்ப்பு சேரும்.

**ரிஷபம் :** கேட்டதெல்லாம் கேட்ட படியே கிடைக்கிற சாதகமான நேரம் இது. வி.ஐ.பி.க்கள் ஆதரவு, பெண்களால் அனுகூலம், தேவைக்கேற்ற பண வசதின்னு மகிழ்ச்சி கூடும். உத்தியோகத்தில் அதிர்ஷ்டம் காத்திருக்கு. வெகு நாளைய கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்ள நல்ல சந்தர்ப்பம் வரும். ஓட்டல், லாட்ஜ், டிராவல்ஸ், ஜவுளி தொழில்கள் அனுகூலம் தரும். குடும்பத்தில் ஒற்றுமையும் அமைதியும் உண்டாகும். பழைய விரோதங்களும் எதிர்ப்புகளும் மறைந்து சுமுகமான சூழ்நிலை உண்டாகும். மாணவர்கள் மேன்மை அடைவார்கள்.

**மிதுனம் :** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சி என்று இருப்பவர்கள் முன்னேற்றம் பெறுவார்கள். புது அறிமுகங்களும், சரளமான பண வசதியும் மகிழ்ச்சியைக் கொடுக்கும். உத்தியோகத்தில் சக ஊழியர்கள், அதிகாரிகளின் ஆதரவு கூடும். சினிமா, நாடகம், நாட்டியம், ரியல் எஸ்டேட் துறைகளிலிருப்பவர்கள் அனுகூலம் பெறுவார்கள். குடும்பத்தில் திருப்தியான சூழ்நிலை நிலவும். செலவுகள் கட்டுக்கடங்காமல் போனாலும், தக்க உதவி வந்து சேரும். பெண்களுக்கும், மாணவர்களுக்கும் உற்சாகமான வாரம்.

**கடகம் :** உங்க ராசிக்கான கிரக சஞ்சாரம் கொஞ்சம் சிக்கலாகி விடுபடறதால, எடுத்த காரியங்களில் எல்லாம் தடங்கல், தாமதம்னு எரிச்சலூட்டினாலும், இறுதியில் வெற்றி உங்க பக்கம்தான். பிரபு தனவான்கள் ஆதரவு, சரளமான பண வசதி ஏற்படும். உத்தியோகத்திலயும் சிறு பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். வீண் விவாதங்களில் கலந்துக்காதீங்க. யந்திரம், இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், கெமிக்கல்ஸ் துறைகளில் ஆதாயம் கிட்டும். அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருப்பது நல்லது. குடும்பத்தில் குழப்பம், பிரச்னைகள் ஏற்பட்டு விலகும். பெண்களுக்கு புதிய பொருள் சேர்க்கை குதூகலப்படுத்தும்.

**சிம்மம் :** இந்த ராசிக்காரர்களுக்கு பொறுமையும், தீர்க்காலோசனையும்

**ஆகஸ்ட் 4 முதல் 10 வரை**

# அக்னிசர்மா பக்கம்

நிறையத் தேவைப்படும் நேரம் இது. வார ஆரம்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு பிறகு நன்மை தேடி வரும். தெய்வீக ஈடுபாடு, தெய்வ பலம் கூடும். புதிய அறிமுகங்கள். முக்கியமானவங்க ஆதரவு, தேவைக்கேற்ற பணவசதி கிடைக்கும். உத்தியோகத்திலிருப்பவர்களுக்கு பொதுவாக அனுகூலமான காலம். புதிய முயற்சிகளை மட்டும் கொஞ்சம் தள்ளிப் போடுவது நல்லது. ஓட்டல், லாட்ஜ், அழகு சாதனம், கலைத்துறை, ரியல் எஸ்டேட் தொழில்கள் ஆதாயம் பெறும். குடும்பத்தில் ஒற்றுமையும், அமைதியும் நிலவும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**கன்னி** : கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சி துறைகள்ல இருக்கறவங்களுக்கு உயர்வைத் தருகிற வாரம். எல்லாக் காரியங்கள்லேயும் அனுகூலமான பலன்கள் கிடைக்கும். எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேரும். உத்தியோகத்தில் மேலதிகாரிகள் ஆதரவு, பாராட்டு என்று மகிழ்ச்சியாகவே இருக்கும். புதிய முயற்சிகள் அனுகூலம் தரும். கலைத்துறை, ஆபரணத் தொழில், புத்தகம், அச்சகம் தொழில்கள் மேன்மை பெறும். குடும்பத்தில் செலவுகள் கூடும் வாய்ப்பு இருக்கிறது. ஆனாலும் சுபச் செலவினம்தான் என்பதால் மகிழ்ச்சியே ஏற்படும். பெண்களுக்கு தங்கள் எண்ணம் ஈடேறும்.

**துலாம்** : சகல காரியங்களிலேயும் அனுகூலமான திருப்பம் உங்களுக்காகக் காத்திருக்கு. பிரபு தனவான்கள் ஆதரவும், தாராள பணநடமாட்டமும் உற்சாகம் தரும். உத்தியோகத்தில் அதிர்ஷ்டம் நிறைந்த நேரம். பதவி உயர்வு, ஊதிய உயர்வு, விரும்பிய இடமாற்றம் ஆகியவை கிடைக்கும். ரியல் எஸ்டேட், ஆபரணத் தொழில், மருத்துவம், கெமிக்கல்ஸ், தோல், எண்ணெய் போன்ற தொழில்கள் லாபம் தரும். அரசியல்வாதிகள் மேன்மையடைவார்கள். குடும்பத்தில் ஒற்றுமை, சொத்து சேர்க்கை, திருமணம் போன்றவை கூடி வரும். பெண்களுக்கு உடன் பிறந்தவர்களால் ஆதாயம், மகிழ்ச்சி உண்டாகும்.

**விருச்சிகம்** : சிறு பிரச்னைகள், தடங்கல்கள் என்று தொடங்கினாலும், எல்லாக்

டீ.வி. புகழ் சுபஸ்ரீ (துலாம்), தணிகாசலம் (தனுசு) தம்பதிக்கு மகிழ்ச்சி உண்டாகுமாம்!

| இது நல்ல நேரம் | | | | |
|---|---|---|---|---|
| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
| புதன் | ஆகஸ்ட் 4 (ஆடி - 20) | பூரட்டாதி | சதுர்த்தி | |
| வியாழன் | ஆகஸ்ட் 5 (ஆடி - 21) | உத்திரட்டாதி | பஞ்சமி | |
| வெள்ளி | ஆகஸ்ட் 6 (ஆடி - 22) | ரேவதி | சஷ்டி | |
| சனி | ஆகஸ்ட் 7 (ஆடி - 23) | அஸ்வினி | ஸப்தமி | |
| ஞாயிறு | ஆகஸ்ட் 8 (ஆடி - 24) | பரணி | அஷ்டமி | |
| திங்கள் | ஆகஸ்ட் 9 (ஆடி - 25) | கார்த்திகை | நவமி | ஆடிக்கிருத்திகை |
| செவ்வாய் | ஆகஸ்ட் 10 (ஆடி - 26) | ரோகிணி | தசமி | திருவலஞ்சுழி விநாயகர் உற்சவம் |

காரியங்களிலும் வெற்றி நிச்சயம். துணிவு, தன்னம்பிக்கை கூடும். தேவைக்கேற்ற பண வசதி கிடைக்கும். உத்தியோகத்தில் சுமுகமான போக்கால் பிரச்னைகள் ஏற்படாதபடி பார்த்துக் கொள்வது நல்லது. வீண் விவாதம் கூடாது. யந்திரம், இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், வாகனம் தொழில்கள் மேன்மை பெறும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். பிரிந்தவர்கள் ஒன்று சேர்வார்கள். பெண்களுக்கு உறவினர் வருகை, எதிர்பாராத பணவரவு போன்றவையால் மகிழ்ச்சி கிட்டும்.

**தனுசு** : எடுத்த காரியங்களில் வெற்றி, புதிய அறிமுகம், எதிர்பாராத சந்திப்பு என்று அனுகூலமான பலன்களே ஏற்படும். உத்தியோகத்திலிருப்பவர்களுக்கு அனுகூலமான திருப்பம் காத்திருக்கு. அரசுப் பணியாளர் எதிலும் கவனமா இருத்தல் நல்லது. கலைத்துறையினருக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்பு கிட்டும். எலக்ட்ரானிக்ஸ், யந்திரம், கமிஷன், டிராவல்ஸ் துறைகள் ஆதாயம் பெறும். அரசியல்வாதிகள் எதிலும் நிதானமாக இருத்தல் நல்லது. குடும்பத்தில் கருத்து வேறுபாடு மறைந்து ஒற்றுமை கூடும். பெண்களுக்கு மக்களால் மகிழ்ச்சி கிட்டும்.

**மகரம்** : இந்த ராசிக்காரர்களுக்கு முக்கிய நல்ல செய்தி வரக் காத்திருக்கு. கோர்ட்டு, வழக்கு விவகாரங்களில் வெற்றி கிட்டும். துணிவும், நம்பிக்கையும் கூடும். உத்தியோகத்தில் குழப்பங்கள் மறைந்து மாற்றங்கள் ஏற்படும். வெகு நாளைய கோரிக்கைகள் நிறைவேறும். உலோகம், தோல், ஓட்டல், டிராவல்ஸ், தொழில்கள் நல்ல ஆதாயம் தரும். சட்டம், ரா வம், காவல் துறையினர் உயர்வு பெறுவார்கள். குடும்பத்தில் ஒற்றுமை, அமைதி கூடும். சுப காரிய முயற்சிகள் நிறைவேறும். பெண்களுக்கு எண்ணம் ஈடேறும். மாணவர்களுக்கு முன்னேற்றமான வாரம்.

**கும்பம்** : தெய்வ பலம், தெய்வீக ஈடு பாடு, எடுத்த காரியங்களில் அனுகூலம்னு சாதகமான பலன்களே கிடைக்கிற வாரம். எதிர்ப்புகள் விலகி சமாதானமாகும். உத்தியோகத்தில் வெகு நாளாகத் தடைப்பட்ட பதவி உயர்வு, ஊதிய உயர்வு அனைத்தும் கிடைக்கும். யந்திரம், இண்டஸ்ட்ரீஸ், எண்ணெய், தோல் பொருள், ஆபரணங்கள் தொழில்கள் ஏற்றம் பெறும். குடும்பத்தில் குதூகலமான சூழல் உருவாகும். சுப மங்கள காரியங்கள் நடைபெறும். பூர்வீக சொத்து விவகாரங்கள் அனுகூலம் தரும். பெண்களுக்கு எதிர்பாராத பண வரவு, ஆடை ஆபரணச் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**மீனம்** : தடைகள், தாமதம், எதிர்ப்புன்னு ஆரம்பத்தில் சிரமங்கள் ஏற்பட்டாலும், வாரப் பிற்பகுதியில் எல்லாம் தீர்ந்து சகல காரியங்களும் அனுகூலமாகவே முடியும். சில குழப்பங்கள், அலைச்சல் என்று ஏற்பட்டு உடன் நிவாரணம் கிடைக்கும். உத்தியோகத்தில் வீண் விவாதங்களைத் தவிர்த்து சுமுகமாகப் பழகுதல் நல்லது. கலைத்துறை, அச்சகம், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைகளில் ஆதாயம் பெருகும். சட்டம், ரா வம், காவல் துறையினர் சாதனைகள் புரிவார்கள். குடும்பத்தில் பொருளாதார நெருக்கடியும், உறவினர்களால் பிரச்னைகளையும் ஏற்படலாம். எச்சரிக்கையுடனிருந்தால் தவிர்க்கலாம். குல தெய்வப் பிரார்த்தனை அனுகூலம் தரும். பெண்கள் ஆரோக்கியத்தில் கவனமாக இருப்பது நல்லது.

# வளைத்துப் போடுகிறார் வைகோ!





* மனோ

"**அ**ண்ணா சாலையை ஒட்டியுள்ள தியேட்டர் நிர்வாகம் ஒன்று, அப்பட்டமாக அத்துமீறல் செய்திருக்கிறது. மாநகராட்சி அதிகாரிகள் அந்த வளாகத்தில் நுழைந்து, நிலத்தை அளக்கக் கூட முடியவில்லை. சுமார் நூறு கோடி மதிப்புள்ள ஓ.எஸ்.ஆர். நிலங்கள் மாநகராட்சியால் கையகப் படுத்தப்படாமல் நகரெங்கும் இருக்கின்றன. அங்கேயெல்லாம் நடவடிக்கை எடுக்காமல், அறிவாலயத்தில் ஆர்வம் காட்டும் அவசியம் என்ன? அரசியல்தானே?" என்றார் மாநகராட்சி காங்கிரஸ் தலைவர் மனோ.

**வ**ரும் 2006ம் சட்டமன்றத் தேர்தலுக்குள் கட்சியைப் பலப் படுத்தி, கூட்டணியில் அதிக ஸீட்டுகள் கேட்கும் நிலையை உண்டாக்க, கடும் முயற்சியில் இறங்கியிருக்கிறார் வைகோ. இதற்காக ம.தி.மு.க.வை விட்டு விலகிப் போனவர்கள், மாற்றுக் கட்சி அதிருப்திப் பிரமுகர்கள் சிலரை கட்சிக்குள் பிடித் துப் போட முயற்சி நடக்கிறதாம். தமிழ்க்குடிமகன், டி. ராஜேந்தர், 'மக்கள் தமிழ்தேசம்' கண்ணப்பன் ஆகியோருக்கு தூது விடப் பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். பொன். முத்துராமலிங்கத்தை மீண்டும் ம.தி.மு.க.வுக்கு இழுத்துவிட முடியும் என்று நம்புகிறார்களாம்.

**ம**த்தியில் உள்ள தமிழ்நாட்டு அமைச்சர்கள் தமிழ்நாட்டு பத்திரிகைகளின் தில்லி பிரதிநிதிகளுக்கும், நிருபர்களுக்கும் விருந்துகள் கொடுத்து அசத்துகிறார்களாம். "சாதகமாக எழுதாவிட்டாலும் பரவாயில்லை. பாதகமாக எழுதாமல் இருக்க வேண்டுமே" என்று சொல்லிச் சிரிக்கிறர் அமைச்சர்களின் உதவியாளர் ஒருவர்.

- கௌசி

படம் : ராஜன்



பிட்டா படங்க!

# வலம்புரி முத்து

கடந்த ஐந்து நாட்களும் திருஞானத்திற்கு நடைப்பயணம் என்பது சலிப்பூட்டுவதாகவும், உடல் சோர்வைத் தருவதுமாகவே இருந்தது. பாதிப் பயணத்தின்பொழுது திண்டுக்கல்லில் ஒரு விடுதியில் தங்கி, மது அருந்திய பின்புதான் அவனது உளைச்சல் குறையும் போலிருந்தது.

"பாரு! நாகப்பன்! கையெல்லாம் ரெண்டு நாளா தண்ணியடிக் காம ஷிவரிங் ஆயிடுச்சு" எனப் புலம்பினான்.

நாகப்பனுக்கும் குடிப்பழக்கம் உண்டு. குடி ஏற்படுத்தும் போதையை அவன் ரசிப்பான். ஆனால் குடிக்கு அடிமையாகி, அதன் மூலம் சிறுமைப்பட அவன் விமைழந்ததில்லை. எனவே திருஞானத்தின் அபரிமிதமான குடிப்பழக்கமும், கஞ்சா பழக்கமும் அவனுக்கு அச்சமூட்டுபவையாக இருந்தன.

"ஸ்டெரய்டா டீலிங்கை முடிச்சோமான்னு இல்லாம, கொக்கு தலையில் வெண்ணெய் வெக்கிற மாதிரி, எதுக்கு ஏழு நாள் பாத யாத்திரையில் சக்தி வளைக்கணும். ரெண்டு பேருக்கும் நோக்கங் கள் இருக்கு. உனக்குக் கதிரேசன். எனக்கு தாமரை. கொஞ்சம் விபரீதமா யோசிக்கலாம். கமான், நீ ஒரு கிளாஸ் எடு" என்றான் நாகப்பனிடம்.

நாகப்பன், திருஞானம் இருவருமே ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள். வாணிபம் என்ற போர்வை இருவர் மீதும் போர்த்தப்பட்டது, எனினும் திருஞானத்தின் வரைமுறையற்ற செல்வமும், சிதம்பரம் செட்டியார் வழியில், தெய்வானை ஆச்சி கட்டிக் காப்பாற்றி வந்த ஓர் அமைப்பில் நாகப்பனின் செல்வமும் வெவ்வேறானவை. அவை ஏற்படுத்தும் தடங்களும் வெவ்வேறானவை. எனவே பழனி பாத யாத்திரையின் நடுவில் குடிப்பது என்பது, நாகப்பனால் ஏற்றுக் கொள்ள முடியாததாகவே இருந்தது.

"நாகப்பன்! இன்னமும் நீ இந்த கடவுள், நல்லபிள்ளையா நடக்கறது போன்ற அரிச்சுவடிப் பாடங்களை நம்புறியா? முட்டாள்தனமா தெரி யலியா? நீ தண்ணி போட்டா, உன் முருகன் வேல் கொண்டு உன்னைக் கொல்ல வர மாட்டார். ஓகே?"

"இல்லை வேணாம், என்னை வற்புறுத்தாதே"

"உன்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை நாகப்பன். கதிரேசனை ஒழித்துக் கட்ட வேண்டும் என்ற திரிந்த சிந்தனையுடன் பழனி நடைப் பயணம் மேற் கொண்ட நீ,

மது அருந்தமாட்டேன்னு சொல்றது வினோதமாயிருக்கு."

"அவரவர்க்கு அவரவர் காரணம் திருஞானம். உனக்கு போதை என்பது எப்படி சிறு வயது முதல் பழகிப் போன ஒண்ணோ, அது போல கதிரேசனும் அவன் நினைவும், அவன் மேல் எழும் பொறாமையும், என்னால் மறுக்க முடியாத ஒண்ணு."

ஐஸ் கட்டிகளை ஒவ்வொன்றாக கண்ணாடிக் குவளையில் போட்டு, கெட்டியான திரவத்தில் அவை தொப் என விழுந்து அமிழ்வதைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த நாகப்பன், "இந்தக் குடிப் பழக்கமும், போதைப் பழக்கமும் என்னை மட்டும் தான் அழிக்கும். ஆனா இந்தப் பொறாமை இருக்கே, ஜெலஸி - அது உன்னை இல்லை, யார் மீது பொறாமையோ அவங்களை அழிச்சுடும். எது நல்லது? போதையா? பொறாமையா?" என்றான்.

"என் பொறாமையில் கதிரேசன் அழிஞ்சிடுவான். ஆனா அதுக்கு முன்னாடி தாமரைக்கும், கதிரேசனுக்கும் கலியாணப் பேச்சு இந்தப் பாதயாத்திரை முடியறதுக்குள்ளாறயே நிச்சயமாயிரும் போல" என்றான்.

"என்ன சொல்ற?" என திருஞானம் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"போக்கு அப்படித்தான் போகுது" என்றான் நாகப்பன். இது போன்று வஞ்சனையுடன் இருப்பவர்கள், தங்களுடைய ஒவ்வொரு அடியையும் வெகு கவனமாக எடுத்து வைப்பார்கள். நாகப்பன் முற்றிலும் பள்ளிக்கூட மாணவனின் சிறுபிள்ளைத்தனத்துடன் தன்னை நோக்கி திருஞானம் வீசிய கேள்வியின் வெப்பம் தாங்காமல், அதை திசை திருப்பும் விதமாக, தாமரையைப் பற்றிக் கூறியது சுவையூட்டுவதாக இல்லை. திருஞானம் புரிந்து கொண்டு விடுவானோ என்ற குற்ற உணர்வு எழுந்தது. ஆனால் இது எல்லாமே, தான் கதிரேசன்பால் கொண்ட பொறாமையின் விளைவு என்பதை அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. மாசறு பொன்னாம்; வலம்புரி முத்தாம். இடியட்!

"டு யூ வான்ட் டு ஹாவ் எ ஸிப்?" என்றான் திருஞானம் மீண்டும். தன் மனத்தைப் புரிந்து கொண்டதன் அடையாளமாகவே, தன் குற்ற உணர்வை அழிக்கும் பொருட்டு அவன் கேட்பதாகத் தோன்றியது.




"வேண்டாம்!" நாகப்பன் மறுத்தான்.

"தாமரை இந்த வெயிலிலும், பனியிலும் நடந்து நடந்து, சோர்ந்து போய் ஒரு புகைபடிந்த ஓவியம் மாதிரி ஆனாலும் அழகாகத்தான் இருக்கா" என அவன் அழகில் திருஞானம் லயித்தான்.

நாகப்பனுக்கு அவனைத் திசை திருப்பியது தவறில்லை எனத் தெரிந்தது.

"சொல்லு! அவளை முறைப்படி மணக்க வழியிருக்கான்னு சொல்லு" என்றான் நாகப்பனைப் பார்த்து.

"ரெண்டுங்கெட்டான் மனசோட அவன் அண்ணன் ஒருத்தன் இருக்கான்."

"என்ன வேலை பார்க்கிறான்?"

"வேலை இல்லை, பிஸினஸ். சில கன்ஸ்யூமர் பொருள்களுக்கு கமிஷன் ஏஜண்டா இருக்கான். பெரிய பெரிய கம்பெனிகளின் மொத்த விநியோக உரிமை இல்லையே என்ற வருத்தம் அவனுக்கு உண்டு. காரணம் நடுத்தரவர்க்கத்தின் பற்றாக்குறை."

"என்னென்ன பெரிய கம்பெனி?" என திருஞானம் கேட்டான்.



நாகப்பன் ஒரு பட்டியலைக் கொடுத்தான். அதில் ஒரு நிறுவனம் திருஞானத்தின் தந்தையால் நடத்தப் படுவது.

"அட, சிக்கியாச்சு மீன்! நாலு கம்பெனியோட விநியோக உரிமையை வாங்கித் தர்றதும், பண முதலீட்டுக்கு கடன் உதவி செய்யறதும் ஒரு விஷயமே இல்லை. என் சொத்து மதிப்பு மிகப் பெரியது நாகப்பன். நான் ஒரு செல்வக் குடியில மாணிக்கத் தொட்டிலில் பிறந்தவன். இப்படி கையைச் சொடுக்குவது மாதிரி கூப்பிட்டா பொண்ணுங்க ஓடி வருவாங்க. கோடம்பாக்கத்தில் மிகப் பிரமாதமான அழகின்னு வர்ணிக்கப்படும் எல்லா நடிகைகளோடும் எனக்குத் தொடர்பு உண்டு. ஆனா உரிய முறையில் பெண் கேட்கப் போனா, இவங்க மதிப்பீட்டு அளவுகோல் ஒழுக்கம் சார்ந்ததா இருக்கு. திட்டம் போட்டு என் முகத்தில் காறி உமிழ்வது போல் இருக்கு. அதையும் பணம் மூலம் தான் இதைச் சரிக்கட்ட வேண்டியிருக்கு. சொல்லு! இப்ப அவங்க எங்கே இருக்காங்க?"

"இன்னிக்கு ஆறாம் நாள். யாத்திரை கூட்டம் முழுவதும் ஒட்டன்சத்திரத்தில் தங்குவாங்க. குழந்தை வேலன் சன்னதி, சத்திரைப்பட்டி சாலை முடிஞ்சு செம்மடைப்பட்டி, ஆயக்குடி தாண்டி ரெண்டு நாளில் பழனிக்குப் போயிடுவாங்க. அப்புறம் தைப்பூசக் கூட்டத்தில் கலந்துட்டாங்கன்னா, அவங்களைப் பிடிக்கவே முடியாது."

"ஒண்ணு செய்யலாம். இப்ப ரெஸ்ட் எடுப்போம். சாயந்திரம் டிரைவரை வண்டி எடுக்கச் சொன்னா, நேரா ஒட்டன்சத்திரம் போயிரலாம்."

"என் விஷயமா இன்னும் ஒரு முடிவு எடுக்கலை" என்றான் நாகப்பன்.

"வெயிட்! கதிரேசன் விஷயம்தானே?"

"ஆமா"

"பொறாமையின் குறியீடு என்னன்னு தெரியுமா?"

"நெருப்பு, ஜ்வாலை, தீ!" என்றான் நாகப்பன்.

"அந்த நெருப்பு மூலமாவே உன் பொறாமை என்னும் ஜ்வாலையை அணைக்கலாம்."

"எப்படி?"

"கொஞ்சம் நான் ரெஸ்ட் எடுத்துக்கிறேன். ஒட்டன்சத்திரம் போகும் வழியில் உனக்கு விரிவா சொல்லிட்டு வர்றேன்."

திருஞானம், நாகப்பன் இருவரின் கண்களும் வெவ்வேறு காரணங்களுக்காகக் கனிந்து சிவந்திருந்தன.

முத்தையா செட்டியார், இரத்தின வேலுக்கு அபிஷேகங்களும், ஆராதனைகளும் முடிந்த பின்னர் சிறிய உரையாற்றினார். முத்தையா செட்டியாரின் அறிமுகம் ஏற்பட்ட பிறகு, கிடைக்கும் நேரங்களில் எல்லாம் கதிரேசன் அவருடனே பொழுதைக் கழித்தான். அவருடன் உரையாடுவதும், விவாதிப்பதும், அவர் சொல்வதை அப்படியே கேட்பதும் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

தாமரை பகல் முழுக்க அண்ணனுடனும், தாய்மாமனுடனும் பொழுதைக் கழித்தாலும், இரவில் பம்மிப் பம்மி, கதிரேசன் இருப்பிடத்திற்கு ஓடிவிடுவாள். அன்று இரவில் மாமன், அண்ணனிடம் தன்னை கதிரேசனுக்கு மணமுடித்து வைக்கப் பேசப் போவது குறித்து உற்சாக மிகுதியில் கூறினாள்.

'தில்லை அம்பலத்தே நடனம்
செய்யும் அமரர்பிரான் - அவன்
செல்வத் திருமகனை - இங்குவந்து
சேர்ந்து கலந்து மகிழ்ந்திடுவாய் என்று
சொல்ல வல்லாயோ கிளியே?' எனப்

பாட்டுப் பாடினாள்.

"இனிமே உனக்கு சிதம்பரம் செட்டியாரின் மகன் என்ற நிலை கிடைக்குமில்லையா?" என்றான்.

"உனக்கு எப்படி கைம்மாறு பண்ணறதுன்னு தெரியல தாமரை. ஆயிரம் சொல்லலாம். பிறப்பில், குலத்தில், இனத்

தில் உயர்வு தாழ்வு இருக்கும் வரையில், அகந்தையும், வன்மமும், பொறாமையும் அழியவே போவதில்லை. அதை மாற்றும் முயற்சியா என்னை ஏத்துக் கொள்கிற உன் பாங்கு இருக்கே... நெஜம்மாவே நீதான் மாசறு பொன்; வலம்புரி முத்து!"

"எங்கே இன்னொரு முறை சொல்லுங்கள்!"

"மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே! தேனே!
அரும்பெறல் பாவாய்! ஆருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!..."

நிறுத்தி விட்டு, "பாரேன்! இளங் கோவடிகள் கூட பெருங்குடி வாணிகன் என்றுதான் குறிப்பிடுகிறார். உயிர் முக்கியமில்லை; உன்னத குணங்கள் முக்கியமில்லை தாமரை. ஏழு தீவுகளை யுடைய பூலோகத்தில் நாம் வாழும் சம்புத் தீவில், பாரத கண்டத்தில் குடிப்பிறப்பு ஒன்றுதான் முக்கியம் தாமரை!"

"நாம்தான் அதை மாற்றப் போகி றோமே கதிர்!"

"இல்லை தாமரை! எனது இரண்டுங் கெட்டான் நிலையிலிருந்து என்னை செட்டியார் எனும் உயர்குடிப்பிறப் புக்குக் கொண்டு செல்வதுதான் நம்ம திருமணம்!"

தாமரை சிறிது நேரம் பேசாமல் இருந்தாள்.

"அம்மாவின் சொந்தக்காரங்களை நீங்க சிதம்பரம் செட்டியாரின் வளவில் வந்து குடியேறின பிறகு போய்ப் பார்த் திருக்கீங்களா?" என்றாள் தாமரை. தன் மனதில் உள்ளதை சரியாகப் புரிந்து சொன்ன அவளது ஆற்றல், அவனை வியக்க வைத்தது.

"அப்படி ஒரு தொடர்பு இருக்கக் கூடாது எனும் நிபந்தனையுடன் தான், தெய்வானை ஆச்சி எங்களை வளவில் குடி வெச்சாங்க. சிறு வயது ஞாபகம் மட் டும்தான் எனக்கு. போனதில்லை. அம்மா வும் தன் பழைய உறவுக்காரங்களைத் தேடிப் போனதில்லை. நடனம், நாட்டி யம், நாடகம், சினிமா இதிலெல்லாம் ஈடுபடும் பெண்களின் அகவாழ்க்கை, சொல்லிக்கும்படியாவா இருந்தது? மீள முடியாச் சூழல் இல்லியா?"

"நிசந்தான்!"

"ஒரு வேளை நம்ம கலியாணத்துக்கப் புறம் எங்க அம்மாவழி சொந்தக்காரங் களைச் சந்திக்க நேரிட்டா, நீ அவங்களை எப்படி எதிர்கொள்வ?"

தாமரை உடனே பதில் சொல்ல வில்லை.

(தொடரும்)



## ஆண்டவனின் அணுகுமுறை :

ஒருவர் சீரும் சிறப்புமாக இருந்து நலிந்து விட்டார். ஒரு நாள் ஆண்டவனைப் பார்த்து அவர் கேட்டார்.

"இறைவா– நான் பணக்காரனாக இருந்தபோது எனக்கு வழிகாட்டியாக நீ முன்னே சென்றாய். அப்போது நான் இரண்டு காலடித் தடங்களை கண்டேன். ஒன்று உன்னுடையது. இரண்டாவது என்னுடையது. ஆனால் நான் ஏழையாகிவிட்ட பிறகு ஒரு தடம் தானே தெரிகிறது. இறைவா– என்னைக் கை விட்டு விட்டாயா? எனக் கதறினாராம். அதற்கு ஈசன், "நீ பணத்தில புரண்டபோது உன் முன் நான் சென்றேன். அதனால் இரண்டு தடங்கள் கண்டாய். நீ நொடிந்து ஏழையானபோது உன்னை நான் என் தோளில் சுமந்தல்லவா செல்கிறேன். அதனால் ஒரு தடம்தானே நீ காண முடியும்?" என்றாராம்!

நன்றி : 'எண்ணங்கள் எதிரொலிகள்' - டாக்டர் கி. வேங்கடசுப்ரமணியன்

- ராஜிராதா, திருச்சி



• அப்துல் ரகுமான்

# பாடம் கற்குமா பாடநூல் கழகம்...?

இந்தக் கல்வியாண்டு தமிழ் நாட்டைப் பொறுத்த வரை 'குழப்ப' ஆண்டாகத் தான் துவங்கியிருக்கிறது. ஒரு பக்கம் பொறியியல், மருத்துவப் படிப்பு அட்மிஷனில் இடியாப்பச் சிக்கல்கள், புதுப்பாட புத்தகங்கள் கிடைக்காத நிலை. பள்ளிகள் துவங்கி இரண்டு மாத காலம் ஆகியும், இன்னமும் பிளஸ் ஒன் வகுப்புக்கு வேண்டிய பல பிரிவு புத்தகங்கள் கடைகளில் கிடைக்கவில்லை. கடைக்காரர்களைக் கேட்டால், "தமிழ்நாடு பாட நூல் கழகம் மிகக் குறைந்த அளவே எங்களுக்கு விற்பனைக்காகப் புத்தகங்களைக் கொடுக்கின்றனர்'' என்று சொல்கிறார்கள். நுங்கம்பாக்கம் கல்லூரிச் சாலையில் உள்ள பாடநூல் கழக விற்பனை நிலையத்தில், புத்தகங்களை வாங்கக் காத்துக் கொண்டிருந்த ஏழுமலை, "நெல்லை மாவட்டத்திலிருந்து என் நண்பர் ப்ளஸ் ஒன் புத்தகம் அங்கு கிடைக்காததால் வாங்கித் தரச் சொல்லி கடிதம் எழுதியிருக்கிறார். அதுதான் நின்று கொண்டிருக்கிறேன்" என்றார். வேலூரிலிருந்து வந்திருந்த கணபதி, "எங்க ஊர்லேயும் இதே நிலைதான். முன் கூட்டியே திட்டமிட்டு, அச்சடித்து, எல்லா விற்பனையாளர்களுக்கும் அனுப்பி வைத்திருந்தால், ஒரு தட்டுப்பாடும் வராது. ஆனால் அதிகாரிகளின் தவறான அணுகுமுறையால், மாணவ, மாணவிகள் பாதிக்கப்பட்டுள்ளனர்'' என்றார். இந்த வருடம் ஏழு, பத்து மற்றும் ப்ளஸ் ஒன் வகுப்புகளுக்கான புத்தகங்கள் மாறிவிட்டன. இந்தப் புதிய பாடத் திட்டப் புத்தகங்கள் கிடைக்காததால் பெற்றோர் களும், ஆசிரியர்களும், மாணவ, மாணவிகளும் வெறுத்துப் போய் விட்டார்கள். இந்தத் தட்டுப்பாட்டுக்கு யார் காரணம், என்ன காரணம் என்று ஆராய்ந்தோம்.

தமிழ்நாட்டு பள்ளி மாணவ, மாணவிகளின் பாடப் புத்தகத் தேவைகளை நிறைவு செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டது தான், தமிழ்நாடு பாட நூல் கழகம். 1970ல் இந்த நிறுவனம் துவங்கப் பட்டது. ஒவ்வொரு ஆண்டும் முன் கூட்டியே பள்ளிக் கல்வி இயக்குனர் அலுவலகத்தில், மாணவ மாணவிகளின் எண்ணிக் கைக்கு ஏற்ப புத்தகங்களின் தேவைகளைக் கணித்து, அந்த

அடிப்படையில் அச்சடித்து, தமிழ்நாடு முழுவதுமுள்ள ஆயிரத்தி எண்ணூறு விற்பனையாளர்கள் மூலம் விற்கும் பணியைச் செய்கிறது இந்த நிறுவனம். ஒழுங்காகப் போய்க் கொண்டிருந்த இதன் செயல்பாடுகள், தடம் புரளத் துவங்கியது நான்கு மாதங்களுக்கு முன்னர் தான் என்கிறார்கள்.

"ஒன்றாம் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை, ஒட்டுமொத்தமாகக் கணக்கெடுத்தால், பன்னிரண்டு கோடி புத்தகங்கள் அச்சடிக்கப்படும். அவற்றில் சுமார் பதினொரு கோடி புத்தகங்கள் தாழ்த்தப்பட்ட, மிக பின்தங்கிய பள்ளிச் சிறுவர்களுக்கு இலவசமாகவே வழங்கப் படுகின்றன. மீதி இருக்கும் ஒரு கோடி புத்தகங்கள் தான் எங்கள் மூலம் விநி யோகிக்கப்படுகின்றன. இந்த நிலையில், பொறுப்பிலிருந்த உயரதிகாரி ஒருவர், அச்சடிக்க ஆர்டர் கொடுக்கும்போது மொத்தமாக ஆர்டர் கொடுக்காமல், அதிகம் அடித்தால் தேங்கிப் போய் விடுமோ என்ற தவறான முன் ஜாக்கி ரதை உணர்வில், தவணை முறையில் அச்சகங்களுக்கு ஆர்டர் கொடுத்தார். புத்தகங்கள் பரவலாகக் கிடைக்காததற்கு இது ஒரு காரணம். இது தவிர, பொது வாக, விற்பனைக்கு அச்சடித்து அனுப்பி விட்டுத்தான் இலவசப் புத்தகங்களின் மீது கவனம் செலுத்துவார்கள். இந்த வருடம் அதை மாற்றி, முதலில் அச் சடித்த புத்தகங்களை இலவசமாகக் கொடுத்து விட்டார்கள். எனவே விற்ப னைக்குப் புத்தகங்கள் வரவில்லை. அடுத்து, அந்த உயரதிகாரி, பாடநூல் கழக விற்பனை நிலையம் மூலம் நிறைய விற்பனையானால், வியாபாரிகளுக்குக் கிடைக்கும் ஒன்பதரை சதம் கமிஷனும் அரசுக்குக் கூடுதலாக கிடைக்கும் என்ற எண்ணத்தில், எங்கள் பிழைப்பில் மண் போடும் வகையில், எங்களுக்கு மிகக் குறைவான அளவிலேயே புத்தகங்கள் கொடுத்தார். தமிழ்நாடு முழுதும் (சில மாவட்டங்களைத் தவிர) உள்ள அவர் களது விற்பனை நிலையங்கள் மூலம் விற்பனையைப் பெருக்க நினைத்தார். ஆனால் போதுமான அளவு சப்ளை செய்ய முடியவில்லை. மொத்தத்தில் ஒரு அதிகாரியின் பல தவறான முடிவுகளால், பாடப் புத்தக அச்சடிப்பு, விநியோகம் இந்த ஆண்டு பாதிக்கப்பட்டது" என்று சொன்னவர், பாரி முனையில் நாம் சந்தித்த புத்தக விற்பனையாளர் ஒருவர்.

இடையில் மற்றொரு ஏற்பாடாக, கமிஷன் அடிப்படையில் நேரடியாக பள்ளிகளுக்கே சப்ளை செய்யும் முயற்சி யிலும் இறங்கியது பாட நூல் நிறுவனம். ஆனால் அந்த முயற்சியும் வெற்றி பெறவில்லை. "எங்களுக்கே வேலைப் பளு மிக அதிகம். இந்த நிலையில், பையன்களிடம் பணத்தை கலெக்ட் செய்து, டி.டி. எடுத்துக் கொண்டு வந்து வாங்கி, அதற்குக் கணக்கு வைத்துக் கொள்வது பெரும்பாடு. எனவே எங்களுக்கு ஆர்வம் இல்லை" என்று சொன்னார் அமைந்தகரையில் நாம் சந்தித்த தலைமை ஆசிரியர். இந்த புத்தக விற்பனையில் லாபம் பெற்றோர் - ஆசிரியர் கழகத்துக்குத்தான் போகுமாத லால், ஆசிரியர்களுக்கு ஆர்வம் இல்லை. இப்போது பள்ளிகளுக்கு நேரடி சப்ளை நிறுத்தப்பட்டுவிட்டது. ப்ளஸ் ஒன் படிக்கும் சந்திரசேகர், "ரொம்ப கஷ்டப் பட்டு, பல நாள் அலைந்து புத்தகங்களை வாங்கினேன். அதுவும் இயற்பியல், ரசாயனம் போன்றவற்றுக்கு பாகம் இரண்டு இன்னமும் வரவில்லை. என் வகுப்பில் பல மாணவர்களிடம் புத்தகங் கள் இல்லை. ஜெராக்ஸ் எடுத்துக் கொண்டிருக்கிறோம்'' என்கிறான்.

''புதுசா வந்திருக்கிற இன்ஸ்பெக்டர் நாடகப்பற்றுள்ள ஆசாமின்னு எப்படிச் சொல்றே...?"

''மாதம் மும்முறை மாமூல் மழை பொழிகிறதா?'ன்னு கேட்டாரே!"

- ஜோஸப் காமராஜ்





தமிழ்நாடு முழுக்க இதுதான் நிலை.

"மது விற்பனையை நேரடியாக அரசு எடுத்துக் கொண்டதைப் போல, பாட நூல் புத்தக விற்பனையையும் அரசு எடுத்துக் கொண்டால், நல்ல வருவாய் கிடைக்கும்" என்று அரசுக்குச் சொல்லப் பட்ட தவறான யோசனை காரணமாகவே, இந்த ஆண்டு குழப்பம் உண்டானது. வருடத்தில் அதிக பட்சம் இந்த விற்பனை ஒரு மாதம் தான். நாங்களெல்லாம் பல வருடங்களாக இப்பணியைச் செய்து வருகிறோம். எங்களை ஓரங் கட்டும் முயற்சி நடந்தது" என்றும் சொல்கிறார்கள் வியாபாரிகள். பள்ளிக் கல்வி இயக்குனரகம் முதலில் ப்ளஸ் ஒன் வகுப்புக்கு முப்பத்தியாறு லட்சம் புத்தகங்கள் தேவை என்றதாம். இப்போது நாற்பத்தியாறு லட்சம் என்கிறதாம். பற்றாக் குறைக்கு இதுவும் காரணம். பாட நூல் அட்டைகளுக்கான உயர்ரக காகிதத்தை அச்சகங்களுக்குக் கிடைக்கச் செய்யாமல் அரசு தாமதப்படுத்தி விட்டதாகவும் சொல்கிறார்கள்.

'அடுத்த வருடம் எட்டு மற்றும் பன்னிரண்டாம் வகுப்புகளுக்கு பாடப் புத்தகம் மாறப் போகிறது. இவ்வாறு மாறும் போது, இரண்டு ஆண்டுகளுக்குத் தேவையான புத்தகங்களை அச்சடித்து வைத்துக் கொண்டால், தட்டுப்பாடு வராது. நாங்கள் ரொக்கம் கொடுத்து புத்தகம் வாங்குவதாலும், ரிடர்ன் வசதி இல்லை என்பதாலும், பாடநூல் கழகத்துக்கு எந்த நஷ்டமும் வராது" என்று சொல்கிறார் விற்பனையாளர் சங்கத்தின் துணைத் தலைவரான கா. அப்துல் ரகுமான்.

இப்போது பாடநூல் கழகத்தின் மேலாண்மை இயக்குனராக பொறுப் பேற்றிருப்பவர் ஸ்வரண்சிங். ஆற்றலும் அனுபவமும் மிக்க இவர், சீரிய முறையில் செயல்பட்டு, அடுத்த ஆண்டு எந்தத் தட்டுப்பாடும் இல்லாது பார்த்துக் கொள்வார் என்று நம்புகிறார்கள் வியாபாரிகள். ஸ்வரண்சிங்கைச் சந்தித்தோம். "நான் 15.7.2004 அன்று தான் பொறுப்பேற்றேன். அதன் பிறகு பிரச்னைகளைத் தெரிந்து கொண்டு, தீர்வு காணும் முயற்சியில் இறங்கினேன். கடந்த காலத்தைப் பற்றிப் பேச வேண்டியதில்லை. தமிழ்நாட்டின் பாடப் புத்தகத் தேவை தொண்ணூற்றி ஐந்து சதவிகிதம் இப்போது தீர்க்கப்பட்டு விட்டது. வெகு விரைவில் மீதியும் தீர்க் கப்படும். அடுத்த ஆண்டு எந்த குழப் பமும் நேராமல் பார்த்துக் கொள்வோம்" என்றார்.

பத்திரிகை, தொலைக்காட்சி ஊடகங்கள் இப்பிரச்னையை வெளிப் படுத்தியதால்தான் விழிப்புணர்வு ஏற் பட்டிருக்கிறது. ஆனால் கோட்டையில் அதிகாரிகள் சிலர் 'இதை ஏன் பத்திரிகைகளுக்கு எடுத்துச் சென்றீர்கள்?' என வியாபாரிகளிடம் கோபம் காட்டுகிறார்களாம். அவர்களுக்கு யார் பாடம் எடுப் பார்களோ!

— ப்ரியன்

படங்கள்: ராஜன்

# கவிதை

**வைரமுத்துவின் கவிதைகளை இனியவன் இசை அமைக்க, எஸ்.பி.பி., எஸ். ஜானகி முதலான பிரபல பாடகர்கள் பாடிய மேடை நிகழ்ச்சி காமராஜ் அரங்கில் (ஜூலை 28) களை கட்டியது. அந்நிகழ்ச்சியை கல்கிக்காக விமர்சிக்கிறார் சித்ரவீணை ரவிகிரண். சில மாதங்களுக்குமுன் இங்கிலாந்தில் பிரிட்டிஷ் கவிஞர் கவிதைகளைத் தமிழ்ப்படுத்தி இசையமைத்து வழங்கிய ரவிகிரண், இசையில் புது முயற்சிகளுக்குப் பெயர் போனவர்.**

இந்த நிகழ்வு பற்றிக் கேட்டதிலிருந்தே அதைக் காண வேண்டும் என்று ஆவலோடு எதிர்பார்த்தேன். என் எதிர்ப்பார்ப்பு வீண் போகவில்லை.

வைரமுத்து தம் குரலிலேயே கவிதைகளைப் பதிவு செய்ததுதான் நிகழ்ச்சியின் சிகரம். வெகு சிலரே படைப்பாளியின் உள்ளுணர்வை அறிய முடியும். அவர் கவிதைகளுக்கு உயிரூட்டி, ரசிகர்களை மகிழ்வித்ததும், நெகிழ்வித்ததும், அவரே தமது கவிதைகளின் ஆன்மாவைப் புலப்படுத்தியதும் குறிப்பிடத் தகுந்தவை.

அவர் கவிதை நடையில் கிராமிய மணமும், பேச்சு வழக்கு சொற்களும் அநாயாசமாக வந்து விழுந்தன. ஆனால் இப்போதைய புதுக் கவிதைகளில் இவற்றைத் தானே அதிகம் காண்கிறோம்! எங்காவது ஓர் ஆங்கிலச் சொல்லை அழகாக நுழைக்கிறார். அதுவும் மிகப் பொருத்தமாகவே அமைகிறது. இது மொழி வளத்துக்கு உதவும் என்றே நான் நம்புகிறேன். ஆங்கிலத்தில் எத்தனை தமிழ்ச் சொற்கள் கலந்துவிட்டன!

முதல் கவிதையான 'மரம்' என்னை மிகவும் கவர்ந்தது. மரம்தான், மரம்தான், மனிதன் மறந்தான், மறந்தான் என்ற வரிகளாகட்டும், முத்தாய்ப்பாக, எல்லா மரமும் போதி மரம், என்ற வரியும் ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

நான் மிக ரசித்த இன்னொரு கவிதை 'மதுரை'. கவிஞரின் பெருமையும் மகிழ்ச்சியும் அவர் வரிகளில் தீவிரமாகத் தெரிந்தன. பழைமை பற்றி அவர் கொண்ட பெருமை வெளிப்பட்டதோடு, இன்றைய நிலை குறித்த தாபமும், வேதனையும் இறுதியில் பொங்கிப் பெருகின.

'முதல் முதல் அம்மாவுக்கு...' - நெஞ்சைத் தொட்ட கவிதை. ஆங்கிலத்தில் சொல்வதானால் biographic, and autobiographic! ஓரிடத்தில் கவிஞரே தொண்டை கரகரத்து, கண்ணீர் கரகரவென்று சுரக்க, தவித்து நின்றது, அவரையே அந்தக் கவிதை எத்தனை தூரம் ஆட்கொண்டது என்று காட்டியது.

இந்தப் பாடலை எஸ்பி.பி. தம் குரலில் வழங்கியபோது, அசர வைத்தது. குரல்



• வைரமுத்து

• எஸ் .ஜானகி

# கேளுங்கள்....!

வளத்தைக் கொஞ்சமும் இழக்காமல், தொடர்ந்து நம்மை மயக்கி வரும் இந்தக் கலைஞருக்கு, வாத்தியக் கருவிகளே பொறாமைப்படும் ஓர் இனிமை இருப்பதைக் கவனித்தீர்களா?

**'கா**தலித்துப் பார்' பாடலில் உயிரோட்டம் இருந்தது; வேடிக்கை இருந்தது; தூண்டுதலும் சீண்டுதலும்கூட இருந்தன. ஆனால் பொருளும் பொதிந்தே இருந்தது. இப்பு அதைப் பாடியபோது, அவர் குரலை டிரம்ஸ் அதிர்ந்து அடக்கப் பார்த்தது. நிகழ்ச்சி முழுக்க டிரம்ஸ் ஒலியை பாலன்ஸ் பண்ணியிருக்க வேண்டாமோ? சில பல இடங்களில் தாள வாத்தியம் உணர்வுப் பெருக்கத்துக்கு இடையூறு செய்தது.

இசையமைப்பாளர் இனியவன் பணியைப் பாராட்ட வேண்டும். எல்லாக் கவிதைகளுக்கும் அவர் இசையமைத்திருப்பது திருப்திகரமாக இருந்தாலும், சிற்சில பகுதிகளில் இனியவனின் தளிர் திறமை வியக்க வைத்தது. குறிப்பாக, 'இலையில் தங்கிய துளிகள்' பாடலில் அவர் கையாண்டிருந்த மைனர் ஸ்கேல், மிகப் பொருத்தமாக இருந்தது. 'முதல் முதல் அம்மாவுக்கு' மெட்டமைப்பும், மிகக் குறைவான தாள வாத்தியங்களோடு அமைந்திருந்தது. அதில் மெலிதாக இழையோடிய சாருகேசி ராகம் மிகப் பொருத்தம்!

**'தோ**ழிமார் கதை'யில் சோகம் சற்றே தூக்கலாக இருந்தது. இணைபிரியாத இரண்டு பெண்கள், திருமணத்துக்குப் பின் பிரிய நேர்ந்து விடுகிற வேளையில், உள்ளீடாக இருக்கிற ஆற்றாமை வெளிப்படுகிறது. அதில் துயரத்தோடு சிறுது இனிமையும் கலந்துதானே இருக்கிறது? சோகம் மட்டும் அல்லவே!...

**எ**ஸ்.ஜானகி பற்றி என்ன சொல்லுவது! சின்ன வயதில், திருவையாற்றில் என் கச்சேரியைக் கேட்டுவிட்டு, ஒரு தடவை சாக்லேட்டுகளாய்க் கொட்டியது என் நினைவுக்கு வருகிறது. இப்போதும் தம் ரசிகர்களைக் குரலால் கட்டிப்போட, ஜானகி என்ற அபூர்வ மேதையால் முடிகிறதே! ரசிகர்களின் 'மூட்' அறிந்த பொம்மலாட்டக் கலைஞர். அதனால்தான் அவர்களை அப்படி ஆட்டி வைக்கிறார்.

'தயவு செய்து என்னைத் தொல்லை செய்'யில், கடைசி இரண்டு வரிகளில் புதிரை அவிழ்ப்பது வரை, வைரமுத்து கொஞ்சம் டென்ஷன் நிறைந்த சஸ்பென்ஸ் வைத்து, ரகளை பண்ணியிருக்கிறார். நான் அந்த ரகசியத்தைச் சொல்லப் போவதில்லை. நீங்களே முடிந்தால் அந்தப் பாடலை முழுதும் படித்துப் பாருங்கள்!

படங்கள் : **யோகா**



• எஸ்.பி.பி.

• ரவிகிரண்

சிறு பத்திரிகைகள் அல்லது இலக்கியப் பத்திரிகைகள் என்ற அடையாளம், தமிழில் இதழியல் தோன்றி வளர்ந்த காலத்தில் இருந்தே ஓர் உடன் நிகழ்வாக இருந்து வந்திருக்கிறது. இந்த இயக்கத்தை நடத்திச் செல்பவர்கள் எழுத்தாளர்களாகவோ, அல்லது தீவிர இலக்கிய வாசகர்களாகவோ இருந்து வந்திருக்கிறார்கள். சில ஆயிரம் பேர்களால் உருவாக்கப்பட்ட இந்த இயக்கம்தான் இன்று தமிழின் நவீன இலக்கிய முகத்தை உருவாகியிருக்கிறது.

ஆனால் இன்றும் பொதுக் கலாசார நீரோட்டத்தைப் பொறுத்தவரை, இது ஒதுக்கப்பட்ட தலைமறைவு இயக்கம்தான், தமிழகத்தில் மக்கள் தொகையும், கல்வி வளர்ச்சியும் பெருமளவுக்கு வளர்ச்சியடைந்திருக்கிறது. அதற்கேற்ப வெகுஜன வாசகப் பரப்பும் வளர்ச்சியடைந்திருக்கிறது. ஆனால் கலை, இலக்கியம், சமூகம் சார்ந்த துறைகளில் ஆழமான பிரதிபலிப்புகளையும் எதிர்வினைகளையும் கொண்ட பத்திரிகைகள், சில ஆயிரம் பிரதிகளைத் தாண்டி விரிவடைவதேயில்லை. எனக்கு இதன் கணிதம் இன்று வரை புரிபடவில்லை. கானகத்தில் 'வழிதவறி' இங்கே வந்து சேர்பவர்கள்தாம் இன்றும் இதன் வாசகர்கள்.

'உயிர்மை'யை ஓராண்டிற்கு முன் நான் தொடங்கியபோது இந்த வழி தவறியவர்கள்மேல் உள்ள நீங்காத காதலும், ஒரு பத்திரிகையாளனாக செயல்படுவதன் தீவிர ருசியும்தான் ஒரே ஆதாரமாக இருந்தன. இத்தகைய பத்திரிகையை மாத இதழாகக் கொண்டு வருவதன் சிக்கல்கள் பல்வேறு நிலைகளிலானவை. உள்ளடக்கத்தை ஒரு குறிப்பிட்ட நிலையில் தர நிர்ணயம் செய்த பிறகு, அதற்கான படைப்பாளிகளைத் தொடர்ந்து தேடிச் செல்ல வேண்டும். தபாலில் தானாக வரும் படைப்புகளில் பெரும்பாலானவை உபயோகமற்றவை. ஒரு பத்திரிகையாளன் தனக்கு உரிய படைப்பாளியைத் தொடர்ந்து கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. தமிழ் படைப்புச் சூழலில் நிலவும் பரஸ்பர விரோதங்கள் மிகவும் கடுமையானவை. .

இத்தகைய ஒரு பத்திரிகை பொருளாதார ரீதியாக தன்னைக் காப்பாற்றிக் கொள்வது, அதன் உயிராதாரமான இன்னொரு சவால். இவை விற்பனையாகி வரும் தொகைக்கும், அதன் தயாரிப்புச் செலவுக்கும் எந்த சம்பந்தமும் இருக்காது. தனிப்பட்ட இழப்புகளும், அபூர்வமாகக் கிடைக்கும் புரவலர்களின் ஆதரவுமே இந்தப் பத்திரிகைகள் நீடித்திருப்பதற்கான ஒரே ஆதாரம். இந்தச் சூழல் ஏற்படுத்தும் மன நெருக்கடி கடுமையானது. ஒரு பத்திரிகையின் எல்லா நிலையிலான வேலைகளையும் ஓரிருவரே திரும்பத்

# வருமோ அப்படி ஒரு காலம்?

திரும்பச் செய்து கொண்டிருக்கும்போது சில சமயம் மூச்சுத் திணறுகிறது. ஆனாலும் இது ஒரு பித்து. அவ்வளவு எளிதில் தீராத பித்து. ஒவ்வொரு இதழையும் உருவாக்கி கைக்கு வரும் போது தமிழ் இலக்கியம் என்ற ஒரு புராதன ராட்சசப் பறவையின் உடலில் நாமும் ஒரு மெல்லிய இறகாக இருக்கிறோம் என்ற உணர்வு.

**உ**யிர்மையைப் போன்ற இதழ்கள் நீடித்திருக்க சில அனுகூலமான உதவிகள் தேவைப்படுகின்றன.

முதலாவதாக அரசுப் பொது நூலகங்கள் தொடர்ச்சியாக வெளிவரும் இலக்கிய இதழ்களை வாங்க முன் வர வேண்டும். வழக்கமான கெடுபிடியான விதிகளைத் தளர்த்தி, தீவிர இலக்கிய இயக்கத்திற்கு அனுசரணையான புதிய விதிகளை உருவாக்குவது அவசியம். பொது நூலகத் துறையில் சிற்றிதழ்களை வாங்குவதற்கு தனி நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டும். அதேபோல பல்கலைக் கழக, கல்லூரி நூலகங்களில் இலக்கிய இதழ்களைத் தொடர்ந்து வாங்குவதற்கு சம்பந்தப்பட்டவர்கள் முன்னுரிமை அளிக்க வேண்டும். சில தனிப்பட்ட ஆசிரியர்கள், நூலகர்கள் இதற்கான முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார்கள்.

உயிர்மை உட்பட இன்று தொடர்ச்சியாக வெளி வந்து கொண்டிருக்கிற சில இலக்கியப் பத்திரிகைகள், குறிப்பிட்ட ஒரு சில நிறுவனங்களின் ஆதரவையே பெரிதும் சார்ந்திருக்கின்றன. விளம்பர ஆதரவு இல்லாமல், பெரிய பத்திரிகைகளே நடப்பது கடினம் என்ற சூழலில், சிறிய பத்திரிகைகளைப் பற்றிச் சொல்ல வேண்டிய இல்லை. ஆனால் இலக்கியத்தில் ஆர்வம் கொண்டவர்களை தலைமையாகக் கொண்ட நிறுவனங்கள் மிகவும் அரிது. பல பெரிய நிறுவனங்கள் விளம்பரத்திற்காகச் செலவிடும் கோடிக்கணக்கான தொகையில், ஒரு சின்னஞ் சிறு தொகையை சிறு பத்திரிகைகளுக்கும் செலவிட்டால், அது கலை, இலக்கியம், மொழி சார்ந்த ஒரு சமூக செயல்பாட்டை ஆதரிப்பதாக இருக்கும்.

தமிழ் வளர்ச்சித் துறை போன்ற நிறுவனங்கள் இத்தகைய இதழ்களுக்கு மானியம் வழங்குதல், அரசு சலுகை விலையில் காகிதம் அளித்தல் போன்றவை, சாத்தியமான, நடைமுறைப்படுத்தக் கூடிய உதவிகளே.

உயிர்மையோ அதைப் போன்ற பத்திரிகைகளோ, ஒரு இலட்சம் பிரதிகள் விற்றால், இந்த வேண்டுகோள்களுக்கு எல்லாம் வேலையே இருக்காது. எப்போது வரும் அப்படி ஒரு காலம்?

படம் : ஸ்ரீஹரி

மனுஷ்ய புத்திரன்



# இசையின் இதயம்?

**ப**தினொரு வயதிருக்கும் அந்தச் சிறுமிக்கு. நெளிநெளியான டிசைன்களுடன் ஸாடின் பாவாடை அணிந்து, கணீர் என்று பாடிக் கொண்டிருந்தாள்.

தியாகராஜ கீர்த்தனைகளில் போட்டி. பரிசையும் தட்டிக் கொண்டாள் சிறுமி.

பரிசுகள் அவளுக்குப் புதியனவல்ல... நிறைய போட்டிகளுக்குச் சென்றாயிற்று. பரிசுகளை அள்ளியாயிற்று. சாவித்ரி டீச்சர், அதன் பிறகு ராமமூர்த்தி அய்யர் என, இரு நல்லாசிரியர்களின் பயிற்சியில் உருவானதும், நன்றாகவே வயலின் வாசிக்கத் தெரிந்த அம்மா வேதவல்லியின் மேற்பார்வையில் வளர்ந்ததும் வீண் போய்விடுமா...? போட்டிகளுக்கெல்லாம் கூட வரும் பாட்டி ரங்கநாயகி, சிறந்த ரசிகை வேறு..

ஆனால் இந்தப் போட்டி ஒரு திருப்பு முனை. கை நிறைய புத்தகங்களைத் தந்து விட்டு.. 'இரு போய்விடாதே' என்றார், தியாகராஜ ஆராதனை விழாவை ஏற்பாடு செய்திருந்த சபாவின் செயலாளர். "மாலையில் கச்சேரி செய்ய வேண்டிய வித்வான் வரவில்லை... நீ தான் நன்றாகப் பாடுகிறாயே... ஆலாபனை, ஸ்வரம் பாட வருமா...?"

பரிசு வாங்கிய சிறுமி 'தெரியும்' என்று தலையசைத்துவிட்டு, பாட்டியின் முகத்தைப் பார்க்க, பாட்டி சம்மதம் தர... எதிர்பாராத அந்த அரங்கேற்றத்தில் ஓரிரு மனோதர்ம முயற்சிகளுடன், சிறுமிக்குத் தெரிந்த கீர்த்தனைகள் யாவும் வரிசையாக இடம் பெற்றன!

"என்ன பாடினீர்கள்?" என்று கேட்டால், "இப்போது நினைவில்லை!" என்று சிரிக்கிறார் சுகுணா புருஷோத்தமன்.

"ஒரு பாடலை தியாகய்யரோ, தீக்ஷிதரோ என்ன மனோநிலையில் இயற்றியிருப்பார்கள் என்பதை கொஞ்சம் சிந்திக்க வேண்டும். வார்த்தைகளின் அர்த்தம் புரிந்து, வாக்கேயக்காரரின் உணர்வும் புரிந்து வெளிப்படுத்தும் போதுதான், நாம் ஒரு படைப்புக்கு நியாயம் செய்ய முடியும். இதைத்தான் என் மாணவர்களுக்கு நான் முக்கியமாகச் சொல்கிறேன்..." என்கிறார்.

சாஹித்ய பாவம் என்று இசை வல்லுனர்கள் குறிப்



பிட்டுக் கொண்டாடும் இந்த பொருளுணர்ந்த வெளிப்பாடு என்கிற அம்சத்தின் அருமையை, ஆரம்ப நாட்களில் தாம் உணர்ந்திருக்கவில்லை என்பதையும் ஒப்புக் கொள்கிறார் சுகுணா.

"லய விஷயங்களில்தான் எனக்கு ரொம்ப பிரமிப்பு.. இரண்டு கைகளில் வெவ்வேறு தாளங்கள் போட்டபடி, பெரிய பல்லவிகள் பாடுவது, பிரமிப்பூட்டும் சங்கதிகள், என்று இசையின் கவர்ச்சிகரமான அம்சங்களில் ஆர்வம் அதிகமாயிருந்தது. லலிதாபாய் ஷ்யாமண்ணா என்ற வித்வாம்ஸினியிடம் வீணை கற்றுக் கொண்டேன்.. பல்கலைக்கழகத்தில் சேர்ந்து ஒரு வருடம் படித்து, இசை டிப்ளோமா பெற்றேன். பல்லவி பாடுவதில் எனக்கு மேலும் பயிற்சி தேவை என்று தோன்றி, திண்ணியம் வேங்கடராமய்யரிடம் கற்றுக் கொண்டேன்... அவர்தான் என்னை மூசிறி சுப்ரமண்ய அய்யரிடம் அறிமுகப்படுத்தினார்."

"என்ன...? இரண்டு கையிலயும் தாளம் போட்டுண்டு பாடுவியாமே...? நல்ல பாவத்தோட பாடு" என்று சொல்லி, முதல் சந்திப்பிலேயே சுகுணாவை திசை திருப்பி விட்டவர் மூசிறி சுப்ரமண்ய அய்யர்தான்.

"அப்போது எனக்குத் துடுக்கு அதிகம்... 'பாவத்தோட பாடு' என்று அவர் சொன்னதும், "அப்படின்னா என்ன?" என்று திருப்பிக் கேட்டேன். "சாஹித்யத்தின் அர்த்தத்தை மனசில் இருத்திப் பாடணும்..." என்றார்.

'மியூசிக் அகாடமியில் மூசிறி கச்சேரி செய்தபோது, ஆஹிரி, வராளி, முகாரி போன்ற கனமான ராகங்களில் அவர் காட்டிய நிர்வாகம் பிரமிப்பூட்டியது. அதன் பிறகு தான், சங்கீதத்தின் இதயம் எங்கே இருக்கிறது என்று புரிந்து கொண்டேன்.

மத்திய அரசு உதவித் தொகை பெற்று மூசிறியிடம் பயின்றார் சுகுணா. செம்மங்குடியுடன் இருந்த நேசம் கலந்த தொடர்பு காரணமாக, மூசிறி வெளியூர் சென்ற நாட்களில், அவரது சிஷ்யர்களுக்குச் செம்மங்குடி வகுப்பெடுக்கும் வழக்கம் இருந்தது. இரண்டு மூத்த வித்வான்களிடமும் பயிலும் அரிய வாய்ப்பு, சுகுணாவுக்குக் கிடைத்தது. அவரது ஆர்வமும், திறமையும் ஆழ்ந்த புலமையாலும் அக்கறையாலும் வளர்க்கப்பட்டு, அவரை ஒரு சிறந்த மேடைக் கலைஞராக உருவாக்கின.

"ரசிகர்களின் தேவைக் கேற்ப இசை இன்று நிறைய மாறிவிட்டது. ஆனால் அதன் ஆதாரப் பண்புகளுக்கு அச்சுறுத்தல் ஏற்பட்டிருக்கிறதோ என்று பயமாயிருக்கிறது. அவற்றை விட்டுக் கொடுக்காமல் தொடரவே நான் விரும்புகிறேன்" என்கிறார் சுகுணா புருஷோத்தமன்.

சுகுணாவின் இசையையும் பணியையும் அங்கீகரிக்கும் விதமாக, ஸ்ரீ கிருஷ்ண கான சபா இவ்வாண்டு அவருக்கு, சங்கீத சூடாமணி விருதை அளிக்கிறது.

'மிகத் தாமதமாக வரும் அங்கீகாரம் அல்லவா?' என்ற நமது கருத்தை, உணர்ச்சி காட்டாமல் ஒதுக்கிவிடுகிறார் சுகுணா புருஷோத்தமன்.

"என் குருநாதர்கள் செய்யாதே என்று சொன்ன ஒரு காரியத்தை, இப்போது செய்து கொண்டிருக்கிறேன்..." என்கிறார். நானே பாடல்கள் இயற்றி, சி.டி. வெளியிட்டேன். இப்போது அவற்றைப் புத்தகமாக வெளியிட முயன்று வருகிறேன். கச்சேரியின் முடிவில் பாடக்கூடிய துக்கடா பாடல்கள்தாம். 'பாடல்கள் இயற்றுவது மகான்களுக்கேயுரிய தன்மை. நாம் அதை முயன்று பார்க்கக் கூடாது' என்பார்கள் செம்மங்குடியும் மூசிறியும்... நான் மகான் இல்லை... நிச்சயமாக... ஆனால் இந்த விஷயத்தில் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை...!" என்கிறார் சிரித்துக் கொண்டே.

சந்திப்பு : **எஸ்ஸார்**

படம் : **ஸ்ரீஹரி**



தமிழ்நாட்டில் காட்டாமணக்கு நிறையப் பயிரிட்டால் அதிலிருந்து எண்ணெய் எடுத்து, அதை டீசலுடன் கலந்து பயன்படுத்தலாம் என்று அரசு தீர்மானித்தது. காட்டாமணக்கு நச்சுத்தன்மை கொண்டது. கால்நடைகள் தின்னாது. முக்கியமாக இதற்குத் தண்ணீர் வேண்டாம். வறட்சியான நிலங்களில் ஏராளமாகப் பயிரிடலாம். இதனால் விவசாயிகளுக்கு வருமானம் கிடைக்கும் என்ற அளவில், அரசு இதை ஊக்குவிக்கிறது.

ஆனால் நாம் நினைக்கிறபடி, இது விவசாயிகளுக்கு லாபம் தருமா? இதன் பின் விளைவுகள் என்ன?

இவற்றைப் பற்றி ரசாயன நிபுணரும், ஆராய்ச்சியாளருமான என்.எஸ். வேங்கடராமனிடம் கேட்டோம்:

* *இந்த ஆராய்ச்சி இப்போது எந்த அளவில் இருக்கிறது?*

இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் பரீதாபாதில், காட்டாமணக்கு எண்ணெயிலிருந்து பயோ டீசல் உற்பத்தி செய்யும் சாத்தியக் கூறுகளை ஆராய்ந்து வருகிறது. இந்திய இரயில்வே காட்டாமணக்கின் தாவர எண்ணெயைக் கொண்டு, டீசல் இஞ்சினை இயக்கி ஓரளவு வெற்றி கண்டிருக்கிறது. பல பல்கலைக் கழகங்களும், தனியாரும் இதில் தீவிர முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார்கள்.

* *காட்டாமணக்கிலிருந்து நேரடியாக டீசலாக்கி விட முடியுமா?*

இதை பயோ டீசல் என்கிறோம். இதைக் காட்டாமணக்கு எண்ணெயிலிருந்து, வேதியல் முறையில் நொதியூட்டப்பட்ட எண்ணெயாக மாற்ற வேண்டும். இதை ட்ரான்ஸ் எஸ்டெரிஃபிகேஷன் என்பார்கள்.

* *அயல்நாடுகளில் என்ன செய்கிறார்கள்?*

மேற்கத்திய நாடுகளில், தாவர எண்ணெயிலிருந்து பயோடீசல் தயாரிப்பதைப் பரவலாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அமெரிக்காவில் மக்காச்சோளத்திலிருந்தும், பிரான்ஸில் சூரியகாந்தி விதையிலிருந்தும், ஜெர்மனியில் ரேப் விதையிலிருந்தும் எண்ணெய் தயாரித்து, பயோ டீசலாகப் பயன்படுத்தி வருகிறார்கள். இவற்றுக்கு வரவேற்பு உள்ளதால், அரசாங்கங்கள் விவசாயிகளை ஊக்குவிக்கின்றன.



* *நம் நாட்டிலும் அப்படிச் செய்தால் நமக்கு நல்ல பயன் கிடைக்குமல்லவா?*

இங்கேதான் சில சிக்கல்கள் எழுகின்றன. அயல்நாடுகளில் அரசாங்கங்கள் விவசாயிகளுக்கு இதற்காக நிறைய மானியம் கொடுக்கின்றன. நாமோ இங்கே மானியங்களை ஒவ்வொன்றாகக் குறைத்

# காட்டாமணக்கிலிருந்து கச்சா எண்ணெய்!

துக் கொண்டே வருகிறோம்.

தாவர எண்ணெய் உற்பத்திக்காக வழங்கப்படும் மானியத்தை உயர்த்துவது பற்றி ஆராயப்படவேண்டும்.

*• ஏதோ கார்பன் வர்த்தகம் என்று குறிப்பிட்டீர்களே?*

காட்டாமணக்குப் பயிரிடுவதை ஆதாரமாக்கி கார்பன் வர்த்தகம் செய்து, வெளிநாட்டிலிருந்து வருமானம் கிடைக்க சாத்தியம் இருக்கிறது. ஆனால் கியோட்டோ ஒப்பந்தப்படி, இது 2012 ஆம் ஆண்டு வரையே அமல் செய்யப் படும். இதுவோ 2004. இன்னும் சுமார் ஆறு வருடங்கள் கழித்து காட்டா மணக்கு மரம் வளர்ந்து பயன் தர ஆரம் பிக்கும் போது, இரண்டு வருடங்களே நமக்குச் சாதகமாக இருக்கும்.

*• இந்த எண்ணெயின் உபரிப் பொருள் எனப்படும் பை-பிராடக்ட்டை என்ன செய்வார்கள்?*

இதன் பை-பிராடக்ட் எனப்படுவது கிளிசரின்தான். (சினிமா அல்லது சின்னத்திரை மெகா சீரியல்களில் கண்ணீர் வரவழைக்க மட்டுமல்ல!) இதை சோப்பு, டிடர்ஜென்ட் தயாரிப்புகளில் சேர்க்கிறார்கள். காட்டாமணக்கில் எண்ணெய் எடுத்த பின், அந்தப் பிண்ணாக்கை மாட்டுத் தீவனமாக உபயோகிக்க முடியாது. ஏனென்றால் அதில் நச்சுத்தன்மை இருக்கிறது.

சரி, கிளிசரின் உற்பத்தியில் சக்கைப் போடு போடலாமே என்றால், நம் நாட்டில் கிளிசரின் தேவை அதிகபட்சமாக நாற்பதாயிரம் டன்கள் தான். லட்சக்கணக்கான டன் கிளிசரினை வைத்துக் கொண்டு என்ன செய்வது?

பயோ டீசல் உற்பத்தி செய்யும் மேலை நாடுகளில், அதிக அளவு கிடைக்கும் கிளிசரினை என்ன செய்வது என்று தெரியாமல் விழிக்கிறார்கள்!

நம் கிளிசரின் உற்பத்தி அதிகரிக்கும் போது, எதிர்காலத்தில் இதன் விலை வீழ்ச்சி அடையும். கிளிசரின் வாங்க ஆட்கள் இல்லாமல், கிளிசரின் வீணான பொருளாகி விடும் அபாயம் இருக்கிறது. எனவே கிளிசரினுக்குப் புதிய உபயோகங்கள் கண்டு பிடித்து, அதன் விலைப் பிரச்னையைச் சமாளித்தாக வேண்டும்.



• என்.எஸ்.வேங்கடராமன்

*• உங்கள் முடிவான கருத்து அல்லது ஆலோசனை என்ன?*

ஆயிரம் கோடி ரூபாய்க்கு மேல் இதற்காக முதலீடு செய்து தொடங்கப் போவதால், தொடர்ந்த, நிலையான வணிக முயற்சிகளுக்கு, மேலும் ஆராய்ச்சி செய்ய வேண்டும். சரியான திட்டமிடல் வேண்டும். வளர்ந்த மேலை நாடுகளில் ஏற்கெனவே பயோ டீசல் உற்பத்தியைப் பெருமளவில் தொடங்கி விட்டனர். நம் நாட்டில் சிறிய உற்பத்தித் திறனுடன் பயோ டீசல் தொழிற்சாலைகள் நிறுவினால், உலகத்தரத்துக்கு ஈடாக நம் உற்பத்தி இருக்குமா என்பதை எல்லாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

- சாருகேசி

கீதையின் முதல் ஆங்கிலப் பதிப்பு கிழக்கிந்தியக் கம்பெனியாரால் பதிப்பிக்கப்பட்டது. 'கீதை என்றும் அழியாது இருக்கும்' என அப்போதைய கவர்னர் ஜெனரலான வாரன் ஹேஸ்டிங்ஸ் குறிப்பிட்டார்... 'என் வாழ்வின் பெரும்பகுதி துன்பகரமானது என்றாலும், அதன் நிழல் கூட என் மனதைப் பாதிக்காமலிருக்கக் காரணம் கீதையின் கருத்துகள் தான்'' என்றார் மகாத்மா. தேச விடுதலையோடும் ஆன்மிகத்தோடும் தொடர்புடையது கீதை. தேசபக்தராகவும் ஆன்மிகவாதியாகவும் திகழ்ந்த அரவிந்தரின் வரலாறு, கீதை போலவே புனிதமானது. அந்த மகானின் விடுதலைப் போராட்டங்கள் இரண்டு. ஒன்று தேச விடுதலை. இது முதல் பாதி. இரண்டாவது ஆன்ம விடுதலை. இது இரண்டாவது பாதி.

'மகான்களின் வாழ்க்கை வரலாறு' என்ற நூலில் உ. நரசிம்மன்

---

வெட்டி எடுக்கலாம் போல் இருள். ஆங்கில ஆட்சியின் இருள். யாருமறியாமல் அரவிந்தர் கல்கத்தாவிலிருந்து புதுச்சேரிக்குத் தப்பிச் செல்ல வேண்டிய தருணம். ஒவ்வொரு கணமும் அவர் பிடிபடும் ஆபத்து மர்மமாய் தோளின்மேல் உட்கார்ந்து கொண்டிருந்தது.

கப்பல் காத்திருந்தது. பயணிகளோடு பயணியாய் அதில் ஏறி புதுச்சேரிக்குச் சென்றுவிட்டால் போதும். அந்த பிரெஞ்ச் ஆளுகைக்கு உட்பட்ட பூமியில் ஆங்கிலேய அதிகாரிகளின் தொந்தரவின்றி வாழலாம். 'எப்போது பிடிபடுவோம், எப்போது நாடு கடத்தப்படுவோம்' என்ற சிந்தனை இல்லாமல் கண்ணனை தியானிக்கலாம். கண்ணன் கட்டளை அதுதானே!

ஆனால் இதென்ன சோதனை! பிரிட்டிஷ் மருத்துவ அதிகாரி உடல்நலச் சான்றிதழ் தர வேண்டுமாமே! அது இல்லாமல் கப்பலில் ஏற முடியாது என்கிறார்களே! ஒவ்வொரு சின்னச் சின்ன விஷயத்தையும், அரவிந்த அன்பர்கள் ஓடி ஓடி கவனித்து ரகசியமாய்ச் செய்துகூட, என்ன, கடைசியில் இப்படி ஓர் இக்கட்டு!

# பெருமை பெற்றது புதுச்சேரி!



அரவிந்தரின் பெயர் கூட ஜோதிந்திரநாத் மித்ரா என பயணச் சீட்டில் மாற்றப்பட்டிருந்தது. பாண்டிச்சேரி வரை அல்ல, அதையும் தாண்டி இலங்கை வரை பயணச் சீட்டு எடுக்கப்பட்டிருந்தது. ஏதாவது சந்தேகம் என்றால், கப்பலின் இறுதி இலக்கில் தான் சோதிப்பார்கள், அதற்குள் புதுவையில் இறங்கிவிடலாம் என்பதுதான் திட்டம்.

ஆனால் இந்த உடல் நலச் சான்றிதழ் விஷயத்தில் கோட்டைவிட்டது எப்படி? மருத்துவ அதிகாரி பணி முடித்து கல்கத்தா நகருக்குச் சென்றுவிட்டார். மறுபடி நகரின் உள்ளே சென்றால் பிரிட்டிஷ் போலீசாரிடம் சிக்கிக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே?

யோசிக்க நேரமில்லை. கப்பல் அதற்குள் புறப்பட்டுவிட்டால் என்ன செய்வது? எவ்வளவு விரைவாக முடியுமோ, அவ்வளவு விரைவாகச் செயல்பட்டாக வேண்டும். அரவிந்தர் 'வாருங்கள் நடப்போம்' என்றார். அவரோடு அன்பர்கள் சேர்ந்து விறுவிறுவென்று இருளில் மருத்துவ அதிகாரியின் இல்லம் நோக்கி நடந்தார்கள். அரவிந்தருக்குத் தெரியும், கண்ணன் தன்னைக் கவனித்துக் கொள்வான் என்று.

அந்த பிரிட்டிஷ் மருத்துவ அதிகாரி இன்னும் சில மணி நேரத்தில் கப்பல் புறப்படப் போகிறது என்று சொன்னவுடன், நிலைமையின் தீவிரத்தைப் புரிந்து கொண்டார். அரவிந்தரின் ஆங்கிலத்தில் கிறங்கினார் அவர். "ஆங்கிலேயரை விட




**திருப்பூர் கிருஷ்ணன்**

அழகாக ஆங்கிலம் பேசுகிறீர்களே?" என வியந்தவாறே எந்தக் கேள்வியும் கேட்காமல், உடனே சான்றிதழைக் கொடுத்துவிட்டார். "நான் வெளிதேசத்தில் படித்தவன்!" என மெல்லிய முறுவலுடன் கூறிய அரவிந்தர், சிக்கலே இல்லாமல் மருத்துவச் சான்றிதழோடு கப்பலுக்கு வந்து சேர்ந்தார்.

கப்பல் அரவிந்தரையும் அவருடன் பயணம் செய்த விஜயையும் ஏற்றிக் கொண்டு புறப்பட்டது. அன்பர்கள் நிம்மதியோடும் குறும்பு கலந்த முறுவலோடும், 'ஜோதிந்திரநாத் மித்ராவுக்கு ஜே!' என்று கூறி வழியனுப்பினார்கள்! அரவிந்தர் நகைத்தவாறே கையசைத்தார். வழியனுப்ப வந்தவர் முகங்களிலெல்லாம் கண்ணனின் சாயலையே கண்டார் அவர். மருத்துவ அதிகாரி உருவில், மலர்ச்சியோடு உடல் நலச் சான்றிதழ் கொடுத்ததும் கண்ணன் தான் என்றே தோன்றியது அவருக்கு. பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரிபூரணானந்தத்தின் கருணை அவரை நெகிழச் செய்தது.

ஆடி ஆடிச் சென்றது கப்பல். நீலக் கடலலை கப்பலைத் தாலாட்டியது. காற்று குளிர்ச்சியை அள்ளி வீசியது. தாயின் மடியில் பாதுகாப்புடன் அமர்ந்திருப்பது போல் எண்ணினார் அவர். பரந்த வானம் எல்லையில்லாத கைகளால் தன்னை அரவணைத்துக் காத்துக் கொண்டிருப்பதுபோல் உணர்வு ஏற்பட்டது. கிருஷ்ணா! என் தெய்வமே!' என மனத்துக்குள் நழுவி மூழ்கினார். வழக்கம்போல் வேறு சிந்தனையற்று கிருஷ்ண சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார்.

1910 ஏப்ரல் நான்காம் தேதி பிற்பகல் நான்கு மணி. கப்பல் புதுவைக்கு வந்து சேர்ந்தது. கல்கத்தாவை விட்டு நிரந்தரமாக அரவிந்தர் புதுவைக்கு வந்த நாள் அது. ஒட்டுமொத்த மனித குலத்தின் மேன்மைக்காகத் தவம் செய்யப் போகும் அவரைப் புதுவை தன் மண்ணையே மலர்களாக்கி வரவேற்று, ஏற்றுக் கொண்டது. வந்து சேர்ந்த மாதம் நான்காம் மாதம். வந்திறங்கிய மணி நான்கு மணி. மறை ஞானக் குறியீட்டின்படி, நான்கு என்ற எண் அதிமன ஸித்தியைக் குறிப்பது என்கிறார்கள். அதிமனத்தைத் தன்னில் இறக்கிக் கொள்வது தானே அரவிந்தயோகத்தின் சாரம்!

ஸ்ரீ அரவிந்தர் புதுவைக்கு வந்த போது ஏற்கெனவே புதுவையில் தலைமறைவு வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார் பாரதியார். அரவிந்தர் பாண்டிச்சேரிக்கு வருகிறார் என்ற ரகசியத் தகவல் அவரை எட்டியது. அவர் அளவற்ற நிறைவடைந்தார். தெய்வத்தை நேரில் கண்ட ஸித்த புருஷரான அரவிந்தரை வரவேற்கத் தயாரானது பாரதியின் ஆன்மிக மனம்.

மகாகவிக்கும் அரவிந்தருக்கும் தான் எத்தனை ஒற்றுமைகள்! இருவருமே கவிகள்; சுதந்திரப் போர் வீரர்கள்; ஆன்மிக நாட்டம் கொண்ட கண்ணன் அடியவர்கள். பின்னாளில் அரவிந்தர் என்ற அந்த மகாஞானியின் தொடர்பால்தானே, பாரதிக்கு இந்துமதத் தத்துவங்களிலும், வேத விசாரணையிலும் ஈடுபாடு மேலோங்கியது! (அரவிந்தரிடம் ரிக்வேதம் கற்றுக் கொண்டார் பாரதியார். அரவிந்தரின் ஓய்வு நேரங்களில் பாரதியார் அவருக்குத் தமிழ் கற்றுத் தந்ததாய்ச் சொல்லப்படுகிறது. நம்மாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார் போன்ற வைணவப் பெரியார்கள் பாடிய தமிழ்ப் பாசுரங்

## அருள்வாக்கு

ஸமீபத்தில் 'மனிதநேயம்' என்று ஒரு வார்த்தை உலாத்துகிறதாகப் பார்க்கிறேன். நல்ல வார்த்தைதான். காதுக்குக் கேட்கவும் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனாலும் 'மனிதாபிமானம்' என்று இத்தனை நாளாகச் சொல்லி வந்ததில் 'அபிமானம்' என்ற ஸம்ஸ்கிருத வார்த்தை இருப்பது பிடிக்காமல்தான் இப்படி மாற்றியிருக்கிறார்கள் என்பதைக் கவனிக்கும் போது பரிஹாஸமாகத்தான் இருக்கிறது! ஏனென்றால், 'நேயம்' என்பதும் ஸம்ஸ்கிருத 'ஸ்நேஹ'த்தின் திரிபுதான்! ஸம்ஸ்கிருதம் என்பது இலக்கண சுத்தமான பாஷை. அதையே பேச்சுக் கொச்சையாக இருக்கும்போது ப்ராக்ருதம் என்பார்கள். அந்த ப்ராக்ருத பாஷையில்தான் ஸம்ஸ்கிருதத்தில் உள்ள நாடகங்களில் ஸ்த்ரீ



[redacted] கள், படிப்பில்லாதவர்கள் ஆகியவர்கள் ஸம்பாஷிப்பார்கள். அதிலே 'ஸ்நேஹம்' என்பது 'நேயம்' என்றுதான் வரும். அது போகட்டும்; 'மனிதநேயம்' என்கிறதிலும் முதலில் மனித என்று வைத்துக் கொண்டிருக்கிறார்களே, அதுவும் ஸம்ஸ்கிருத 'மநுஷ்ய'வின் திரிபுதானே? ஒருத்தருக்கும் ஒரு ப்ரயோஜனமுமில்லாமல் இப்படியெல்லாம் வெறும் த்வேஷத்தில் செய்கிற கார்யங்கள் கடைசியில் பித்துக்குளித்தனமாகத்தான் முடிகின்றன!...

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

களை பாரதியார் படிக்கவும், பாடவும் கேட்டு, அரவிந்தர் மகிழ்ந்ததுண்டு).

தம் நண்பரான மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியாரை 'வாருமய்யா என்னுடன்!' என அழைத்துக் கொண்டு, அரவிந்தர் வருவதற்கு முன்னமே, அவரைத் தங்க வைக்க இல்லம் தேடிப் புறப்பட்டார் மகாகவி. பெரும் பணக்காரரும், பாரதியின் நெருங்கிய நண்பருமான கலவை சங்கரன் செட்டியாரைத் தேடிப் போனார்கள் அவர்கள்.

சங்கரன் செட்டியார் என்ன சாமான்ய ஆளா! வெறும் பணமிருந்தால் போதுமா! அப்படிக் கிடைப்பார்கள் ஆயிரம் பேர்! அவர்களால் யாருக்கு என்ன லாபம்! வள்ளல் தன்மை நிறைந்த மனம் வேண்டாமா! ஊரின் நடுவே கொத்துக் கொத்தாய்ப் பழுத்துத் தொங்கும் கனிகளை உடைய மரம் இருப்பது போன்றது, ஓர் ஊரில் நல்ல மனம் படைத்த வள்ளல் இருப்பது என்று வள்ளுவர் சொல்கிறாரே! அத்தகைய பழுத்த மரம் செட்டியார். அவர் மனம் நன்கு கனிந்த மனம். பாரதியார் நண்பர்களுடன் செட்டியாரை மாலை வேளைகளில் போய்ப் பார்ப்பதுண்டு. சாப்பாட்டை மறந்து மணிக் கணக்காய்ப் பேசிக் கொண்டிருப்பதும் உண்டு. சங்கரன் செட்டியார் ஒரு புண்ணியாத்மா. இல்லாவிட்டால், பல ஆண்டுகளுக்கு முன்பு விவேகானந்தர் புதுச்சேரிக்கு வந்தபோது அவரைத் தம் இல்லத்தில் தங்க வைக்கும் பாக்கியம் அவருக்குக் கிட்டுமா! இப்போது அரவிந்தரையும் தங்க வைக்கும் அற்புதமான பேறு!

பாரதியின் பேச்சுக்கு மறு பேச்சு ஏது! பரபரப்பாகத் தம் வீட்டு மாடியைத் தூய்மை செய்தார் செட்டியார். கோமுட்டிச் செட்டித் தெருவில் இருந்த சங்கரன் செட்டியார் வீட்டு மாடியில் தான், ஆசிரமம் அமைப்பதற்கு முன், தொடக்கத்தில் சில மாதங்கள் தங்கினார் அரவிந்தர். இன்று வீடுதரும் அருளாற்றல் உடையவராய்ப் பலரால் துதிக்கப்படும் ஸ்ரீ அரவிந்தர் வசிப்பதற்கு, கொஞ்ச காலம் வீடு தந்த பாக்கியம் செட்டியாருடையது. வனவாசத்தின்போது பஞ்சவடியில் ராமபிரான் தங்குவதற்குப் பர்ணசாலை கட்டிக் கொடுத்த லட்சுமணனுடையதைப் போன்று, ஒரு தொண்டைச் செய்து, அரவிந்தர் சரித்திரத்தில இடம் பெற்று விட்டார் அவர்.

இந்திய ஆன்மிகச் செழுமையைக் கட்டிக் காத்ததிலும், காப்பதிலும் தமிழகச் செட்டியார்களுக்குப் பெரும்பங்கு உண்டே! காசி உள்பட ஏராளமான தலங்களில் அவர்கள் கட்டி வைத்துள்ள இலவசச் சத்திரங்கள் எத்தனை அடியவர்களை இன்றளவும் ஆதரித்து வருகின்றன! செட்டியார்களின் ஆன்மிகத் திருப்பணியில் மகுடம்போல் அமைந்துவிட்டது, ஸ்ரீஅரவிந்தரைச் சங்கரன் செட்டியார் பக்தியோடு பராமரித்த பணி.

செட்டியார் வீட்டில் வசித்த காலத்தில் தான், சராசரி மனிதர்கள் நினைத்தாலே திகைப்படையும் ஒரு பரிசோதனையில் ஈடுபட்டார் ஸ்ரீ அரவிந்தர். அவர் நிகழ்த்திய அந்தப் பரிசோதனையை அறிந்து, வியப்பும் கவலையும் கொண்டார்கள் பாரதியார், ஸ்ரீனிவாசாச்சாரியார் உள்ளிட்ட அவரது அன்பர்கள். பக்தியோடு தங்க இடம் கொடுத்து அரவிந்தரைப் பராமரித்து வந்த சங்கரன் செட்டியார் 'தெய்வமே! இதென்ன சோதனை!' எனக் கடும் கவலை அடைந்தார். அரவிந்தர் மேற்கொண்ட அந்தப் பரிசோதனை...

(அமுதம் பெருகும்)



# சர்ச்சைக்கு மறுபெயர் மாநகராட்சி!

சென்னை மாநகராட்சி மன்றத்தில் தீர்மானங்கள் விவாதங்களின்றியே நிறைவேற்றப்படுகின்றன. இதனால் மக்கள் பிரச்னைகள் மன்றத்தில் அலசப்படுவதே இல்லை என்ற சர்ச்சை, தற்போது எழுந்துள்ளது. இது குறித்து கருத்துக் கூறிய மாமன்ற பா.ஜ.க. உறுப்பினர் தனுஷ் கோடி,

"தி.மு.க.வும், அ.தி.மு.க.வும் பங்காளிச் சண்டை போட்டுக் கத்தால் மன்றத்துல நேரம் சரியா இருக்கு. இதை துணை மேயர் தமக்குச் சாதகமா பயன்படுத்தி எல்லா தீர்மானத்தையும் விவாதத்துக்கே விடாம, தன்னிச்சையா நிறைவேற்றிடறாரு. இது கண்டிக்கத்தக்கது. உதாரணமா, ரெண்டு பிள்ளைகளுக்கு மேல பெத்தவங்க, உள்ளாட்சித் தேர்தல்ல போட்டியிடக்கூடாது என்பது தொடர்பான தீர்மானம் ஒண்ணு சபையில் விவாதம் பண்ணாமலே நிறைவேறுச்சு. இது ரொம்பத் தப்பு. காரணம், இந்தத் தீர்மானத்தைக் காரணம் காட்டி நல்லா சர்வீஸ் பண்ற ஒருவருக்குத் தடை விதிக்கப்படலாமே! இதனால பாதிக்கப்படறது மக்கள்தான். இதையெல்லாம் மன்றத்துல பேசினாத்தானே வெளியில தெரியும். ஆனா அதுக்கு வாய்ப்பே தர்றதில்ல" என்றார் வருத்தத்துடன்.



• கராத்தே தியாகராஜன்

• தனுஷ்கோடி

'ஏன் இப்படி பேச வாய்ப்பளிக்கவில்லை' என துணை மேயர் கராத்தே தியாகராஜனிடம் கேட்ட போது, "எல்லாத் தீர்மானங்களும் மண்டலக் குழு, நிலைக் குழு என அனைத்திலுமே விவாதிக்கப்பட்டு பின்னர்தான் மன்றத்துக்கு வருது. மன்றத்திலயும் அரசியல் பேச எதிர்கட்சிக்காரங்க முயற்சி பண்றாங்க. அப்படி அரசியல் பேச வாய்ப்புத் தரலைன்னா, வெளில வந்து மீடியாகிட்ட புலம்புறாங்க. ஒவ்வொரு தீர்மானமும் மக்கள் நலன் சம்பந்தப்பட்டது. அதனால விவாதம் பண்ண நேரமில்லாம, நேரடியா தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டிய இக்கட்டான சூழ்நிலை வந்துடுது. இதுக்கெல்லாம் வழி காட்டியே ஸ்டாலின்தானே? அவர் செஞ்சா ரைட். நாங்க செஞ்சா தப்பா?" என்று கேள்வியோடு முடித்தார்.

கொஞ்ச நாளைக்கு முன்னால ஊழல் விவகாரம். இப்போ சர்ச்சை விவகாரம். நாளை மீண்டும் ஊழல் விவகாரம்? பாவம் சென்னை மக்கள்.

(சரி. மன்றம் நடக்கற ரிப்பன் மாளிகை எப்போ பொலிவடையப் போகுது?)

📷 + ✍ இரா.முத்துக்குமார்

## டுமீல் விளம்பரம்

கையடக்கமானது - கனம் அற்றது - ஸ்டேட் ஆஃப் தி ஆர்ட் டெக்னாலஜியில் தயாரானது - விற்பனைக்குத் தயாராக உள்ளது. மேற்கண்ட விளம்பரம் பலரையும் பரபரப்பாக்கியது சென்ற வாரம். காரணம், இவை தற்காப்புக்காக பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ள கைத் துப்பாக்கியின் சிறப்பம்சங்கள். இந்திய ராணுவத் துறையின் கீழ் இயங்கும் Gun & Shell Factory நிறுவனத்தின் தயாரிப்பான இதற்கு 'Ashani' என்று பெயர். இதனை உடனே வாங்க வேண்டுமா? கையில் லைசென்ஸ் இருக்கா?, உடனே இந்த முகவரியை அணுகுங்கள் என்று விளம்பரம் செய்திருப்பது. தொழில்நுட்பத் துறையில் நமது முன்னேற்றத்தைக் காட்டுகிறதா அல்லது நாட்டின் பாதுகாப்புக் குறைபாடுகளை எடுத்துக் காட்டுகிறதா? என்பதுதான் பலரது சந்தேகம்.

(வல்லரசு நாடாகப் போகுது இந்தியான்னு சொல்றாங்களே - அது இதுதானா?)

- ஸ்வரா



# ஹீரோக்களின் ஆதிக்கம் ஒழியும்!

சென்னையில் ஆட்டோகிராப் 200வது நாளை நெருங்கிக் கொண்டிருக்க, 'நியூ' இன்னொரு பக்கம் தனிக்காட்டு ராஜாவாக அசத்திக் கொண்டிருக்கிறது. இந்த படங்களில் விஜய், அஜித், சூர்யா நடிக்க முடியாததன் பலனாய் இயக்குனர்களே ஹீரோ வேஷம் கட்ட, தமிழ் சினிமா ரசிகர்களுக்கு கிடைத்திருக்கிறது இரு புதிய கதைகள்.

டி.எஸ்.பி. பக்கம் சென்றபோது, இந்த விஷயத்தை நாளைய இயக்குனர்கள், எடிட்டர்கள், கேமிரா மேன்கள் அனைவரும் விவாதித்துக் கொண்டிருக்க, காதை அதில் நுழைத்தோம்.

"மச்சான், இந்த ட்ரெண்ட் எப்படியிருக்கும்னு நினைக்கறே? சும்மா கீப்ஸுக்குல ரெண்டு பேரும் ஜெயிச்சாங்கன்னு நினைக்கிறியா?"

"ஸீ, நல்ல கதைகளில் நடிக்க விஜய்யோ, அஜித்தோ, தனுஷோ ஒத்துக்கறதில்லை. அவங்களுக்குத் தேவை ஆக்ஷன், மட்டுமே. புழுதி பறக்காத படத்துல அவங்களால இனி நடிக்கவே முடியாது. ரைட்!"

"மச்சி, நீ அவங்க சைடிலிருந்தும் பார்க்கணும், யோசிச்சுப் பாரு விஜய் மூர்க்க வாங்க சைக்கிளை மிதிச்சிகிட்டு, ஞாபகம் வருதே ஞாபகம் வருதேன்னு அழுதிட்டே பாடினா நல்லாவாயிருக்கும்?"

"ம்.. அதுக்கு அவரே தான் காரணம். ஆரம்பத்துலயே இயல்பான படங்களில் நடிக்காதது அவர் தப்பு. ஆனா விக்ரம் 'பிதாமகன்'னுக்கு சூட் ஆனாரே."

(இதற்கிடையே ஆட்டோகிராப், நியூ படங்களை ஷாட் பை ஷாட்டாக அலசுகிறார்கள்).

"வாலி, குஷியை விட 'நியூ'வில் கிளாமர் அதிகம் தான். அதுக்குக் காரணம், எஸ்.ஜே. சூர்யா, தான் ஜெயிக்கணும்கிற பயத்தைவிட, ஒரு டைரக்டரா படம் ஜெயிக்கணும்னு அப்படி இப்படின்னு சில மசாலா பொறிகளை தூவியிருக்காரு இல்ல!"



"டேய், 'ஆட்டோகிராப்'புல ஹீரோயிஸம் எதுவும் இல்லையே. கதையை விட்டு சேரன் கொஞ்சமும் விலகலையே. இதுலயிருந்து நமக்கெல்லாம் கிடைச்சிருக்கிற சந்தோஷ டெலிகிராம் - "இயக்குனர்கள் ஹீரோவானதால லோ பட்ஜெட் படங்கள் வர மீண்டும் சாத்தியமிருக்கு. இதனால தமிழ் சினிமாவுல ஹீரோக்களின் ஆதிக்கம் ஒழிய ஆரம்பிச்சிருக்கு, என்னங்கடா நான் சொல்றது"

"ஐந்து கோடியில படம் எடுத்தா அதுல இரண்டரைக் கோடி ஹீரோ சம்பளத்துக்கே போயிடுது. இந்த அவலம் இனி ஒழிக்கப்படும். தேங்க்ஸ் டு சேரன் மற்றும் எஸ்.ஜே. சூர்யா, கலக்கிட்டாங்க."

("இதுல யார் யார் உங்களையே ஹீரோவா நினைக்க ஸ்கிரிப்ட் ரெடி பண்ணீங்க" என்றதுதான் தாமதம், ஆளாளுக்கு வெட்கப்பட்டுக் கொண்டார்கள். அபாரமான எக்ஸ்பிரஷன் அது!)

✍ எழில்

## ப்ரூஃப் ரீடர் கலைஞர்

சென்னையில் எழுத்தாளர் மா.நன்னன் நடத்திய விழா வொன்றில் பிழைத் திருத்தம் பற்றி கலைஞரை மேடையில் வைத்துக் கொண்டு ஏகத்துக்கும் பேசிக் கொண்டிருக்க, அதை மௌனமாக ரசித்துக் கொண்டிருந்த கலைஞர், மைக்கைப் பிடித்தவுடன் அன்று வெளியிடப்பட்ட புத்தகமொன்றில் இருந்த பிழையைச் சுட்டிக்காட்டி, 'பிழையைத் திருத்துவதே இன்றும் எனக்கு வேலையாக இருக்கிறது' என அரசியல் கலந்து நக்கலடிக்க, அனைவரும் அசந்துதான் போயினர், கலைஞரது சமயோசிதத்தைக் கண்டு.

✍ கலை





## டும்...டும்...பவன்!




வாக்-இன் இன்டர்வ்யூ தெரியும். வாக்-இன் திருமணம்..! அட புதிதாய் இருக்கிறதே! இப்படி ஒன்றை அறிமுகப்படுத்தியிருக்கிறது தி.நகர் ஜி.என். செட்டி ரோட்டிலுள்ள மீனாட்சி பவன். திருமணத்திற்கு என்னென்ன தேவையோ (மணமக்கள் தவிர) எல்லாம் மீனாட்சி பவனில் இன்ஸ்டென்டாக காத்துக் கொண்டிருக்கிறது.

25,000 ரூபாய் கொடுத்து விட்டால் போதும். 200 பேருக்கு வடை பாயசத்தோடு சாப்பாடு, பன்னீர் செம்பு, சீனி, விரலி மஞ்சள், நூல் கண்டு எனத் தொடங்கி வாழை மரம் கட்டுவது வரை எல்லாம் சுலபமாக முடிந்து விடுகிறது. அய்யருக்கு தனியாக அலைய வேண்டாம். அவரும் available. 'வீட்டைக் கட்டிப்பார்' என்பது மட்டும்தான் கடினம். "கல்யாணம் பண்ணிப் பார்" என்பது ரொம்ப ஈஸி மீனாட்சி பவனால்.

44/1 ஜி.என். செட்டி ரோடு, தி. நகர், சென்னை - 600 017. செல்: 98405 69636.

✍ கங்கா

## PNB-ன் 'மகளிர் மட்டும்!'

தமிழகத்தில் பிறந்து டெல்லியிலே கோலோச்சுவது ஒவ்வொரு தமிழனுக்கும் பெருமிதம் தரக்கூடியதே. அத்தகைய பெருமிதத்தை சமீபத்தில் நமக்குத் தந்தவர், நெல்லை மாவட்டம் களக்காடு கிராமத்தில் பிறந்து, ஒரு வங்கியில் புரொபேஷனரி ஆபீசராகத் துவங்கி இன்று பஞ்சாப் நேஷனல் வங்கியின் வீட்டு வசதி நிதி நிறுவன மேலாண்மை இயக்குனராக, டெல்லியில் பணியாற்றும் கே.ஜி. சத்யசிங்கன். சமீபத்தில் சென்னைக்கு வருகை தந்த இவர் PNB வீட்டு வசதி நிதி நிறுவனத்தின் திட்டங்கள் குறித்தும், Floating Interest-ல் நிலவும் சர்ச்சைகள் குறித்தும் விரிவாகப் பேசினார்.

"எங்கள் நிறுவனம் வீடு வாங்க, கட்ட, பராமரிக்க, பழுது பார்க்க நீண்ட காலக் கடன் வழங்குகிறது. இதற்காக சுமார் 550 கோடி வரை வழங்கத் திட்டமிட்டுள்ளோம். அதில் சென்னைக்கு மட்டும் 15 கோடி வரை வழங்க உள்ளோம். தேவைப்பட்டால் மேலும் சென்னை மக்களுக்காகத் தரத் தயாராக உள்ளோம். இவ்வாண்டு சென்னைக் கிளை தனது இலக்கை நிச்சயம் அடையும்.

Floating Interest-ல் சர்ச்சை தவிர்க்கப்பட வேண்டும். உலக மார்க்கெட் நிலவரங்களைப் போன்றவற்றிற்கேற்ப வட்டி விகிதம் குறைந்தால், அதனை அனுபவிக்க விரும்புபவர்கள், அதிகரிக்கும் போது ஏற்க மறுக்கின்றனர். இதனை சீர் செய்ய, வாடிக்கையாளரின் விருப்பத்திற்கேற்ப Fixed (or) Floating முறைக்கு மாறிட, ஒரு திட்டம் அறிமுகப்படுத்தப்பட உள்ளது. ஆனால் அதற்கு சில காலம் பிடிக்கும். காரணம், Interest Mismatch என்ற நிலை வராமலிருக்க தேவையான நுணுக்கங்களைக் கையாள வேண்டியுள்ளது.


• கே.ஜி. சத்யசிங்கன்

மேலும் எங்கள் வங்கி, பணி நிமித்தமாக சென்னை போன்ற பெரு நகரங்களுக்குத் தனியாக வரும் பெண்களுக்காக, பிரத்யேகமாக, பாதுகாப்பான, சுகாதாரமான, அதிக கெடுபிடிகளற்ற தங்கும் விடுதிகள் கட்ட முயற்சி மேற் கொள்ளவுள்ளோம்.

எங்களிடம் கடன் வாங்கிய சிலர் பணத்தைத் திருப்பிக் கட்டாமல் ஏமாற்ற முயல்கின்றனர். அதற்காக SARFACI ACT என்ற சட்டம் வாடிக்கையாளருக்கு நோட்டீஸ் கொடுத்து, 146 நாட்களில் அவ்வீட்டை ஏலம் விட எங்களுக்கு அதிகாரத்தை வழங்கியுள்ளது. அதனைக் கொண்டு இதுவரை ஒன்றே கால் கோடி ரூபாயை வசூலித்தும் இருக்கிறோம்.

(சென்னை வாடிக்கையாளர்கள் ரொம்ப நல்லவங்க. அதனால SARFACI ACT-க்கு அவசியமே இல்லை. லோ, சென்னைக்கு நிறைய லோன்ஸ் சாங்ஷன் பண்ணுங்க சார்!)

📷 + ✍ முத்து

### திருட்டுக்கு நோ - வே

சிட்டி பேங்க், GE காபிடல் போன்ற பல முக்கிய நிறுவனங்களுக்கு சேஃப்டி லாக்கர்ஸும் பாதுகாப்பு பெட்டகங்களும் நிறுவித் தந்துள்ளது கோதாரி சேஃப் டெபாசிட்ஸ் லிமிடெட். 1936-ஆம் வருடம் முதல் தலைமுறை தலைமுறையாக தொடர்ந்து வாடிக்கையாளர்களது உடைமைகளை இவர்கள் பத்திரப்படுத்தி வந்திருக்கிறார்கள்.

எந்த நிறுவனமாக இருந்தாலும் அவர்களது பிரத்யேக தேவைகளுக்கு ஏற்றவாறு பாதுகாப்பு வசதிகள் வடிவமைக்கப்படுகின்றன. நில நடுக்கம் வந்தால் கூட இவர்களது லாக்கர்கள் மிக பத்திரமாக இருக்கும் என்பது இவர்களது உத்திரவாதம். உடைத்தோ, மாற்றுச் சாவி கொண்டோ இதனைத் திறப்பது இயலாது. திருட்டுக்கு இனி கட்டாயமாக நோ வேதான்!

கோதாரி சேஃப் டெபாசிட்ஸ் லிமிடெட்,
சென்சரி சென்டர்,
39, டி.டி.கே. சாலை,
ஆழ்வார்பேட்டை,
சென்னை - 18.
போன்: 24983832

# வாழிய சோழா!




உணவை திருவிழாவாகக் கொண்டாடுவதில் நட்சத்திர ஹோட்டல்கள் என்றைக்குமே சளைத்ததில்லை. அதிலும் ஷெராடன் க்ரூப் ஓட்டல்கள், எப்பொழுதுமே இதுபோன்ற திருவிழாக்களைக் கொண்டாடிக் கொண்டேவிருக்கும்.

இதோ, இந்த சீஸனில் பவர் லஞ்ச், நார்தர்ன் சதர்ன் என இரு ஃபெஸ்டிவலை உணவுப் பிரியர்களுக்காக ஆரம்பித்துள்ளது சோழா ஷெராடன் ஓட்டல்.

தேசிய மற்றும் சர்வதேச உணவு வகைகளைக் கலந்தடித்துத் தருவதுதான் பவர் லஞ்ச். சென்னையில் இருந்து கொண்டே அயல்நாட்டு உணவு வகைகளை ருசிப்பதென்றால் லேசுப்பட்டதா என்ன? இதுபோல் வட இந்திய உணவு வகைகளை இங்கு காணவே முடியவில்லையே என்று ஏங்கும் ஹிந்திவாலாக்களின் ஏக்கத்தை தீர்க்கிறது, மாலையில் கோலாகலமாக நடைபெறும் நார்தர்ன் சதர்ன். ஹோ! வடநாட்டு பிரியாணியை ஒரு வாய் பார்க்கணுமா, சைனீஸ் ஒரு பிடி பிடிக்கணுமா - 6ம் தேதி வரை, சோழா உங்கள் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.



📷 ஷிவ்

✍ கண்

# ஸ்பிலென்டர் பூந்தோட்டம்





ஏற்கெனவே வளைய வளைய வரும் மன்ரேஜ் கேர்ள்களால் ஸ்பென்சர் ப்ளாசா ஒரு பூந்தோட்டமாகத்தான் பூத்துக் குலுங்குகிறது. இதனுள்ளே ஃப்ளவர் மிஸ்ட் எனும் செயற்கைப் பூக்களாலான பொடிக் ஷாப், கண்டிப்பு ஃப்ளவர் ஷோவை சென்னையில் பார்த்த திருப்தியைத் தருகிறது.



தென்னிந்தியாவிலேயே செயற்கைப் பூக்கள் இங்குள்ளது போல் வகை வகையாக வேறெங்கும் கிடையாதாம். அலுவலகங்களிலும், பணக்கார வீடுகளிலும் அலங்கார ரூட்டும் இப்பூக்கள், ரூ. 30 முதல் ரூ 2000 வரை இங்கு உள்ளது. தொட்டுப் பார்த்தாலொழிய, இவை செயற்கை என யாராலும் சொல்ல முடியாது. வேலைப்பாடுகளில் அத்தனை நேர்த்தி. சும்மாவா? அனைத்தும் சீனா, சிங்கப்பூரிலிருந்து வரவழைக்கப்பட்டதாச்சே!

இதில்லாமல், நியூ இயர் நாட்களில் இங்கு செம கூட்டம் வருமாம். அட, முக்கியமான நாளை விட்டு விட்டீர்களே என்றோம். "ஆங், பிப்ரவரி 14ம் தேதி நிறைய இளம் ஜோடிகள் பூ வாங்கிச் செல்வார்கள்" என்ற குஜுகுஜுவான பதில் கிடைத்தது. அதானே!

✍ கங்கா

📷 முகில்

# 'நான் பிரசாரக் கவிஞரா?'




இலக்கியம், அரசியல், மீடியா என தான் தடம்பதித்த அனைத்திலும், பாராட்டத்தக்க பதிவுகளைச் செய்து வருபவர் கவிஞர் நிர்மலா சுரேஷ். தமது மொழி பெயர்ப்பில் உருவான இராக்கியக் கவிதைகள், இன்றைய கவிஞர்களின் படைப்புகள் குறித்த தமது ஆதங்கம் மற்றும் இலக்கியவாதியின் அரசியல் பின்புலம் ஆகியன குறித்து அளவியபோது :

"இராக்கியக் கவிதைகளை மொழி பெயர்க்கக் காரணம் பழிவாங்கப்பட்ட, கைவிடப்பட்ட இராக்கிய மக்களின் கதறலை, அரற்றலை, ஆற்றாமையை ஒரு மானுட நோக்கோடு தமிழுலகுக்குத் தருவதற்காகத்தான். இதுவரை இத்தகைய கவிதைகளை யாரும் மொழி பெயர்க்கவில்லை. ஆகவே, இதனை நான் ஓர் சாதனையாகவே எண்ணுகிறேன். அடுத்து ஒரு புகழ்பெற்ற கவிஞரின் படைப்பு ஒன்றை மொழியாக்கம் செய்ய இருக்கிறேன். (யார் என்பது சஸ்பென்சாம்)

இன்றைய புதுக் கவிஞர்கள், ஆபாச, இரட்டை அர்த்த வார்த்தைகளை சகட்டு மேனிக்கு கவிதைகளில் கலப்பது, தொடர்ந்து அதிகரித்தே வருகிறது. இந்தப் போக்கு மிகவும் அபாயகரமானது. அத்தகைய பாடல்கள் (அ) கவிஞர்கள் நிலைத்து நிற்பது கடினம். மேலும் இப் புதுக் கவிஞர்கள் பயன்படுத்தும் வார்த்தைகளில், ஓர் அழுத்தம் என்பதே இல்லை. புதியவர்கள் தான் இப்படி என்றால், அனுபவமிக்க கவிஞர்களும் இதே முறையைக் கையாள்வதுதான் உச்சகட்ட வருத்தம். பெண் கவிஞர்கள் தமது பெண்மை தொடர்பான பிரமங்களையும், சங்கடங்களையும் புலம்பல்களாக 'பெண்ணியம்' என்ற போர்வையில் திணிக்கின்றனர். பெண் கவிஞர்கள் 'பெண்ணியம்' என்ற வட்டத்திலிருந்து Main Frame-க்கு வர வேண்டும். (நியாயமான ஆதங்கம் தானே!)

பொதுவாக அரசியல் பின்புலம் கொண்ட ஓர் எழுத்தாளரது படைப்புகள், வெறும் பிரசாரமாகவே இருக்கும் என்பதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. இது ஒரு தவறான பார்வை. எனது படைப்புகள் ஒருசிலவற்றில் அரசியல் இழையோடியிருக்கலாம். அதற்காக படைப்புகள் முழுவதும் பிரசாரம் என்று கூற முடியாது. அதே சமயம் அரசியலைக் கேடயமாகக் கொண்டு, தமது கருத்துக்களை மக்களிடம் திணிப்பவர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். ஒருவேளை எனது படைப்புகளுக்கு கட்சி முத்திரை குத்தினால், அது குறித்து எனக்கு எவ்விதக் கவலையுமில்லை. காரணம் மக்களும், எனது படைப்புகளின் ரசிகர்களும், கொள்கைகளும் தான் எனக்குப் பிரதானம்." (சபாஷ்!)

✍ இரா. முத்துக்குமார்



டாக்கீஸ் டாக்

# ஊருக்கு இளைத்தவரா கமல்?

'**கி**ராமத்தைப் பார்த்தால் பாவமாய் தான் இருக்கிறது' என்கிறார் ஒரு இளம் இயக்குனர். வளரும் கலைஞர்களுக்குப் பாடமாய் இருக்க வேண்டிய கமல், 'விருமாண்டி'க்குப் பிறகு 'வசூல் ராஜா எம்.பி.பி.எஸ்'ஸிலும் சிக்கிக் கொண்டு, யாரிடம் போய் தகுந்த ஆலோசனை கேட்பது என்று தவித்துக் கொண்டிருக்கிறார்.

சமீபத்தில் தமிழகமெங்கும் ஒட்டப்பட்ட 'திருப்பாச்சி' போஸ்டர்களில் கூரிய அரிவாளோடு தான் விஜய் முறைத்துக் கொண்டிருக்கிறார். அரிவாள் ஸ்டைலில் தான் வெட்டிடும் வடிவமைக்கப்பட்டிருந்தது. ஆனால் இது பற்றி இன்று வரை கிருஷ்ணசாமி வாய் திறக்கவேயில்லையே. இதையே கமல் செய்திருந்தால், வானுக்கும் பூமிக்கும் குதித்திருப்பாரே.

**ர**மணா படத்தில் ஒரு கால் மணி நேரம் டாக்டர்களின் அட்டூழியங்களைத் தோலுரித்து சந்தி சிரிக்க வைத்திருப்பார் விஜயகாந்த். அன்றைக்கு அட, தங்களை அப்படியே காட்சி பிரதிபலித்திருக்கிறதே என்று டாக்டர்கள் மகிழ்ந்திருப்பார்கள் போல. ஆனால் இன்றைக்கு டாக்டர்களைப் பற்றி அவதூறாக காட்சிகளும், கேவலமான வசனங்களும் படத்திலில்லை என்று கமல் ஸ்டாம்ப் பேப்பரில் கையெழுத்திட்ட பிறகும், கோர்ட் படியேறி 'வசூல்ராஜா எம்.பி.பி.எஸ்' என்ற தலைப்பிற்கு தடை வாங்கி வந்திருக்கிறது மருத்துவர் சங்கம்.

தமது இரண்டு மகன்களை டாக்டருக்குப் படிக்க வைத்த இயக்குனர் கஸ்தூரி ராஜாவே, டாக்டர்கள் வசூல்ராக்கள்தான் என்று ஒப்புக் கொள்கிறார். பொது மக்களும் தங்கள் வாழ்நாளில் பல டாக்டர்களை வசூல்ராஜா உருவில் கண்டிருக்கின்றனர். இது போன்று நிஜத்தில் ஏற்படும் கறைகளைக் களைய முற்படாமல், வெறும் மாயையான சினிமாவில் தங்களுக்கு களங்கம் ஏற்பட்டிருப்பதாக இத்தனை தூரம் மல்லுக் கட்டுவது ஆரோக்கியமான செயலா என்பதை, டாக்டர்கள் அவரவரின் மனசாட்சியைக் கேட்டுக் கொள்ளட்டும்.

பூலோகத்திலுள்ள பூதங்களெல்லாம் ஒன்று கூடி ஐகோர்ட் படியேறி, "நாங்களே பூதங்கள், ஆனால் தமிழ்நாட்டிலுள்ள டாக்டரொருவர் மாத்ருபூதம் என்று பெயர் வைத்திருப்பது எங்களுக்கு தர்மசங்கடமாக இருக்கிறது" என்று வழக்குத் தொடுத்தால், எப்படி காமெடியாக இருக்குமோ அப்படித்தான் டாக்டர்களின் வசூல்ராஜா கோரிக்கையும் உள்ளது.

✍ ச.நா. கண்ணன்

## க் ளி ப் பி ங் ஸ்

'**ஜோ**தி' படத்தின் எதிர்பாராத கலெக்‌ஷனும் லாபமும், சிபியை மெல்ல கமர்ஷியல் வட்டத்திற்குள் இழுத்துக் கொண்டு விட்டது. இதெல்லாம் [illegible] ஹீரோ நெ.1 ஆகணும் என்ற வெறியோடு இருக்[illegible] சிபி. இந்த வேகம் கதைத் தேர்விலும் இருக்கட்டும்.

**இ**துவரை வெற்றிக்கனியைத் தொடாத ஷாமிற்கு மேலும் பல இடைஞ்சல்களாக 'உள்ளம் கேட்குமே' ரிலீஸாகாமல் கிடப்பதும், பூஜை போட்ட படங்கள் அப்படியே தூங்கிப் போவதும் என, எந்தவொரு நடிகரும் சந்திக்காத துயரங்களைச் சந்தித்து வருகிறார். இருப்பினும் சீயான் விக்ரம் அடிக்கடி போனில் அழைத்து ஆறுதல்களும் டிப்ஸ்களும் அள்ளித் தருவதுதான் ஷாமிற்கு கிடைக்கும் ஒரே ஆறுதல்.

**லே**ட்டாக வந்தாலும் லேட்டஸ்டாக வந்து கலக்கிக் கொண்டிருக்கிறார் ரீமாசென். சிம்ரன் VTS காலியிடம் பின் அதற்கு மாற்றாக, தயாரிப்பாளர்கள் அனைவரும் ஓடியது சோனியா அகர்வால் பின்னால்தான். ஆனால் அவரைப் பற்றிய கிசுகிசுக்களும் செல்வராகவன் டேட்ஸ்களை ப்ளாக் பண்ணியதும், ரீமாசென்னிற்கு சாமரம் வீசியிருக்கிறது.

**சி**ம்புவின் அடுத்த ரிலீஸான 'மன்மதன்' படத்திற்கு, எதிர்பார்ப்புகள் நாளுக்கு நாள் கூடிக் கொண்டேயிருக்கிறது. இதற்கு வசனம் எழுதிய பாலகுமாரன் ஒரு படி மேலே போய், படத்தில் வரும் ஒவ்வொரு காட்சிகளும் கண்ணில் ஒற்றிக் கொள்வது போலிருக்கும் என்கிறார். இதன் ஆடியோ விழாவில் காண்பிக்கப்பட்ட பாடல்களில், ஜோதிகா, யானா குப்தாவைப் பார்க்கும் பொழுது கண்கள் பற்றிக் கொள்வது போலிருந்தது.

✍ ச.நா.

## 'கன்னான்' அதிர்ச்சி!

**ஒ**ரு படத்தின் வெற்றியை நிர்ணயிப்பது ரசிகர்கள். ஆனால் [illegible] வருவதற்கு முன்பே ஏகத்திற்கு மார்தட்டிக் கொண்ட 'கன்னான்', நாளுக்கு நாள் அதிர்ச்சிகரமான தகவல்களைத் தந்து கொண்டிருக்கிறது. 'ஹாட்கேக்' என்று வர்ணிக்கப்பட்ட தனுஷுக்கு, தொடரும் சறுக்கலாக அமைந்திருக்கிறது 'கன்னான்'. B&Cயில் வசூல் பரவாயில்லை. ஆனால் சிட்டியில் தான் [illegible] கவலையைத் தருகிறது என்று, பூனிட்டிலிருந்து கவலை தெரிவிக்கிறார்கள். இருக்கும் படங்களையெல்லாம் ஓரங்கட்டிவிட்டு, கடைசியாக வந்த 'கன்னான்'னுக்கு தனுஷ் முக்கியத்துவம் தந்தது, தற்பொழுது அடுத்து வரும் படங்களுக்குப் பேரிடியை தந்துள்ளது.

(இயக்குனர் ரமணாவிற்கு சிறிய வேண்டுகோள்: அதிகம் தம்பட்டம் அடித்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் நிறைகுடம் என்றால் தளும்பக் கூடாது அல்லவா?)

✍ எழில்

## வரி விளம்பரம்

**ஜோதிடம்**

ஜாதகம் கணிக்க, முகூர்த்தம் பார்க்க, கல்யாணப் பொருத்தம் நிர்ணயிக்க, ப்ரச்னம் சொல்ல, பொதுப்பலன் அறிய, யோக காலம் தெரிந்து கொள்ள, வார நாட்களில் மட்டும் பகல் 10 முதல் 1 மணி வரை அணுகவும்.

**கோமாண்டூர் ஸ்ரீநிவாசன், அஸ்ட்ரோ ஸ்கோயர், சாஸ்திரி நகர் முதல் மெயின் ரோடு, (வாட்டர் டேங்க் எதிரில், முதல் மாடி), அடையார், சென்னை - 20. தொலைபேசி : 24469160.**

**கண்காட்சி - விற்பனை**

வீட்டிற்கு தேவையான அனைத்து பொருட்கள், கைவினை பொருட்கள், அழகு சாதனங்கள், ஆபரணங்களின் மாபெரும் கண்காட்சி ஆகஸ்டு 6, 7, 8 தேதிகளில். இடம் : ஷோபனா கல்யாண மண்டபம், ஆர்ய கௌடா ரோடு, மேற்கு மாம்பலம். *Conducted by Ladies Special Magazine, Geetham Handicrafts, 9840297383.*

# மின்சாரக் கவலை!





**பூ**ச்சாண்டி காட்டி குழந்தைகளை பயமுறுத்துவது போல, 'தனியாரிடம் பிடித்துக் கொடுத்துவிடுவோம்' என்று சொல்லி தமிழக அரசு தங்களைப் பயமுறுத்தி வருவதாகக் குறைபட்டுக் கொள்கிறார்கள் மின்சார ஊழியர்கள்.

"மின்சார வாரியம் பொதுத் துறையா இருந்தாத்தான் எல்லோருக்கும் நல்லது. தனியார் நிறுவனங்களுக்கு அதை விட்டுக் கொடுக்கக் கூடாது. ஏன்னா இலாபம்தான் அவங்களுக்கு முக்கியம். கண்டபடி மின்சாரக் கட்டணத்தை அவங்க ஏத்திட்டாங்கன்னா, அதனால பாதிக்கப்படப் போறது பொது மக்கள்தான்" என்று வருத்தப்படுகிறார், இதன் மாநிலத் துணைத் தலைவர் அருணாச்சலம்.

இது தொடர்பான பல் வேறு முக்கியக் கோரிக்கைகளை முன்னிறுத்தி சென்னை மைய வட்டம் தமிழ்நாடு மின்சார தொழிலாளர் சம்மேளனம், சென்ற வாரம் ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கிறது.

மின்சார உற்பத்தியைப் பொறுத்தவரை தனியார் அமைப்புகள் எப்பொழுதோ பொதுத் துறையுடன் கைகோத்துக் கொண்டு விட்டது. தற்பொழுது எஞ்சியிருப்பது மின்சாரப் பகிர்வு மட்டுமே. இதையும் தனியாரிடம் விட்டு விடுவதா என்பதே இவர்களது கவலை.

இந்தக் கவலை நியாயமானது தானா? தனியார் நிறுவனங்களின் வருகையால், மின்சாரத் துறையும் பொது மக்களும் பாதிப்படைவார்களா? இதுகுறித்து CAG எனும் நுகர்வோர் நல அமைப்பில், சீனியர் கோ-ஆர்டினேட்டராகப் பணிபுரியும் பரத் நம்மிடம் பேசினார்.

"டெலிகாம் துறையில தனியார் நிறுவனங்கள் நுழையும் போது இதுபோன்ற கவலைகள் இருந்தன. ஆனா இன்னிக்குப் பார்த்தீங்கன்னா, டெலிகாம் சிறந்த முறையில வளர்ச்சி யடைஞ்சிருக்கு. எல்லோரும் போட்டி போட்டு நல்ல சர்வீஸ் கொடுத்திட்டிருக்காங்க. அதுபோல மின்சாரத் துறையில பிரைவேட் பிளேயர்களை அனுமதிக்கறது மூலமா நல்ல மாறுதல்கள் ஏற்பட கட்டாயம் வாய்ப்புகள் இருக்கு.

தற்பொழுது TNEB மூலம் குறைவான வருமானம்தான் அரசுக்கு கிடைத்துக் கொண்டிருக்கிறது என்பதே உண்மை. இதனை மனதில் கொண்டு ட்ரான்ஸ்மிஷன், டிஸ்ட்ரிபியூஷன் போன்ற சில பொறுப்புகளைப் பிரித்து அளிப்பதற்கான முயற்சிகளை, அரசு மேற்கொண்டு வருகிறது.

ஆனால் இவை தனியார் நிறுவனங்களுக்குத்தான் போய்ச் சேரும் என்று குறிப்பாக இதுவரை எதுவும் சொல்லப்படவில்லை" என்கிறார் பரத்.

தனியார் துறையை பொறுத்தவரையில், அனைவரையும் கவரும் வகையில் சில மாற்றங்களை அவர்கள் கொண்டு வருவார்கள் என்று நம்பலாம். அதே சமயம் மின்சாரக் கட்டணமும் உயர்வதற்



• பரத்

கான சாத்தியக்கூறுகளும் இருக்கின்றன.

பொதுவாக, தனியார் - பொதுத் துறை இரண்டுக்குமிடையில், ஆரோக்கியமான போட்டி மனப்பான்மை நிலவினால், அதன் மூலம் பயன் பெறுவது பொதுமக்கள்தான். இதனை மனதில் கொண்டு, விரிவான ஆய்வொன்றை அரசு நடத்தி அதன் மூலம் இந்தப் பிரச்னைக்கான தீர்வைக் காண்பதுதான் சிறந்த வழி.

மருதன்

## பசி தீர்க்கும் பிள்ளையார்!

**லை**ப்ரரிக்குப் போய் விதவிதமான புத்தகங்களைப் படிக்க ஆசை வாத்தான் இருக்கு. ஆனா அதுக்கு மெம்பர் ஷிப் கட்டணமா, சில நூறுகளைச் செலவிடணும் - அட்ரஸ் ப்ரூஃப் தரணும்- கெஜட்டட் ஆபீஸரிடம் கையெழுத்து வாங்கணும்னு ஏகப்பட்ட அலைச்சல், என அலுகாப்பவரா நீங்கள்? அதுவும் அடையாறு, சாஸ்திரி நகர், இந்திரா நகர், காந்தி நகர், கஸ்தூரிபாய் நகர், பெசன்ட் நகர், திருவான்மியூர் பகுதிகளைச் சுற்றி வசிப்பவராக இருந்தால், இனி கவலையே வேண்டாம். பெசன்ட் நகர் ஸ்ரீவரசித்தி விநாயகர் கோவில் நிர்வாகம், பல்வேறு துறைகளைச் சார்ந்த சுமார் ஆறாயிரம் புத்தகங்களை உள்ளடக்கிய நூலகம் ஒன்றை உருவாக்கியுள்ளது. உறுப்பினராக எவ்விதக் கெடுபிடியும் கிடையாது. இளைஞர்களை கவரும் வண்ணம் கணிப்பொறி தொடர்பான புத்தகங்களும், குழந்தைகளுக்காக பஞ்சதந்திரக் கதைகள் போன்ற புத்தகங்களும் இடம்பெற்றுள்ளன. அறிவுப்பசி ஜாஸ்தியாயிடுச்சா, உடனே, 29C, 5E, 47A, 23 C ஏதாவது கண்ணுல மாட்டும். ஏறுங்க. லைப்ரரிக்குப் போயி பசிய தீர்த்துட்டு வாங்க!

கலை





- ✉ 'ஃப்ரெண்ட்ஷிப் டே'வுல் அனுஷா எழுதிய நட்பு கடலில் சோக ராகம் பாதிரியா?

- அனுத்தமா, திருவல்லிக்கேணி

✉ டாபி மோகன் பற்றிய தொகுப்பு நன்றாக இருந்தது. 'யந்திரங்கள் வேண்டாமே ப்ளீஸ்'. 'நச்' அட்வைஸ்.

- ரகுராம், தேனாம்பேட்டை

✉ தெருவில் எறிந்திடும் 'டயர்' புகையை தொடர்ந்து சுவாசிக்கும் மனித இனத்துக்கே உடம்பும் 'டயர்' (களைப்பு) ஆகிடும் என்கிற செய்தி கவனிக்கப்பட வேண்டியது.

- சிவகாமசுந்தரி, வியாசர் நகர்

✉ உங்கள் கருத்துக்களை chennaiscan@kalkiweekly.comல் மெயிலுங்கள்.



# விளையாட்டு விளையாகிறது!

இதோ, அடுத்த வாரம் ஒலிம்பிக்ஸ் தொடங்கப் போகிறது. இதில் இந்தியா எத்தனை மெடல்கள் வாங்கப் போகிறது என்பதற்கும், பதிலாக யார் அந்த ஒற்றை மெடலையாவது கொண்டுவரப் போகிறார் என்ற ஆதங்கம் கலந்த ஆவல் தான் மிஞ்சுகிறது. சரி நமக்கேன் இந்த நிலைமை? தமிழ்நாட்டில் கிரிக்கெட்டைத் தவிர, மற்ற விளையாட்டுகளுக்கு அரசின் அக்கறை எப்படி என்று சில விளையாட்டு வீரர்களிடமிருந்து நமக்கு கிடைத்த மனக் குமுறல்கள்.

தமிழ்நாட்டில் மட்டுமல்ல இந்தியா முழுக்க மற்ற விளையாட்டுக்கள் முன்னேறாமல் போனதற்குக் காரணம், கிரிக்கெட் தான். 83ல் இந்தியா உலக கோப்பையைத் தட்டிய பிறகு நாட்டில் எழுந்த எழுச்சி, அப்படியே திறமையான வீரர்கள் கிரிக்கெட் பக்கம் திரும்பிவிட்டது. இதனால எழுந்த சாபத்தினாலேயே கிரிக்கெட்டிலும் அதற்குப் பிறகு உலகக் கோப்பை நமக்கு கிடைக்கவேயில்லை. ஹாக்கியில் தன்ராஜ், அத்லெடிக்ஸில் பி.டி. உஷா, டென்னிஸில் பெயஸ் என உதாரணங்கள் மிகக் குறைவே. இதனால் மனதளவில் உற்சாகம் பிறப்பதில்லை.

மீடியாவின் பாராமுகமும் ஒரு காரணம். தூர்தர்ஷன் கடமைக்கென்று போட்டிகளை ஒளிபரப்புவதால், மக்களும் டி.வி.யில் கிரிக்கெட்டைத் தவிர மற்ற விளையாட்டு நிகழ்ச்சிகளைப் பார்ப்பதில்லை. வெளிச்சம் கிடைக்காமல் வருந்தி, உழைத்து என்ன பயன்!

அரசுகளின் அலட்சியமும், அட்டூழியங்களும், எத்தனையோ இளம் வீரர்களின் வாழ்க்கையை திசை திருப்பியுள்ளது. உதாரணமாக அஞ்சு ஜார்ஜுக்கு 50 லட்சம் கொட்டிக் கொடுத்த தமிழக அரசு, உலக அளவில் சாதித்த மற்ற வீரர்களை கண்டு கொள்ளாமல் போனதும் ஒரு காரணம்.

யாருக்கும் சரியான ஸ்பான்சர் கிடைக்காததும், ஒரு காரணம் ஆனாலும் அவர்கள் மீதும் தவறில்லை. அரசுக்கே ஆர்வம் இல்லாதபோது அவர்கள் மட்டும் என்ன செய்வார்கள். தற்பொழுது தான் சதர்ன் ரயில்வேயிலும் காவல் துறைகளிலும் விளையாட்டு வீரர்களுக்கு அதிக அளவில் வேலை வாய்ப்புகள் கிடைக்கின்றன. இதற்கு முன்பு இந்த உதவியும் கிடைக்காத வீரர்களின் நிலைமையை எண்ணிப் பாருங்கள்.

வருமானத்திற்கு எந்தவொரு உத்திரவாதமும் இல்லாததால், வீட்டிலிருந்து போடப்படும் முட்டுக்கட்டைகள்! நல்ல அப்பா அம்மா கிடைக்காவிட்டால் எவர் திறமையும் அப்படியே மண்ணில் மக்கிப் போய்விட வேண்டியது தான்.

படிப்பா விளையாட்டா என்று நடுவில் தடுமாறி, இறுதியில் பாதுகாப்பாக விளையாட்டை உதறி, படிப்பைத் தொடர்ந்ததினால் இந்தியா இழந்த பி.டி. உஷாக்களும், மிகாண்டர் பெயஸ்களும் எத்தனை எத்தனையோ!

✍ ச.ந. கண்ணன்

## சென்னையில் இந்த வாரம் -

- இந்த மாதம் முதல் தேதியிலிருந்து 10ம் தேதி வரை ஆழ்வார்பேட்டை மியூசிக் அகாடமி வளாகத்தில் ஓவிய, சிற்பக் கண்காட்சி நடைபெறுகிறது.
  நேரம்: காலை 11 மணி முதல் 7 மணி வரை.
- ஆகஸ்ட் 4 முதல் 6ம் தேதி வரை ஆழ்வார்பேட்டை மியூசிக் அகாடமி - மினி ஆடிட்டோரியத்தில் பாரதியார், ஜெயகாந்தன், அசோகமித்ரன் ஆகியோரைப் பற்றிய திரைப்பட விழா நடைபெறுகிறது.
  நேரம்: மாலை 6.30 மணி.
- ஆகஸ்ட் 6 முதல் 8ம் தேதி வரை மேற்கு மாம்பலம் ஆர்ய கௌடா சாலை ஷோபனா கல்யாண மண்டபத்தில் வீட்டு உபயோகப் பொருள்கள் கண்காட்சி விற்பனை நடைபெறுகிறது.
  நேரம்: காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை.

# ஹைடெக் அட்டகாசம்!

சென்னை ட்ரேட் சென்டரில், 'இமேஜ் டுடே 2004' கண்காட்சியில், ஊரிலுள்ள அனைத்து ஹைடெக் சமாச்சாரங்களையும் அள்ளி எடுத்து வந்து காட்சிக்கு வைத்திருந்தார்கள். எல்லாமே கலர்ஃபுல் காட்சிகள். இப்போது மார்க்கெட்டில் எது லேட்டஸ்ட்? எந்தெந்தத் துறைகள் எவ்வாறு வளர்ச்சியடைந்திருக்கின்றன என்பதை, இந்தக் கண்காட்சியின் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

விஷுவல் இமேஜிங், ஃபோட்டோ இமேஜிங், டிஜிடல் இமேஜிங் போன்ற துறைகளைச் சார்ந்த ஹார்டுவேர் மற்றும் சாஃப்ட்வேர் பொருள்கள் சமர்த்தாக ஆஜராகியிருந்தன. (ஆமா - இதுக்கெல்லாம் தமிழ்ல என்னங்க பேரு?)

உள்நாட்டோடு சேர்ந்து பல வெளிநாட்டு நிறுவனங்களும் எப்படியோ இடம் ஒதுக்கீடு பெற்று, போட்டி போட்டுக் கொண்டு மார்க்கெட்டிங் செய்து அசத்திக் கொண்டிருந்தார்கள்.

'விண்டோ ஷாப்பிங்' பொது மக்களை விட, அந்தந்தத் துறை சார்ந்த நிறுவனங்களுக்கு இக் கண்காட்சி அதிக பயனுள்ளதாக அமைந்திருக்கிறது.

📷 முத்து ✍ மருதன்



## உச்சாணி

• (ஆபரேஷன் ஹாலில்) "டாக்டர் என்னை நீங்க காப்பாத்திட்டா, உங்களைக் கடவுளா கும்பிடுவேன்."

"கவலைப்படாதே. அப்படி இல்லாட்டி நான் உன்னைக் கடவுளா கும்பிட்டுக்கறேன்!"

"பாருடி, என் மாமியார் அல்வா செஞ்சு கொடுடின்னு நச்சரிக்கறாங்க."

"பாவம், செஞ்சு கொடுத்திடேன், அதுக்கப்புறம் அவங்க வாயைத் திறக்கவா போறாங்க!"

## காமெடி டாக்டர் அம்ருதா M.B.B.S

ஹியூமர் கிளப்பின் ஆண்டு விழாவிற்கு வந்திருந்த ஆயிரத்திற்கும் மேற்பட்ட ரசிகர்களால் நாரத கான சபா நிறைந்து கொண்டிருந்தது. மேடையில் எஸ்.வி. சேகர், கு. ஞானசம்பந்தன், ரேவதி சங்கரன், தென்கச்சி போன்ற பிரபலங்கள் வீற்றிருக்க, ஆறாவது படிக்கும் அம்ருதா விடுவிடுவென மேடையேறி தன் வயதிற்குரிய கொஞ்சும் மொழியில் அடுத்த ஜோக்குகள்தான் இவை. ஜோக்குகள் தொடரத் தொடர அரங்கமே சிரிப்பாலும் கைத்தட்டலாலும் அதிர்ந்தது. அங்கு சிறந்த குழந்தை நகைச்சுவையாளராக தேர்ந்தெடுக்கப்பட்டார் அம்ருதா.

வாழ்த்துச் சொல்ல இவரது வீட்டுக்குச் சென்றோம். கர்நாடிக் பாட்டு, நடனம், ட்ராயிங் என பிற கலைகளிலும் அம்ருதா கட்டிகாரம். வீட்டின் ஒவ்வொரு அறைகளின் சுவரிலும் இவர் வரைந்த சித்திர ஓவியங்கள் ப்ரேம் பண்ணி மாட்டப்பட்டுள்ளன. How sweet!

"தாத்தாதான் எனக்கு ஜோக்ஸ் எல்லாம் சொல்லித் தருவார். கூடவே நானும் சில பன்ச் வரிகளை சேர்த்துக்குவேன். அன்னைக்கு மேடைக்கு முன்னாலே நிறைய பேர் இருந்தாலும், என் கண் முன்னால ஒரேயொருவர், அவரும் எனக்குத் தெரிந்தவர் என்று நினைத்துக் கொண்டேன். பயம் ஓடிப் போச்சு" என்று தனது சீக்ரட் ஆஃப் சக்ஸஸை விவரிக்கிறார்.

வருங்காலக் கனவு டாக்டராகணுமாம். "இது ஜோக் இல்லை அங்கிள். சீரியஸ்" என்கிறார். அடடா, ஊசி வேண்டாம், மருந்து வேண்டாம், அம்ருதா அடிக்கும் ஜோக்கிலேயே நோயாளிக்கு பாதி நோய் குணமாகி விடுமே!



(வருகிற 8-ம் தேதி மாலை மைலாப்பூர் சாவித்ரி ஹாலில் அம்ருதா ஜோக்கடிக்கவிருக்கிறார். நல்லா சிரிச்சு அப்படியே வாழ்த்திட்டு வரலாமே!)

✍ எழில்



## போஸ்ட் கார்டு POLL



மின்சார வாரியம் தனியார் மயமானால்

- வரவேற்கலாம்
- வேண்டாம்! பிரச்னைகள்தான்
- எந்தவித மாற்றமும் ஏற்படாது

இந்த மூணுல உங்க சாய்ஸை போஸ்ட் கார்டுல அல்லது ஈ-மெயில்ல தட்டி விடுங்க.. ரிசல்ட் அடுத்த வாரம்.

### சென்ற வார Poll ரிசல்ட்

பள்ளிக் கூடங்களில் கீற்றுக் கொட்டகைக்குப் பதிலாக ஆஸ்பெஸ்டாஸ் ஷீட்

2%

சரியான மாற்று

55%

ஐயோ! சூடு தாங்க முடியாது

43%

தற்காலிகமா O.K.

முகவரி : போஸ்ட் கார்ட் Poll,
சென்னை ஸ்கேன்,
47-NP, ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல்,
சென்னை - 600 097
Email :
chennaiscan@kalkiweekly.com

📷 இரா. சண்முகசுந்தரம்







படித்துப்பார் என்று சொல்லி, நீ கொடுத்த உன்னுடைய கவிதைகள் அனைத்தும் அருமை. எல்லோரையும் போல காதலைப் பற்றி அதிகம் எழுதியிருக்கிறாய். ஆனால், எல்லோரையும் போல் இல்லாமல், மிக அழகாய்! அது சரி. அந்த 'மஞ்சள் சுடிதார்', 'இளமஞ்சள் இசை' இதெல்லாம் யார்? நானா? அடப்பாவி!

உண்மையில் எனக்கு மஞ்சள் நிறத்தில் அதிக ஆர்வம் கிடையாது. அதனாலென்ன? கவிதைகள் கூடத்தான் எனக்குப் பிடிக்காமலிருந்தன. உன்னைப் பார்க்கும் வரை. இனி, இரண்டையும் நான் அதிகமாய் விரும்பப் போகிறேன்.

- ஸ்ருதி, கொரட்டூர்.

(வாசகர்களின் காதலிஸங்கள் வரவேற்கப்படுகின்றன)





Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05" Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 "
Registered as a Newspaper in Sri Lanka Supplement to the Kalki issue Dated 8.8.2004

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka

# ஆடிக் காத்து! அதிர்ஷ்டக் காத்து!!






பட்டுப்புடவைகள் | பேன்ஸி சேலைகள்
சர்ட்டிங் | சூட்டிங் | ரெடிமேட்ஸ்
டிரெஸ் மெட்டீரியல்ஸ் | மேட்சிங் ரகங்கள்
கைத்தறி | ஃபர்னிஷிங்



## தி சென்னை சில்க்ஸ்™

தமிழகத்தின் மாபெரும் ஜவுளி சாம்ராஜ்யம்

23, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை - 17 . ✆: 24310888

558 - 560, ஒப்பணக்கார வீதி, கோயமுத்தூர் - 1. ✆: 2391555
74, புது மார்க்கெட் வீதி, திருப்பூர் - 4. ✆: 2242888
85-A, R.K.V. ரோடு, ஈரோடு - 1. ✆: 2213270






Shop online at www.thechennaisilks.com